கடவுள் துணை.

பேரறிவானந்தப்பேரொளியாகிய

# ஞானானந்தவிளக்க

இஃது
தொண்டமண்டலந்துளுவவேளாளமரபிலுதித்த
செங்கற்பட்டு
நாராயணசாமி முதலியாரவர்களால்
இயற்றப்பட்டது.

# NANANANTHA VILAKKAM

## (*WISDOM OF BLISS.*)

**(*Exposition of the Highest Consciousness and the Highest Bliss.*)**

PUBLISHED BY
C. NARAINASAWMY MUDALIAR,
*Chingleput.*

Madras:
PRINTED AT THE VAIJAYANTI PRESS,
*32, Mount Road.*

1911.

# PREFACE.

I have already published in the Tamil Language in poetry and in prose, the works, called "EKKALAKKAM" and "OONMAIPPORULVILAKKAM" which treat of matters relating to Védanta, Sithàntha, Sithergnàna. Advaita and Advaita Sutha Védanta, I now venture to put before the Tamil knowing public this work called "GNANANANTHA VILAKKAM" which deals with the aquisition of Highest knowledge and Highest Bliss. If this or any of my publications in any way help to lead the reader to pursue spiritual life knowing its utility and importance. I shall deem my best wishes amply fulfilled.

It is a certain fact that no work, of this kind containing all Religions, the Religious truths, the Highest wisdom, and the Highest Bliss, has been ever published.

---

**Definition of GNANANANTHA VILLAKKAM.**

**Gnanam** is the Highest knowledge or Consciousness.

**Anantha** is the Highest Bliss or the real happiness. swarupa of self is Anantha or Bliss. The term happiness should not be confounded with pleasure which is only restlessness of human mind. **Vilakkam** is the Exposition. or Explanation.

Gnanam *(wisdom)* alone is said to be the real cause for Mukti Karmas *(actions)* are said to be the mere source to obtain Mukti through Gnana.

With my best wishes to the readers,

I remain,

C. NARAINASAWMY MUDALIAR,

*(Author.)*

# OPINIONS.

From

R. Ry., R. K. NARAYANIAH,

*Head Clerk, Sub-Collectors Office, Chingleput.*

I have known the author as a public servant in responsible positions and I know from personal knowledge of his devotion to duty. He used to be very active in that sphere and put his whole heart and soul in the management of the affairs of a big Estate under his charge. Having served the estate and his country faithfully for years, he has retired from worldly life and has since devoted all his energies to the study of things unseen. In these days of Materialism and aimless aspirations of young men, the volume of Hindu Philosophy and religion which he has brought out in Tamil is an invaluable help to searchers after Truth. We have numerous publications in English on Hindu religion and thought; but the Mudaliars ("OONMAIPPORUL VILAKKAM") "உண்மைப்பொருள் விளக்கம்" not only elucidates the dark points in the Hindu system in the vernacular but is a very useful hand-book to be put in the hands of our women who are sadly wanting in a rational knowledge of the religion which they now follow blindly. If the women of this country are instructed in the truth of our religion which is the most ancient and most comprehensive, they will be weaned from superstitions and when they understand the reason why of every religious act in their daily lives, they are sure to influence their husbands and sons who are often unable in the midst of their worldly career to give any attention to the duties of religion.

The author has in he press another invalu^ble manual nd the proof show that t will serve its purpose more ointedly and efficaciously than its predecessor. It is my arnest wish that these books may be in the hands of the nembers of every Hindu family and I doubt not that they ill be productive of much upheaval and enlightenment.

---

*Chingleput,*
25-2-10

From
M. R. Ry, A. KRISHNAMA CHARIAR AVL, I T S,
*Pleader, Chingleput*

The book called ("GNANANANTHA VILAKKAM.") "ஞானானந்த விளக்கம்" or the exposition of the Highest Consciousness and the Highest Bliss which are the aim nd end of every human being to attain, is a work of univer-al interest embodying as it does the various aspects of hilosophic thought that ever floated in the Indian tmosphere

The serious care and the high learning as reflected in his work following as it does another work called "(UNMAIPPORUL VILAKKAM") "உண்மைப் பொருள் விளக்கம்" or the exposition of the eternal truth underlying all phenomena published by the same author, go to add onsiderably to his already high reputation as an author.

It is hoped that this book will not fail to demonstrate ts usefulness as a Multum in Parvo of the varied systems of the Indian philosophic thought brought down to the evel of the ordinary understanding in an easily compre-hensible simple style in the Tamil language.

From

M. R. Ry., T. N. SIVASUBRAMANIA THEVERT
*Zemindar of Singa*
*Lakshmi Vilasam Palace, Singampatti,*
*8th*

Dear sir,

It was with great pleasure I received your valuable book ( OONMAIPPORUL VILAKKAM ) "உண்மைப் பொருள் விளக்கம்" you so kind sent to me by V. P. Post. I thank you very much for it. I wish you for a wise and heavy mind in a sound body for the benefit of theistic mankind.

To

M. R. Ry., C. NARAINASAW

---

From

M. R. Ry., PANDIT B. SIVASANK
*Tiruvettanathapuram, Madras*

அறிவினும் வயதினுமூத்த எனது நண் யணசாமிமுதலியா ரவர்கள் எழுதி வெளியிடு க்க" மென்ற நூலில் சிலபாகம் படித்தேன், அஃது, அறிவு நூலுண ர்ச்சி வேண்டுவோர்க்குப் பெரிதும் பயன்படுமென்பதை, ஆங்கிலத் தில் இருபெரியோர் கொடுத்த அபிப்பிராயங்களே, உறுதிப்படுத்து கின்றன. இந்நூலாசிரியர் இதற்குமுன் வெளியிட்ட "உண்மைப் பொருள் விளக்கத்தை" மஹாமஹோபாத்தி யாதையர் அவர்களும், அஷ்டாவதானம் ம-ா- ந்தரமுதலியாரவர்களும், மற்றுஞ்சில அறி டுச் சிறப்பித்திருத்தலின், இவ்வாக்கியோனை தல் வேண்டுவதில்லை.

---

From

M. R. Ry., Mahamahopadiyaya
V. SAWMINATHA AIYAR AVERGAL,
*Tamil Pandit, Presidency College, Madras.*

செங்கற்பட்டு ம-ா-ா ஸ்ரீ நாராயணசாமிமுதலியாரவர்கள் இயற்றிப் பதிப்பித்து வெளிப்படுத்திய "உண்மைப்பொருள் விளக்கம்" என்னும் புத்தகத்திற் சிலபாகத்தைப் படித்துப் பார்த்தேன். மேற்படி புத்தகத்தில் அரிய விஷயங்கள் பலவற்றை வகைப்படுத்தி தேவாரம் முதலியவற்றிலிருந்தும் வேறுள்ள பலசாஸ்திரங்களிலிருந்தும், எடுத்த மேற்கோள்களால் அவ்விஷயங்களை விளக்கி எழுதியிருத்தல் மிகவும் மகிழ்ச்சியை விளைவிக்கின்றது.

உத்தியோகத்திலிருந்து பலவருடங்களைக் கழித்த மேற்படி முதலியாரவர்கள் தம்முடைய முதுமைப்பருவத்தில் அறியநூல்களையே ஆராய்ச்சிசெய்து தாம்அறிந்த அரியவிஷயங்களை மற்றவர்களுக்கும் பயன்படுத்த நினைந்து உழைத்து எழுதி இந்நூலை வெளிப்படுத்தியது மிகப் பாராட்டற்பாலது.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்துவானும்
சித்தாந்தசரபம் அஷ்டாவதானம்
ம-ா-ா-ஸ்ரீ,

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய

## சாத்துக்கவி.

அவ்வச்சம யத்தினர்சாத் திரங்களினை நனிசூழ்ந்தங்
கவற்றின் வாய்மை
செவ்வையுறத் தெளிவித்துப் பேதாபேதப் பொருளுண்மை
தேரா யாரு
மெவ்வியநூ லாகவுண்மைப் பொருள்விளக்கம் புவியியக்க
வுரைத்தான் ஞானத்
திவ்வியருண முயர்செங்கை நகர்நாரா யணசாமிச்
சீமான் றானே.

---

ஆக அம்சங்கள் - 2[illegible]9.

---

முற்றிற்று.

# முகவுரை.



சற்குருகடாக்ஷம், பெரியோரநுக்கிரகம், பக்திமார்க்க ஞான மார்க்கங்களனுசரிப்பு, அரிய வேத, வேதாகம, வேதாந்த, சித்தாந்த, அத்வைத, சித்தர் ஞான, சாஸ்திராதி நூல்களாராய்வு முதலிய வைகளா னுதித்த, நுண்ணுணர்வினால், வேதாந்த சித்தாந்த முதலிய மார்க்கநிலைமைகள், சமயக் கோட்பாடுகள், பொருளாகிய அரியவிஷயங்கள், சித்திமுத்திக்குரிய வாய்மைகளாகிய விவை யெல்லாமடங்கும் "உண்மைப்பொருள்விளக்கம்" "ஏக்காலக் கண்ணி" என்னு நூல்கள் முன்னமியற்றினேன். இப்பொழுது உலகருக்கு பொதுவென்னும், வேதங்கள்கூறும், சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தமெனனு மிலக்கணமே வடிவாயுள்ள, பரவஸ்து வொன்றேஎன்னும், நித்திய நிர்மலப்பிரமப்பொருள், சுத்த பிரமம், பரப்பிரமம், சத்து, சித்து, ஆனந்தம், சச்சிதானந்தம், ஜீவபர ஐக்கியம், வேதவாக்கிய வுபதேசம், வுரைகள், சிரவண, மனன, நிதித்தியாசனங்கள், பிரமகைவல்லிய சமாதியடைதற்குரிய, சாதன சதுட்டயங்கள், பந்தமுத்தி விவகாரமுதலிய யாவையும்; வேதாகமங்கள் கூறுமதென்னும் பதி, பசு, பாச மார்க்கவுண்மைகள், சிவம், சத்தி, சிவசத்தி சிருட்டிகள், சிவஞானம் பரஞானங்கள், சிவோகம் பாவனைமுதலிய யாவையும்; வைணவாகமங்கள் கூறும், சித்து, அசித்து, ஈஸ்வரவுண்மை முதலியவைகளையும்; ஏனைய சமயங்கள் கொண்டாடுந் தெய்வங்கள், கொள்ளுந் தத்துவமுதலியவைகளையும்; பரம், பரன், பரை, பரகுடிலை, முதலியவைகளையும்; ஓம் என்னும் பிரணவம், தேவதாக்ஷரம், பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரமாகிய மகாமந்திரங்களாவைகளின் மகிமைகளையும்; தீக்ஷை, யஞ்ஞ, தான, தபோ, தியானாதிகள், கன்மங்கள், நல்வினை தீவினைகள், கருவிலமைப்பு, முதலியவைகளையும்; மாயை மாயையினிலக்கணங்கள், தனுகரண புவனபோகங்கள், பதவிகள், மூலப்பிரகிருதி, முக்குணங்கள், தத்துவதாத்வீகங்கள், தேகதத்துவங்கள், தூல, சூக்கும, காரண, மகாகாரண தேகவிவரங்கள், தத்துவஞானம், தத்துவநியதி முதலியவைகளையும்; அறிவு, அறிவினுண்மைகள், புத்தி, நினைவு, அநுபவம், பிரமை, பிரமம், பர, அபரஞானங்களையும்; ஞான, அஞ்ஞானபூமிகளையும்; அவித்தை, அவித்தாநாச தந்திரங்கள், வாதனைவிருத்திகடக்கற்கும், சஙக நீங்கற்கு முபாயங்கள், நிட்டைகள், ஞானோபதேசங்கள், ஞானயோகம், கன்மயோக முதலியவைகளையும்; அஷ்டவித ஆனந்தங்களையும்; அட்சரக்கிரம அகராதியில்விவரித்த யெல்லாஅம்சங்களையும்; தன்னைத் தரிசித்துத் தானேதானாய் விளங்கி

[illegible] [illegible]; [illegible]சனம், பதிதரிசனம், தற்சொரூப [illegible]. [illegible] [illegible] விளக்கி, விளக்கும் போதிலா [illegible] [illegible] "ஞானாந்த விளக்கம்" என்னு [illegible] [illegible] [illegible]. [illegible]பகாரார்த்த மெவரு மெளிதிலுணர, [illegible]. உதாரணப் பிரமாண நிச்சயங்களுடனியற்றிப் [illegible] வெளியிடத் துணிந்தேன்.

ஞானானந்தவிளக்கமென்பதற்குப்பொருள் வருவனவற்றாற்காண்க.
[illegible]

[illegible] அம்சங்களையும் ஓர்முகமாக மேற்கோள்களுடன் விளக்கற்பாலதாகிய இவ்விதநூல், இதுவரையிலொன்றும், வெளியாயிருக்கவில்லை யென்பது திண்ணம். நூற்பயிர்ச்சியில், ஞானனந்தாநுபவத்துக்குறாய, நன்னூலாகவே அறியப்படும். இதின்கண்மீதனும் பிழையுளதேல், பொறுப்பது பெரியோர்களின் கடமையே

இங்ஙனம்

தொண்டமண்டலத் திருவவேளாள மரபிலுதித்தவரும்,
உத்தியோகத்திலிருந்து பலவருடங்களைக் கழித்தவரும்,
உண்மைப்பொருள்விளக்கம், எக்காலக்கண்ணி, யென்னு
நூல்களுக்கும் இந்நூலுக்கும் ஆசிரியருமாகிய

ஸ்ரீ செங்கற்பட்டு-நாராயணசாமி முதலியார்,
நூலாசிரியர்.

---

இப்புத்தகமும், முன்வெளியிட்ட உண்மைப்பொருள்விளக்கம், எக்காலக்கண்ணியென்னும் புத்தகங்களும், அடியிற் கண்டவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம். இதன் விலை காலிகோபயிண்டு ரூ. 1–2–0. ஸ்டிப்பயிண்டு ரூ 1–0–0. மொத்தமாக 10 புத்தகம் வாங்குவோர்க்கு ஒன்று யினும். தபாற் செலவு நீக்கப்படாது. D. C. P. 190 பக்கமடங்கியது.

(பெறவேண்டிய இடம்.)

சென்னை புதுப்பாக்கம் பைகிராப்ட்டு ரோட்டு வடவண்டைபக்கம்
2 - வது சந்துவீதியில் 88 - வது நம்பர் கிரகத்தில்
சே. நாராயணசாமி முதலியார்.

ஷெயார் குமாரான் மதராஸ் ரெஸ்கிளப் எட்கிளர்க்கு
சே. ந. ஷண்முக முதலியார்.

மதராஸ் ஆர்பர் டிரஷ்ட்போர்ட்டு கிளர்க்காயிருந்த
சே. ந. நடேச முதலியார்.

# ஞானானந்தவிளக்கம்.

## இந்நூலிலடங்கியிருக்கும் அம்சங்களுக்கு

# அட்சரக்கிரம அகராதி.



கடவுள்துணை.

# ஞானானந்தவிளக்கம்.



ஞானானந்தவிளக்கமென்பதற்குப்பொருள்.

ஞானம் ஆனந்தமென்னும் பதங்களிரண்டும் ஞானானந்தமாயிற்று. ஞானமாவது பேரறிவு, ஆனந்தமாவது பேரின்பம், விளக்கமாவது ஒளிசெய்தல். இங்கு பேரின்பமுண்டாக்கற்கியைந்தது பேரறிவாகிய ஞானமாயும், அந்த ஞானத்தை விளக்கற்பாலது நூலாயுநிற்றலால் "ஞானானந்தவிளக்கம்" என்னு நாமமிந்நூல்பெற்றதெனப் பொருள்கொள்க.

எங்குந்தனித்திருத்தல் ஆன்மாவாதலால் ஆனந்தமாம். "எங்குமிருந்தபடி யிருப்பதியல்பே யென்னுமொருவேதம்" என்றிருப்பதையறிக. ஞானத்திற்கிடமாயுள்ளது ஆன்மா.

ஞானம் வீடுபேற்றிற்கு ஏது. கருமமனைத்தும் ஞானவாயிலாக வீடுபெற்றிற்குக்காரணமாவதல்லது நேரே காரணமன்றெனப்படும். ஞானத்தினலேயே முத்தியென்று வேதாகமபுராணாதிகளெல்லாங் கூறுவனவாம். "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணநல்ல வாகமஞ்சொல்ல" என்றும், "கிரியையென மருவுமவை யாவும்ஞானங் கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும்" என்றும் சொல்லப்பட்டிருப்பதையறிக. கருமமெல்லாம் அஞ்ஞானமான மாயாகாரியமெனவும், பந்தமெனவும், பந்தநீக்கமே முத்திநிலைகைகூட்டுமாகலான் ஞானமொன்றே முத்திக்குச்சிறந்தகாரணமெனவும் படும்.

காரணமாவது - காரியத்துக்கு நியதமாக முன்னிற்பது கர்த்தா, முதல், பலகாரணம். காரியமாவது - முன்னின்மைக்கெதிர்மறை. கருமமனைத்துங்காரியமாம். கருமம் - தொழில். அதாவது காரியவேறுபாடுகளாம். அவையாவன: எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தலென்பனவாம். எழும்பல் - மேலிடத்துக்கூடுதற்கேது, வீழ்தல் - கீழிடத்துக்கூடு

ற்கேது, வளைதல் - உடல்வளைந்துகூடுதற்சேது, நிமிர்தல் - மிர்ந்துகூடுதற்கேது, எனையனைத்தும் நடத்தலாம். இது ிருதிவி அப்பு தேயு வாயுவெனு நான்கினு மனத்தினும்பிருக் தமாம். பிருதிவி-மண், அப்பு நீர், தேயு-அக்னி, வாயு-காற்று.

## பதபபொருள்.

கடவுள் என்னும் பதமும், குரு, தெய்வம், நன்மை, முனிவன் என்பனவு மொருபொருட்கிளவி. கடவுளென்ப தற்கு - மனமொழிமெய்களுக்கு அபபாற்பட்டது என்பது பொருளாம். மன மொழி மெய்யென்னு மூன்று முறையே மனம் வாக்கு காயமெனபபடும்

ஒருபொருளுணர்த்தும் பலசொற்கள் ஒருபொருட்கிளவி யெனப்படும். சொற்கள் - பதங்கள்.

ஞானமென்னும்பதமும், அறிவு, உண்மை, உணர்வு, உள்ளம், ஒண்மை, ஒளிவு, கருத்து, சேதனம், சைதன்னியம், ஞாதுரு, ஞேயம், துப்பு, தெருட்சி, நினைப்பு, நினைவு, பிரகாசம், புத்தி, புந்தி, புலம், புலன், போறிவு, பொறி, போதம், மெய்யறிவு, மேதை, விட்சேபம், விவேகம் என்னும் பதங்களும் ஒருபொருட்கிளவி.

ஆனந்தமென்னும்பதமும், அகமகிழ்ச்சி, இனிமை, இன்பம், களிப்பு, சாரம், சுகம், சுவை, நயம், நலன், நன்னிலை, பரிவு, பேரின்பம், மகிழ்ச்சி என்னும்பதங்களும் ஒருபொருட்கிளவி.

விளக்கமென்னும்பதமும், இயங்குதல், ஒளிசெய்தல், துலங்கல், நிகழ்தல், பிரகாசித்தல், பிறழ்தல், மிளிர்செய்தல், மின்னல், வயங்கல், விளங்கல், விரிதல் என்னும்பதங்களு மொருபொருட்கிளவி.

வீடு என்னும்பதமும், கைவல்லியம், சித்தி, சிவம், நிருவாணம், நிலை, பேறு, பஞ்சமகதி, பரகதி, மீளாக்கதி, முத்தி, மோக்கம் என்னும்பதங்களு மொருபொருட்கிளவி.

காரணம்மென்னும்பதமும், ஆதிகாரணம், ஏது, திறம், நிதானம், நிலம், நிமித்தம், பொருட்டு, மூலம் என்பனவும் ஒருபொருட்கிளவி. காரியமென்னும்பதமும் தொழில், வினை, செயல், கருத்து, கருமம் என்பனவும் ஒருபொருட்கிளவி.

## கடவுள்வணக்கம்.

### அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

தானனந்த மாய்விளங்குந் தற்பரத்தின் றுளைத்தி [து
மோனனந்த முற்றுணர்ந்தோர் மொழிந்த நூலும் பலவாய்ந்
தேனனந்தம் போலெவரு மெளிதி னின்பஞ் சேர்ந்திலக
நானனந்த விளக்கமெனு நன்னூ லியற்றப் புகுந்தேனே.

முன்ன ருண்மைப் பொருள்விளக்க முரைத்தோ ரெமை யுணர்தற்கே, பின்ன ருரைத்தோ ரெக்காலக் கண்ணி பொதுவாய்ப் பேசற்கே, சொன்ன விந்நூல் ஞானனந்தச் சுகத்தைப் பெரிதுங் காட்டிடுமே, இன்னம் பலநூ லியற்று தற்கிங் கெண்ணம் பெரிது மிசைந்துளதே.

---

## நூலாசிரியர்பேரு மவையடக்கமும்.

வளமுறு செங்கற் பட்டில் வருநாராயண சாமித் தன்
னுளமகிழ் வாகச் சொன்ன வுயர்ஞான னந்த நன்னூல்
கிளர்பல நூல்க ளானுங் கேண்மைப ருதவி யானும்
விளம்பிய வகனன் மேலோர் விருப்பமாக் கொள்வர் மாதோ.

---

## தெய்வவணக்கம்.

அகண்டபரிபூரணமாயும், (அகண்டம் - எல்லாம், பரிபூர ணம் - நிரம்பியது) ஆதிமத்தியாந்தரகிதமாயும், (ஆதி - முதல், மத்தியம் - இடை, அந்தம் - கடை, ரகிதம் - இன்றி) சத்தியம் ஞானம் அனந்தம் ஆனந்தமாயும், சத்து சித்து ஆனந்தம் சச்சிதானந்தமாயும், சமயக் கோட்பாடுகளுக்கெல்லாந் தக்கமூர்த்தியு மின்ன மனந்தமூர்த்தியுமாயும், சின்மயமாயும், மௌனனந்தமாயும், தேசிகமூர்த்திவடிவாயும், தத்துவ மாயும், துரியதுரியாதீதமாயும், நித்யமாயும், நிட்களமாயும், நிராமயமாயும், நிர்க்குணமாயும், பஞ்சகிருத்யகர்த்தாவாயும், பரதத்துவமாயும், பரமாயும், பரமான்மாவாயும், பரப்பிரம மாயும், பலகுணபரியாயவிலக்குநாமங்களாற் கொண்டாடப்

படுவதாயும் விளங்கப்படாநின்ற நிர்மலப்பிரமப்பொருளொன்றே. அந்தப்பொருளையே சிந்தையிற்றுதியாநின்றேன்.

**பிரமம் - ஓம்** என்னும் உத்கிருஷ்டமான ஏகாக்ஷரம், பிரகிருதிசம்பந்தமில்லாத ஆத்மஸ்வரூபமென்றதெனப்படும். "ஓமித்யேகாக்ஷரம் பிரஹமம் அக்ஷரம் பிரஹம பிரஹமம்" என்று பகவத்கீதையிற்காண்க. பிரகிருதி, இயல்பு, பிரதானம் ஒருபொருட்கிளவி.

பிரமம் என்னும் பதமும், கடவுள், கலக்கம், தத்துவம், தவசு, நடு, மயக்கம், முத்தி, வேதம், பதினெண்புராணத்தொன்று, பதினெண் உபபுராணத்தொன்று என்பனவும் ஒருபொருளுணர்த்தும் பலசொற்களாம்.

### பிரமப்பொருள் விளங்கப்படுமென்பது.

சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தமெனு மிலக்கணவடிவாயுள்ள பரவஸ்துவாகிய அந்த சுத்தசைதன்னியநிர்மலப்பிரமப்பொருளை பிரத்யட்சம், அநுமானம், உவமானம், சத்தமெனும் பிரமாணங்களால் நிச்சயித்தல் கூடாதென்றும், அது குற்றமுள்ள குணவிசேடங்களைப் பொருந்தாமலிருத்தலால் சத்தரூபமான வேதத்துக்கும் வாக்குக்கு மெட்டாதென்றும், வேதசுருதி வாக்கியங்களுக்கு அந்தப்பொருள் அகோசரமும் கோசரமுமாமென்றும், சத்தரூபத்தாலறிவிக்காமல் அருத்தரூபத்தால் சுருதிக ளந்த நாதாதீதவஸ்துவையறிவிக்குமென்றும், வேதமகாவாக்கியவிசாரத்தா லப்பொருளை வேதமானது காட்டாமற்காட்டுமென்றும், சொல்லாமற்சொல்லுமென்றுங் கூறப்படும். பிரத்யட்சமாவது-காண்டல், இது இந்திரியவிடயசம்பந்தத்தாற்றோன்றும் ஞானம். அநுமானமாவது - அனுமித்தல், இது ஆராய்ச்சியாற்றோன்றும் ஞானம். உவமானமாவது - உவமிக்கும்பொருள், இது ஒப்புமையறிவு. சத்தம் - நாதம். அகோசரம் - அறியொணமை. கோசரம் - அடங்கல். சுருதி - உரை.

பிரமக்கியானம்விளங்கவும், வஸ்து அறிவிற்கவதானமாகவும், சீவன் முத்திநிலைபெறவும், வேதசுருதிகளுரைக்கும் அப்பிரமத்தின் அளவிறந்த குணபரியாய விலக்குநாமங்க

ளந்த நிர்க்குணபிரமத்தின் குணங்களல்லனவாயினு மந்த நாமங்களின் அருத்தப்படிச் சிந்திக்கில் அக்குணமிறந்து குணாதீதம்வெளிப்பட்டு பிரமஸ்வரூபமேயாமென்று சொல்லப்படும். அந்நாமங்களிற் சிலவற்றை யிதனடியிற்கூறுதும்.

விதியால் குணபரியாயநாமங்களாவன.

ஆத்மாவெனவும், ஏகமெனவும், கூடஸ்தமெனவும், கேவலமெனவும், சத்தியமெனவும், சநாதனமதாவது அநாதியெனவும், சமமெனவும், சாட்சி, சாந்தம், சிவன், சுத்தம், சூக்குமம், சோதி, தத்துவம், திருக்கு, துரியம் எனவும், நித்யமெனவும், நிதானம், அதாவது ஆதிகாரணமெனவும், பரப்பிரமம், பரமார்த்தம், பூரணம், போதம்எனவும், முத்தம், லட்சியம், விண், விபு எனவும் விளங்கப்படாநின்ற பிரமப்பொருள் ஒன்றே.

விதியால்விலக்குநாமங்களாவன. (பதஅருத்தத்துடன்.)

அகணு - அணுவின்மை, அகண்டம் - கண்டமின்மை. அசம் - பிறவிக்குடன்படாமை, அசங்கம் - சங்கமின்மை, அசடம் - மூடமின்மை, அசலம் - சலனமின்மை, அசரீரம் - சரீரமின்மை, அதுலம் - கனமின்மை, அத்துவிதம் - துவிதமின்மை, அநாதி - ஆதியின்மை, அநாமயம் - நோயின்மை, அப்பிரமேயம் - அறியப்படாதது, அமிர்தம் - அழிவின்மை, அவிகாரம் - விகாரமின்மை, அவிநாசி - யாதொனுநசியாமை, அனந்தம் - இறப்புக்குடன்படாமை, நிட்களம் - சகளமின்மை, நிரந்தரம் - இடையின்மை, நிரவயவம் - அவயவமின்மை, நிரூபம் - ரூபமின்மை, நிர்க்குணம் - குணமின்மை, வசனாதீதம் - வாக்குக்கெட்டாமை, விமலம் - அழுக்கின்மை, இப்படியாக விளங்கப்படாநின்ற பிரமப்பொருளொன்றேயாம்.

சச்சிதானந்தப்பத நாமங்களாவன.

சத்து சித்து ஆனந்தமென்னும் பதங்கள் சச்சிதானந்தமாம். பதங்கள் மூன்றாயினும் அவை யுணர்த்தும்பொருள் அத்துவிதவஸ்துவாகிய பிரமப்பொரு ளொன்றே. சத்து சித்து ஆனந்தமென்னு நாமங்கள் பிரமத்தின் குணங்களல்லனவாயினும் பிரமக்கியானம்விளங்கவும் சீவன் முத்திநிலைபெறவும் வேதசுருதிகளுரைத்த நாமங்களேயாம். அந்த

நாமங்களின் அருத்தப்படிச் சிந்திக்கில் அகருணமிறந்து குணதீதம் வெளிப்பட்டு பிரமஸ்வரூபமேயா மெனப்படும். ஒருபொருளைப்பற்றிச் சொல்லுஞ்சொற்கள் ஒரு பொருள் குறித்த பல வேறுவகைப்பட்டசொற்களாம்.

**உதாரணம்.** "நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப் பிர மஞானந் தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்ல பிரமமாஞ் சொரூபந் தானே" என்றும், "நித்தியம் பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந்தம், சத்தியங் கேவலந்துரியம் சமந்திருக்கு கூடஸ்தன் சாட்சி போதம், சுத்த மிலக்கியஞ் சநா தனஞ்சீவன் றத்துவம் விண்சோதி யான்மா, முத்தம்விபு சூக்கும மென் றிவ்வண்ணம் விதிகுணங்கண் மொழியும் வேதம்" என்றும், "அசலநிரஞ் சனமமர்த மப்பிரமே யம்விமலம் வசனு தீதம், அசட மநா மயமசங்க மதுல்நிரந் தரமகணு நிருபா கண்ட, மசமனந்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவ ம நாதி, அசரீர மவிகார மத்து வித மெனவிலக்கு மனேக முண்டே" என்றும், மற்றமுப் பிரமா ணத்தால் வஸ்துநிர் ணயங்கூ டாதே" என்றும், "குற்றமாங் குண விசேடங் கூடாம லிருக்கை யாலே, இற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய்" என்றும், "வாக்கியந் தனக்கெட் டாத வஸ்து வென் றுரைத்த வேதம், வாக்கிய விருத்தி யாலவ் வஸ்துவைக் காட் டிற் றன்றோ" என்றும், "பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் பேசும் வேதம்" என்றும், கைவல்லிய நவநீதத்திலும், "அகண்ட மென்ன வருமறை யாகமம், புகன்ற நின்றன்மை போதத் தடங் குமோ" என்றும், "சுருதியே சிவாகமங்களேயுங்களாற் சொல்லு மொருத னிப்பொரு ளளவையீ தென்னவா யுண்டோ" வென்றும், "அதுவென் றுளனு மதுவு மறநின்ற, முதிய ஞானிகண் மோனப் பொருளது" என்றும், "பாத நித்திய பரம்பர நிரந்தர பரம, நாத தற்பர சிற்பர வடிவமாய் நடிக்கு, நீத நிர்க்குண நினையன்றி யொன் றுநா னினையேன்" என்றும், தாயுமானஸ்வாமி பாடலிலும், "ஆண ல்லன் பெண்ணல்ல னலியுமல்லன், காணலுமா கானுள னல்ல னில்லன்" என்று, சடகோபர்சொன்ன நூலிலும், "உருவன் றரு வன் றுளதன் றிலதன், றிருளன் றொளியன் றெனநின் றதுவே." என்று, அருணகிரிநாதரியற்றிய நூலிலும் மற்றும் வருவனவற்று னுங்காண்க.

### சுத்தப்பிரமம் பரபிரமமென்பது.

பிரமமாகிய அந்த சர்வசாட்சியினிடத்திலே அக்கினியிற் சூடுபோல வபின்னமாக ஓர் சத்தியுண்டாம். அந்தச்சத்தி

அநந்தபப்பிரமத்தினிடத்தி லயமாய் அப்பிரமம் சலனமற்றிருக்கையில் அதற்குச் சுத்தப்பிரமமென்றும், அந்தச்சத்திபிரமத்தை வியாபிக்கையில் அப்பிரமத்தினிடத்தில் பூவியாபகமுண்டாகையால் பரப்பிரமமென்றும் பெயரானதென்று வேதங்களையுணர்ந்த பெரியோர்களாற் கூறப்பட்டதெனப்படும்.

"பெயருருவ மின்றியொன்று யிரண்டற்ற தாகிப் பிறங்குஞ்சர்வ சாட்சியாஞ் சுத்தப்பிரமத்தி னிடத்தே, யுயாருக்கனிடத்தனலொத் தோங்கபின்ன மாக ஓர்சத்தி யுளதாம்" என்றும், "தழுக்ககலப் பிரமத்தினிடம் பாவியாபகமுண் டக்காலத்துச் சுத்தப் பிரமமெனும் பெயர்போய், வழுத்தலுறும் பரப்பிரமமென வழங்கு மென்றே மறையந்த முணர்ந்தவர்கள் வகுத்துரைத்தா ரென்றே" என்றும் சொல்லப்பட்டிருப்பதையும், நாலுசீவாதக்கட்டளை என்னும் தத்துவக்கட்டளையினுங்காண்க.

### சச்சிதானந்தவியல்புகளாவன.

சச்சிதானந்தம் - சத்து சித்து ஆனந்தமெனப் பதங்கள் மூன்றுயினும் அவையுணர்த்தும்பொருள் அத்துவிதவஸ்துவாகிய பிரமப்பொருளொன்றேயாம்.

சத்தாவது :—அறிவு முக்காலத்துங்கெடாதவஸ்து. தன் சரீரம் மாறிமாறிநசிக்கினும் ஆத்மா எப்பொழுதும் நசியாமலிருத்தலே சத்தாம். இது மரம் மண் கல் முதலிய மூடவிருத்தியாம். தமோகுணத்திலுதிக்குமெனப்படும். இதற்குப் பொருள் அறிவையன்றி செக சீவ பரமில்லையென்பதாம்.

சித்தாவது :—அறிவு, அறிவு - ஞானம் ஒருபொருட்கிளவி. இருள், சுழுத்தி, பிரகாசம், வஸ்துக்க ளிவைகளையறிவாயிருந்தறிதலே சித்தாம். காமமுதலிய கோரவிருத்தியாம். ரசோகுணத்தில் சத்தும் சித்துமுதிக்குமெனப்படும்.

ஆனந்தமாவது :— சத்து சித்தின் ஒருமையிலுண்டாகும் சுகம். அதாவது விடயங்களனைத்திலுமுள்ளப்பிரியம் நீங்கினுந் தனது ஆத்மப்பிரியம் நீங்காமையே ஆனந்தமாம். இது ஒழிவுமுதலிய சாந்தவிருத்தியான சத்துவகுணத்திலுதிக்குமெனப்படும். சித்தேசத்து சத்தேசித்து எனற்கியை

தற்பால்து வேறொன்றாமையின் அறிவே யானந்தமாம். சச்சி தானந்தப்பொருளொருமையின் ஸ்வரூபம் தேசிகமுகந்தா லறியவேண்டுமெனப்படும்.

## சச்சிதானந்தபாதங்களின் ஒருமையாவது.

இருந்ததுவிளங்குதலின் சத்தேசித்தெனவும், விளங்கு பதேயிருத்தலின் சித்தேசத்தெனவும், இவ்வொருமையில் சுகம்விளைதலின் இஃதே ஆனந்தமெனவும்படும். அறித லிறந்த சுழுத்தியில் ஆனந்தம் விளங்குத லதற்கேதெரிதலின் அவ்வானந்தமேயறிவாம். இருளையறியுமிடத்து அவ்வறிவே தானயிருத்தலின் அறிவேசத்தாம். விடயங்களிலுண்டாகும் பிரியம் நிலையின்றிமாறுமெனவும், ஆத்மாவினிடத்திலுள்ள பிரிய மொருக்காலுமாறாதெனவும், தனங்களைவிட புத்திரன் பிரியமெனவும், புத்திரனிலும் தேகம் பிரியமெனவும், தேக த்திலும் இந்திரியம் பிரியமெனவும, இந்திரியங்களிலும் சீவன் பிரியமெனவும், சீவனிலும் கூடத்தன் பிரியமெனவும், ஆத்மப்பிரியமே முக்கியமெனவும்படும்.

உ-ம். "மிருகாலமுன் றாங்கெடாதிருப்பது சத்து வேறுபா டறிதல் சித்தாம், மகிழ்காம நுகர்போது சுகமாகு மனுபூதி வாழ் வென்ப தானந்தமே" என்று கைவல்லியநவநீதத்திற் காண்க.

## ஆன்மாவென்பது.

ஞானத்திற்கிடமாயுள்ளது ஆன்மா, அது பரமான்மா சீவான்மாவென விருவகைத்து. பரமான்மா ஈசுரன் முற்றறி வன் ஒருவனே. பரமாணுமுதலிய நுண்ணியபொருளெல் லாவற்றையுங்காண்டலின் ஈசுரன் முற்றறிவனும். "இறைவ னுவான் ஞானமெலா முதன்மையனுக் கிரகமெலா மியல புடையான்" என்பதனுலுணர்க.

சீவான்மா சரீரந்தோறும் வேறாய் வியாபகமாய் நித்யமா யிருப்பனும். சரீரமே யான்மாவென்பார்க்குக் கைகால்முத லிய சரீரம்நசித்தலால் ஆன்மாவும் நசித்தல்வேண்டுமாதலின் சீவான்மா உடம்புமுதலியவற்றின் வேறெனவும், சுகமுதலிய வற்றின் வேறுபாட்டான் உடம்புதோறுமெனவும்படும்.

ஆன்மா பொருண்மாத்திரமாயும், சீவன் சொல்மாத்திர மாயு மிருக்குமெனப்படும். "சீவனென் கின்ற சொல்லும்

பொருளுமாச் செறிந்த வான்மா” வென்றார் வசிட்டபக
வான். ஆன்மா ஏகமாயும், எதார்த்தமாயும், பிம்பமாயும்,
சிவன்கற்பிதமாயும், பலவாயும், பிரதிபிம்பமாயும் நிற்பதென
ப்படும். உணர்தற்பாலது உயிரன்றி வுடலன்றாதலின் வுணர்
வை உயிரெனப்படும். அறியாமை எங்கெங்குளதோ அங்
கங்குளது சீவனும். தன்னை சொப்பிரகாசமாகக் காண்டல்
ஆன்மா. தன்னை யுபாதியாகக்காண்டல் சீவன். இது கற்
பிதவறிவு, இதை யானென லறியாமையாம். தன்னைத்தா
னுணரற்பாலதெதுவோ அதுவே மெய்யுணர்வாகிய ஆன்மா
வெனவும், உயிர் தன்னைத்தானறியாததாலது வுணர்வன்றென
வும்படும். ஜீவான்மாவும் பரமான்மாவும் வஸ்துவினாலே பேத
மும் வியாப்தியினாலபேதமுமாகையால் அத்வைதமென்பதாம்.

ஆன்மாவென்னும்பதமும், அணு, ஆவி, இயமானன்,
உயிர், உறவி கூடத்தன், சீவன், செந்து, சேதனன், பசு,
பிராணன், புற்கலன், பூதம் என்பனவும் ஒருபொருட்கிளவி.

உடம்பென்னும்பதமும், அங்கம், அவயவி, ஆகம், ஆதா
ரம், உடல், உயிர்நிலை, உரு, உறுப்பு, கடம், களேபரம், காத்
திரம், காயம், குரம்பை, சடம், சரீரம், தநு, தாபரம், தாவ
க்கு, தேகம், தேயம், பழுவம், பிண்டம், புல், புணர்வு, புரம்,
புற்கலம், பூதியம், மூர்த்தம், மெய், யாக்கை, விக்ரகம், வியம்,
அவவுருவத்தின்பெயரான சட்கம், வெளிவடிவம் என்பன
வும் ஒருபொருட்கிளவி.

### ஈசுரன் பஞ்சமுகங்களென்பது.

ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோ
சாதம் என வைந்து. இவற்றுள், ஈசானமாவது அனைத்து
மாளுதல், தற்புருடமாவது காத்தல், அகோரமாவது அழித்
தல், வாமமாவது விளக்கல், சத்தியோசாதமாவது தோற்று
வித்தல் என ஐந்துமுகங்களெனப்படும்.

### ஈசுரன் பிரபுத்துவசாமர்த்தியகுண மூன்றென்பது.

கர்த்தத்வம், அகர்த்தத்வம், அன்னிதாகர்த்தத்வமெனு
மூன்றும் ஈசுரன் சாமர்த்தியகுணங்களாம்.

### ஈசுரன் முக்கியகுணம் ஆறென்பது.

சர்வஞ்ஞத்வம், சர்வேசுரத்வம், சர்வநியந்த்ருத்வம், சர்வாந்திரியாமித்வம், சர்வகற்பிதத்வம், சர்வசத்தித்வம், ஆக ஆறு. அன்றியும் தன்வயத்தனாதல், முதலிலனாதல், உடம்பிலனாதல், எல்லாநலமுளனாதல், எங்கும்வியாபகனாதல், எவற்றிற்குங்காரணனாதல் என்பனவுமாம்.

### ஈசுரன்குணம் எட்டென்பது. (சைவாகமம்.)

தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயர்க்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, ஆக எட்டு. அன்றியும் வரம்பில்ஞானம், வரம்பில்காட்சி, வரம்பிலின்பம், வரம்பிலாற்றல்; நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, இடையூறின்மை என்பனவுமாம்.

**சித்திகள்** எட்டென்பது: அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவமென எட்டாம்.

**யோகம்** எட்டென்பது: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதியென எட்டாம்.

**சித்துகள்** எட்டென்பது: ஸ்தம்பனம், மோகனம், வசியம், மாரணம், உச்சாடனம், ஆக்ருஷணம், வித்துவேஷணம், பேதனம் என எட்டாம். அட்டகன்மச்சித்தெனப்படும்.

**சமாதி**யென்பது: சரீரவாதனைகளின் உணர்வற்று ஸ்தம்பமாய் பிரமஸ்வரூபத்திற்கலந்து தேகத்தை அசைவறநிருத்திச் சின்மயத்தில் நீடூழிகாலம் நின்றுவிடுதல் சமாதியெனப்படுவதாம். சுகப்பிரமரிஷி சாஸ்திரப்படி முப்பதுநாழிகை சுவாசபந்தனஞ்செய்திருத்தலாம்.

**சிவயோக**மென்பது: வாயுவடங்குதல் ஞானநிட்டையல்லவென்றும், மனத்தினுடைய விருத்தியடங்க நிருத்தலே ஞானநிட்டையென்றும், அப்படி கருததடங்கினதே சிவயோகமென்றும் சொல்லப்படும்.

## நித்தம் அநித்தமென்பது.

ஈசுரனுடைய புத்தி, இச்சை, முயர்ச்சி யெனு மூன்றும் நித்யமும்; உயிருடைய புத்தி, இச்சை, முயர்ச்சி யெனு மூன்றும் அநித்யமுமாம்.

நித்யமாவது-பரமாணுரூபம். அநித்யமாவது காரியரூபம்.

நித்தப்பொருள்களாவன :—பிருதிவி, அப்பு, தேயு, வாயு வெனுநான்கின் பரமாணுக்களும், ஆகாயமுதலிய ஐந்துமாம்.

## மண்முதிவியல்புகளென்றது.

பிருதிவியாகிய மண் நாற்றமும், அப்புவாகிய தண்ணி குளிர்ந்தபரிசமும், தேயுவாகிய நெருப்பு சுடும்பரிசமும், வாயுவாகிய காற்று உருவமின்றிப் பரிசமுமுடையனவாம். இந்நான்கும் நித்யம் பரமாணுரூபமும், அநித்யம் காரியரூபமுமாம். தேகஇந்திரிய வேறுபாட்டால் மூவகையுமாகுமாம்.

பிருதிவிக்குவிடயம் மண் கல் முதலியன, அவை இவை யென்கிறது. பிருதிவி, அப்பு தேயுக்களிலிருப்பது. தேக இந்திரியம் கிராணம் நாற்றத்தைக்கவர்வது, இது நாசிநுனி யிலிருப்பது.

அப்புவுக்குவிடயம் ஆறு கடல் முதலியன, வருணலோக த்துள்ளது. தேகஇந்திரியம் சிங்நுவை, சுவையைக்கவர்வது. இது நாவிநுனியிலிருப்பது.

தேயுவுக்குவிடயம் மண்ணினும் விண்ணினும் வயிற்றி னும் ஆகரத்தினுமுள்ளது. மண்ணினுள்ளது நெருப்பு முதலியன, சூரியலோகத்துள்ளது. விண்ணினுள்ளது மின் முதலியன. வயிற்றினுள்ளது உண்டவுணவு பரிணமித்தற் கேது. ஆகரத்தினுள்ளது பொன்முதலியன. தேகவிந்திரி யம் சட்சுவாகியகண், அது உருவத்தைக்கவர்வது கண்ணு ளைக்கருமணியிலிருப்பது. ஆகரம் - உறைவிடம்.

வாயுவுக்குவிடயம் மரமுதலியன அசைதற்கேதுவாயுள் ளது, உருவமின்றிப் பரிசமுடையது, வாயுலோகத்துள்ளது, சரீரத்தினகத்துச்சஞ்சரிக்கும் பிராணனும். அம்மொன்றுயி

னும் உபாதி வேறுபாட்டால் பிராணன் அபானன், உதானன் வியானன் சமானன்முதலிய பேர்பெறுமாம். தேகஇந்திரியம் துவிக்கு, சரீரமெங்குமிருப்பது.

ஆகாயமாவது:—சத்தகுணமுடையது. அது ஒன்றாய் வியாபகமாய் நித்யமாயிருப்பது. ஆகாயம் - வெளி, செவித்துளையிற்றெரித்துணர்த்துகின்றது. இந்திரியம், சோத்திரம்.

காலமாவது:—இறப்புமுதலிய வழக்கிற் கேதுவாயுள்ளது அது ஒன்றாய், வியாபகமாய், நித்யமாயிருப்பது. நிகழ்தல், சென்றல், எதிர்பென காலம்மூன்றும்.

திக்காவது:—கிழக்குமுதலிய வழக்கிற் கேதுவாயுள்ளது, அதுவும் ஒன்றாய், வியாபகமாய், நித்யமாயிருப்பது. கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என நான்குதிக்குகளாம்.

## மனமென்பது.

அந்தக்கரணவிருத்தியாகிய மனம், சுக முதலிய அனுபவத்திற்குக் கருவியாகிய விந்திரியமெனப்படும். விருத்தியும் பலமுங்கூடிய விகாரரூபமே மனமென்று சத்துக்களாற் சொல்லப்படும். அனேகமாய் பரமாணுரூபமாய் நித்தியமாயிருக்குமாம். சித்து சம்பந்தஞானம் விருத்தியும் சடசம்பந்தஞானம் பலமுமாம். விருத்திரூபமானமனத்திற்கு சித்து எட்டுமெனவும், வருத்துகின்ற விடயத்தையறியும் பலரூபமானமனத்திற்கு சித்து எட்டாதெனவும், அகமுகமனத்திற்கு பிரமம் அறியப்படுமெனவும், பகிர்முகமுள்ளமனத்திற் கறியப்படாதெனவும்படும்.

மனத்தின்குணமாவது:—மனம் சத்துவவடிவம், மற்ற ரசோ தமோ குணங்களிரண்டும்வந்து சேர்ந்தவைகளாம். மனத்தின் சத்துவகுணமானது: சற்கருமத்திற்கேதுவாகிய உயர்ந்தகுணமாம். ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறியடக்கலாகிய எட்டும் சாத்வீககாரியங்களாம். சாத்வீககுணமிகுமாயின் சன்மார்க்கமாகிய தெய்வசம்பத்துண்டாம். மனவூக்கம், ஞானம்,

வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி என்று மெட்டும் ரசோகுணகாரியங்களாம். ரசோகுண மிகுமாயின் லோக வாதனையும், தேகவாதனை, சாஸ்திரவாதனையு முண்டாகு மாம். பேருண்டி, நெடுந்துயில், சோம்பு, நீதிவழு, ஒழுக்க வழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை என்னு மிவைகளெல்லாம் தாமதகுணத்தின் காரியங்களாம். தமோ குணமிகுந்தபோது அசுரசெல்வ முண்டாகுமாம். இம்மூன் றுகுணங்களில் ஒன்று மிகுந்தெழுமாயின் மற்றிரண்டுகுண ங்களு மறைந்துநிற்குமாம். மனது சன்மார்க்கமான தனது சத்துவகுணத்தை விடாமலிருந்தபோது தமோகுணமும் ரசோகுணமும் நசிக்குமென்றும், அப்போ திரிசியமாதலும் சலனமடைதலும் நீங்குமென்றும், மனமானது நிர்மலவாகா யத்தைப்போலாமென்றும், அப்பிரமஸ்வரூபத்தில் ஏகமாய் நிருவிகற்பசமாதியிலே நிலைபெற்றிருக்குமென்றும்; சுபாவ மான சத்துவகுணமாக மனஞ்சேடித்து தமோ ரசோகுணங் கள் நசித்தலே உருவநாசமென்றும்; அந்தச்சத்துவகுணமும் சூக்குமசரீரம் நசிக்கும்போது ஒக்க நசிக்குமென்றும், அப் படிநசித்தலே அருவநாசமென்றும்; சத்துவமானமனத்தினு லெவற்றைப்புசிக்கினும் அவைகளால்வருஞ் சுகதுக்க மவர்க் கில்லையென்றும், வியவகாரங்களை சத்துவத்திலுதயமான சுக போதம்விழுங்கிக்கோடலின் அவ் வியவகாரம் சமாதியே யாகுமென்றும் கூறப்படும்.

உ - ம். "விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனமென் பார்கள்" என்றும், "மனது சத்துவசொரூப மற்றிரண்டும்வந்து சேர்ந்தன வவற்றைமாற்றினுற்போம்" என்றும், "சுத்தமாஞ் சத் துவமே யுண்மையாகுந் துகளிருள்போனுன் மனமென் சொல்லும் போம்போம்" என்றும் கைவல்லியநவநீதம்.

## ஞானமென்பது.

ஞானமாவது:—காரண அறிவு. காரணம் காரியத்துக்கு நியதமாக முன்னிற்பது. காரியமாவது நாமரூபப்பேர்களா யுள்ளவை. ஞானம், மனம், புத்தி, சித்தம், அகங்காரமாகிய அந்தக்கரணமென்னு மிந்திரியங்களுக்குத் தலைமையெனப் படும். உள்ளமாவது:—ஆகாயத்திலாகாயம்கூடில் தன்னித்

தியகுணம் ஞானமாகிய உள்ளமாம். அந்தக்கரணமாவது :— உட்கரணமாம். கரணமாவது :—சிறப்புக்காரணம். உபகரணம், துணைக்கருவி, சூக்குமதேகம் என்பன ஒருபொருட்கிளவி, கரணம் - கருவி, ஞானேந்திரியங்களு மனமுமாம். ஞானம் - காரணகாரியமாயிருக்குமென்பதாம்.

ஞானத்தின் விருத்திபுத்தியாம். ஆகாயத்தில் அக்கினி கூடில் புத்தியெனவும், ஆகாயத்தில் வாயுகூடில் மனமென வும், ஆகாயத்தில் அப்புகூடில் சித்தமெனவும், ஆகாயத் தில் பிருதிவுகூடில் அகங்காரமெனவும்; மனத்தின்விருத்தி சித்தமெனவும், புத்தியின் விருத்தி அகங்கார மெனவும், விவேகம் அந்தக்கரணத்தில் சமட்டிகரமெனவும், அந்தக்கர ணவிருத்தி மனமெனவும்படும். அந்தக்கரணம்-காலம், திக்கு முதலியவற்றின் அதிவியாத்தியதாவது வியாபகத்தைநீக்கு தற்குச் சிறப்புக்காரணமாம். சைதன்னியச்சொரூபச்சாயை யே அறிவைப்போல புத்தியிற் பிரதிபலிக்குமென்றும், புத் தியிற்றங்குஞ் சிற்சாயையே விருத்தியென்றும், அவ்விருத் தியே அந்தக்கரண பிரதிபலினமாகிய சீவனென்னுஞ் சிதா பாசனுக் கிடமென்றும், அந்தச் சிதாபாசாந்தவிருத்தியே ஞானமென்றும், சிதாபாசன் கற்பிதவறிவென்றும், சாயை நிழலென்றும், ஞானம் அகத்தினும்புறத்தினுஞ் சஞ்சரித்து நிற்குமென்றும், அதினது எண்ணங்கள் அதாவது சங்கற் பங்கள்,புத்தியெனவும், மனமெனவு முரைக்கப்படுமென்றுஞ் சொல்லப்படும். தன்னுணர்ப்பாலதோ பிறிதானுணர்ப்பா லதோவென் றாராயத்தக்கதும் அநுபவமாகப்பார்த்துணர்வ தும் ஞானமேயாம். மயக்கவுணர்வுநீங்குதல் ஞானமாத்திர த்தாற்றேன்றுமாம். அறிவு தன்னை அயலாகக்காணுங்கா றும் ஆனந்தம் தனக்கயலாகக்காணும். அறிவைக்கண்டால் ஆனந்தம் அயலன்றுதானே ஆனந்தமாம்.

“ஞானங்காரண வறிவுகாண் காரியம் நாமரூபப்பேர் கள்” என்றும், ‘சின்மய வடிவின்சாயை சித்துபோற் புத்தி தோன்றும், நின்மல விருத்தி யந்த நிழல்வடி வாயு லாவும்” என்றும் கைவல்லியநவநீதத்திற்காண்க.

## புத்தி, நினைவு, அனுபவம், பிரமை, பிரமம் என்பது.

புத்தியாவது :—எல்லாவழக்கிற்குங் காரணமாயுள்ளது. ஞானவிருத்தியாம். புத்தியாவது :—நினைவு, அநுபவமென விருவகைத்தாம். நினைவாவது :—வாசனையாற்றோன்றும் ஞானம். அநுபவமாவது :—அதனின்வேறாய ஞானம். நினைவாவது :—மெய் பொய்யென விருவகைத்து. மெய் யனுபவத்தாற்றோன்றிய நினைவு மெய்யென்றும், பொய்யனுபவத்தாற்றோன்றிய நினைவு பொய்யென்றும்;புத்தியுரைக்கப்பட்டதென்றுஞ் சொல்லப்படும். அனுபவமாவது :—உண்மையனுபவம் இன்மையனுபவமென விருவகைத்தாம். உண்மையனுபவமாவது : — அஃதுடைப்பொருளின்கண் அது விசேடணமாக நிகழும் அனுபவம் உண்மையனுபவமாம். உண்மையனுபவமே பிரமையென்றுரைக்கப்படும். பிரமைக்குக் காரணம் பிரமாணமாம். உண்மையனுபவவறிவிற்குக் கருவியாயுள்ளது பிரமாணமென்பது பொருளென்றதெனப்படும். பிரமை, அறிவு, மயக்கம் என்பன ஒருபொருட்கிளவி. இன்மையனுபவமாவது :—அஃதில் பொருளின்கண் அது விசேடணமாக நிகழும் அனுபவம் இன்மையனுபவம். அது பிரமம். பிரமம், கடவுள், கலக்கம், தத்துவம், மயக்கம், முத்தி என்பன ஒருபொருட்கிளவி. உண்மையனுபவம் - காட்சி அநுமிதி உவமிதி சாத்தம் என்னும் வேறுபாட்டான் நான்குவகைத்தாம். அதன்கரணமும் காண்டல், அநுமானம், உவமானம், சத்தம் என நான்குவகைத்தாம்.

இன்மையனுபவமாவது :—ஐயம், திரிவு, தருக்கம் என்னும்வேறுபாட்டான் மூவகைத்தாம். ஐயமாவது ஒருதருமியின் அதாவது தன்மையின்மாறுபட்ட பலதன்மைகளான் விசேடிக்கப்பட்ட வுணர்வாம். "அது குற்றியோ மகனோ" வென்பதாம். குற்றி தறி, தூண். திரிவாவது-மித்தை. இது பொய்யாலாய வுணர்வாம். அது இப்பியை வெள்ளியென்பதாம். தருக்கமாவது வியாப்பியத்தை யாரோபித்தலான் வியாபகத்தை யாரோபிப்பதாம். "தீயில்லையாகில் புகையுமில்லையாதல் வேண்டு" மென்பதாம். வியாப்பியம் - வியாத்தி.

வியாத்தி - வியாபித்தல். இன்மையனுபவமென்றது ஏகருத்தாம். மித்தை - பொய். ஐயம் - சந்தேகம்.

**பிரமாணங்களென்பது.**

பிரத்யக்ஷம், அனுமானம், உவமானம், சத்தம் என்பது பிரமாணங்களாம். பிரத்யக்ஷப் பிரமாணமென்றது : காண்டல். காண்டலாவது : — புலப்படக்காணுங்காட்சி யறிவிற்குக்காரணமாம். காட்சியறிவுயென்றது : இந்திரியவிடய சம்பந்தத்தாற்றேன்றும் ஞானமாம். இந்திரியவிடயசம்பந்தமென்றது: இந்திரியம் - கண்முதலியன, விடயம்-குடமுதலியன, சம்பந்தம்-இரண்டுக்குமுள்ள சையோகமாம். அனுமானப்பிரமாணமாவது:—அனுமானம்-அனுமிதிக்குக்காரணமாம். அனுமிதி-ஆராய்ச்சியாற்றேன்றும் ஞானமாம். ஆராய்ச்சியாவது :—வியாத்தியடுத்த பக்கத்தருமத்தன்மை ஞானமாம். அது : "வன்னியின்வியாப்பியமான புகையுடையது இம்மலை" என்னும் ஞானமாம். அவ்வாராய்ச்சியாற் றேன்றியது "இம்மலைதீயுடைத்து" என்னுமுணர்வாம். அதுவே அனுமிதியாம். வன்னி - நெருப்பு. வியாப்பியம் - வியாபகம். காண்டல் - காணுதலாம். உவமானப்பிரமாணமாவது :—உவமிதியறிவிற்குக் காரணமாம். உவமிதி - பெயர்க்கும் பெயர்பொருட்குமுள்ள சம்பந்தமறியுமறிவாம். அதற்குக்காரணம் ஒப்புமையறிவு. "ஆவினையொக்கும் ஆமா" என்பதுபோல உவமானம் - உவமிக்கும்பொருளாம். சத்தப்பிரமாணமாவது ஆத்தன்வாக்கியம். ஆத்தன் உரியோன் என்பன ஒருபொருட்கிளவி. ஆத்தனுவான் உண்மைப்பொருளைக் கூறுவான். விரிவு பின்னுலறிக

பிரமாணமென்னும்பதமும், அளவை, ஆணை, சத்தியம், தேவசாட்சி என்பனவும் ஒருபொருட்கிளவி.

பிரதிஞ்ஞையாவது :—பிரதிஞ்ஞை மேற்கோள் என்பன ஒருபொருட்கிளவி. பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பன ஐவகையுறுப்புகளாம்.

## ஞானபூமிகளாவன.

ஞானபூமிகள் ஏழெனப்படும். அவை சமாதியடைதற்குச் சாதனங்களாம். சகலசமயங்களுக்கு மேலானது ஞானபூமிகளேயாம். அவையாவன: சுபம்விரும்பல், விசாரமெய்தல், நல்லமனஞ்சிறுகல், உண்மையில் நிலைபெற்றுநிற்றல், சங்கற்பமறல், பதார்த்தஎண்ணமறுத்திடல், துரியம், துரியாதீதமெனுமேழும் ஞானபூமிகளாம். சத்தாகத் துரியத்தில் காண்பானுங்காணபடுநிஞ் சகத்துந்தோன்றுதலின் அதையே துரியாதீதமாகக் கூறப்படுமாம். அஞ்ஞானிக்கு ஞானபூமிகள் சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரியம், துரியாதீதமென வைந்தவத்தைகளாமென்றதெனப்படும்.

சுபம்விரும்பலெனு முதற்பூமியானது:— துற்சங்கநீங்கிச் சிவஞானம் விரும்புவதெனப்படும். இது அறிஞர்கள் துதியாநின்றதாம். இந்தப்பூமி கைவசமானல் மோட்சமுங் கைவசமானதென்றுரைக்கப்படும். "காலான முதற்பூமி கைவந்தான் முத்தியுங்கை வந்ததாமே" என்று கைவல்லியநவநீதத்திற்காண்க.

விசாரமெய்தலெனு மிரண்டாம்பூமிஎன்றது: சாதுசங்கத்தைச்சார்ந்து அவருரைக்கும்வாக்கியத்தைக்கேட்டு ஞானசாஸ்திரத்தை யப்பியசித்தலாம்.

நல்லமனஞ்சிறுகலெனு மூன்றும்பூமி என்றது: விசாரத்தில் வெளிப்படும்பொருளைநம்பி முன்னுள்ளஇச்சைகளை நீக்குதலாம். இது தனுமாநசியெனவும்படும்.

உண்மையிலே நிலைபெற்று நிற்றலெனும் நான்காம்பூமி என்றது: முன்சொல்லிய மூன்றுபூமிகளின் பழக்கத்தினுல் சற்சங்கம் பழகியமனதில் மெய்யுணர்வுபிறத்தலாம். இது சத்துவா பத்தியெனவும்படும்.

சங்கற்பமறலெனு மைந்தாம்பூமி என்றது: உண்மையிலே மனந்திறப்பட்டு பொய்மைகளனைத்தையு மறந்துவிடுவதாம். இது சமுசத்தியெனவும்படும்.

பதார்த்தயெண்ணமறுத்திடலெனும் ஆறும்பூமிஎன்றது: அத்துவிதானந்த முண்டாதலும், திரிபுடியாகிய ஞாதுரு, ஞான, ஞேயம் நீங்குதலுமாம். இது பதார்த்தபாவனையெனவும்படும்.

துரியமாகிய ஏழாம்பூமி என்றது: பிரமவஸ்துநிச்சயமுட் இருந்தவண்ணமிருக்கின்ற மோனத்தன்மையாம். இந்தத் துரியமே துரியாதீத மெனப்படுவதாம். "வெறிய துரியங் கவலமாம் வீடே யேழாம் பூமி" என்று ஞானவாசிட்டத் துற்காண்க.

முதலிரண்டுமூன்று பூமிகளினுஞ் சகந்தோன்றுதலால் நனவாகுமாம். இம்மூன்றிலும் ஏறியவர்கள சாதகர்கள், சீவன்முத்தரல்லவாம். நான்காம்பூமி கனவெனப்படும். ஐந் தாம்பூமி சுழுத்தி, இதிலேறியவன் பிரமவரனெனப்படுவனும். ஆறும்பூமியிலேறியவன் பிரமவரியனும். ஏழாம்பூமி ஒருகற் பனையுமற்றவிடம் துரியாதீதமெனபபடும். இதிலேறியவன் பிரமவரிட்டனும்.

விதேகமுத்தியைத் துரியாதீதமெனக்கூறப்படும். துரியா தீதமாகிய ஏழாம்பூமியையடைந்த மகாபுருடன் அரன், அரி, அயனென்னு மும்மூர்த்திகளுக்கும், நாரதர், சுகர்முதலிய வர்களுக்குமுள்ள சுவானுபவமாகிய சுகபோதவடிவனுவ னும். ஒருகற்பனையுமற்றவிடந் துரியாதீதமெனச் சுருதியா னது மௌனமாகத் தரிசிப்பிக்குமாம்.

உ - ம். "புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யாகும், நலதனுமா னசிமூன்ரும் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி, சொலுஞ்சமுசத் திப்பேரும் பதார்த்தா பாவனைப்பேருந் துரியப் பேரும், மலினமறு மகமேன்மையந் தாமேழு பூமிகளாய் வகுத்தார் மேலோர்" என்றும், "முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா மூன்றற் கப்பாற், சொர்ப்பனமா மதுவுமெள்ள நழுவுமஞ் சாம் பூமியே சுழுத்தி யாகும், அற்புதமாஞ் சுவானுபவ மிகுமாறும் புவிதுரிய மதறகப் பாலோர், கற்பனை யிலாதவிட மதீதமென்று மவுனமாக் காட்டும் வேதம்" என்றும், "முன்னிலங்களி லேறிய மூவருமப் பியாசிகளா முத்த ரல்லர், பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனென்றுஞ் ஜீவன்முத்தர் பேத மாகும்" என்றும் கைவல் லியநவநீதத்திலும், "ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந் தேழாம் யோக பூமி, நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தை நிறை நிறைவைத் தன்னை, யன்றியொரு பொருளிலதா வெப்பொ ருட்குந் தான்முதலா யசல மாகி" என்று தாயுமானஸ்வாமிகள்பாட லிலுங்காண்க.

## மோனமென்பது.

மோனம் - மௌனம் ஒருபொருட்கிளவி. எங்கெங்கின் பஞ்சேனிக்கிறதோ அங்கங்கறிவைக்காணில் மோனமாம். மௌனம் - அல்லவல்லவென்பதற்கெல்லையாம். அதாவது பேசிக்கொண்டே வந்து பேசாமனிற்றல், காட்டிக்கொண்டே வந்து காட்டாமனிற்றலின்றன்மையும். தத்துவங்களையெல்லாம் இது அல்ல இது அல்லவென்று நியதிகளைந்து முடிவில் நின்ற அநந்தப்பரப்பிரமவஸ்துவை வேதமானது சொல்லாமற் சொல்லுமென்றும், காட்டாமற்காட்டுமென்றும்; வேதசுருதிகள் சத்தரூபத்தாலறிவிக்காமல் அருத்தரூபத்தாலநந்தப்பிரமப்பொருளை யறிவிக்குமென்றுஞ் சொல்லப்பட்டிருப்பதை யறிக "மோனமென்பது ஞானவரம்பு" என்றாள் ஔவையார். மௌனம் - மதனம், மூகம், மோனம் என்பன ஒருபொருட்கிளவி.

## அஞ்ஞானபூமிகளாவன.

அஞ்ஞானபூமிகள் ஏழெனப்படும். அவையாவன:--வித்துநனவு, நனவு, மகாநனவு, நனுக்கனவு, கனவு, கனாநனவு, சுழுத்தியென வேழாம். மகான்கள் கூறியநாமங்களாம்.

வித்துநனவென்றது - அகண்டபரிபூரணமாக விளங்குஞ் சுத்தசைதன்னியத்தில் மந்திரிட்டறிய வித்தத போதவுணர்வாம். இது செக, சீவ, பரத் தத்துக்கு மூலமான பிரகிருதியாம்; சாக்கிரசொப்பனமெனப்படும். நனவென்றது - அந்த வித்தாகியவுணர்வில், அகந்தையானது முளைபோல அதாவது பிரதிபலினமாக வெளிப்படுவதாம். இதுவே செக, சீவ, பர உற்பத்திக்கு அடையாளமான மகத்தத்துவமெனப்படும்; சொப்பனமாம். மகாநனவென்றது - பிறவிதோறும் மாறாமல் யான் எனது என்கிற விருட்சம் வளரும்; செகசீவபரங்களை யான் எனதுவென்று மமதாங்காரமாக வெளிப்படுத்துவதாம். இது அகங்காரதத்துவமெனப்படும்.

நனுக்கனவென்றது: அங்ஙனம் வளரும் அகத்தைக் கொண்டு சாக்கிரத்தில் மனோராச்சியஞ்செய்வதாம். இது செக, சீவ, பரங்களின் உருவமே நானென வியாபித்ததுவாக

கிறபகார்; சாக்கிரசொப்பனமார்: அறிவுதெரிதல்போலத் தோற்றுவதெனப்படும். கனவென்றது - புசித்து நித்திரை செய்து, மனோராசரியஞ்செய்வது. இது சேக, சீவ, பரங்களின் எதார்த்தங்களின்னதென்று தோற்றுதல்களில் வியாபிக்கு மறிவாம். இது சொப்பனமாம். கனாநனவாவது - முன் சாக்கிரத்திற்பார்த்தது மறந்துவிட்டதை திருப்ப ஞாபகப்படுத்துவது இது சேக, சீவ, பரங்களைமறந்து நினைக்குமாம்; சொப்பனசாக்கிரமாம்.

சுழுத்தியென்றது:—பிருகிருத இருள்மூடிக்கொள்வது சேக சீவபரங்களை தானாகிநின்று தன்னைமுழுதும் மறந்த அறியாமையேயெனப்படும்.

விழித்துநனவு, நனவு, மகாநனவு என்னுமூன்றும அறிவு பரிணமித்ததாகாரமா யெதிரிடுதலால் சாக்கிரமென்றும்; நனாக்கனவு, கனவு, கனாநனவு எனு மூன்றும் எதிரிடுகிற ஆகாரங்களின் அறியாமையோடு விவகாரஞ்செய்தலின் சொப்பனமென்றும்; தனதேதார்த்தந் தெரியாமல் விடயானந்தாகாரமாக உறங்குதலின் சுழுத்தியென்றுஞ் சொல்லப்படும்.

அறியாமையன்றி சேக, சீவ, பரமெனு மூன்றுமில்லையெனப்படும். இம்மூன்றும மாயாகாரியமாம். அறியாமையே மாயையாம். பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்ந்ததும் பொருளைப்பொருளென்றுணர்ந்ததும் அறிவேயாதலின், அறிவே அஞ்ஞானமும், ஞானமுமாமெனப்படும். பிரமஸ்வரூபமாகிய தன்னைமறந்த அறியாமையே அஞ்ஞானமாம். தன்னையுள்ளபடி கண்டதே ஞானமாம். ஞானம் - அறிவு.

உ-ம். " வினவுமிடத் தஞ்ஞானபூமிகளேழ் என்றபாடத்தில்' " தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த, கனவுகனுக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றெழுபேர் கணித்தார் மேலோர் " என்று கைவல்லியநவநீதத்திலறிக.

## ஞானவகை, வுணர்வு, தஸ்மரணைமுதலியன.

நிச்சயஞானம், பரஞானம், அபரஞானம், திரஞானம், சொரூபஞானம், சோதிஞானம், விருத்திஞானம், பரோட்சஞானம், அபரோட்சஞானமென்னு ஞானவகைகளில் நிச்-

சயஞானமாவது அறிவு தன்னையேதானெனச் சுருதியுத்தி யாலோர்தல். பரஞானமாவது - தன்னை யுள்ளவாறு காண் டல். அபரஞானமாவது - சுசாதிசமுதலிய கற்பனையற்ற தெனத்தேர்தல். திரஞானமாவது - காண்பானாகிய ஞாதுரு, காணப்படுபொருளாகிய ஞானம், காட்சியாகிய ஞேயமென் னுந் திரிபுடியனைத்துஞ் சின்மாத்திரமாக விளங்குவதாம். சின்மாத்திரமென்றது - மனம் சொப்பிரகாசமாக விளங்க லெனப்படும்.

சொரூபஞானமாவது - சோதிஞானமெனப்படும். விரு த்திஞானமாவது - விசாரத்தாலுண்டாகுமாம். இது, சொரூ பஞானத்திலுறவாகிநின்று அஞ்ஞானத்தைக்கெடுத்துத் தா னும் அந்த வஞ்ஞானத்தோடொக்க நசிக்குமெனப்படும்.

பரோட்சம், அபரோட்சமென்னும் ஞானமிரண்டில், பரோட்சஞானமென்றது - ஆசாரியருபதேசத்தினால் பிரமத் தைக் குறிப்பாகத் தெரிந்துகொள்ளுதலாம். அபரோட்ச ஞானமென்றது - பிரமவிசாரஞ்செய்து எல்லா ஐயமுந்நீங்கி கூடஸ்த பிரமவைக்கியமான அத்துவித ஸ்வரூபமாந் தானாகவிள ங்குதலாம். பரோட்சமே பின்னர் அபரோட்சஞானமாகு மெனப்படும்.

தன்னையென்றது - நசிப்பதான தேகத்தில் நசியாமற்று ணுய்ச் சேர்ந்திருக்கிற பிரத்யேக ஆத்மமென்னுங் கூடஸ் தனும். தானென்றது - போதமாகிய அறிவு. அதாவது உட ம்பு முதலியவற்றை யானென்னுஞ் செருக்காகிய மயக்க வுணர்வாம். தன்னைமறந்த பேதமையே அஞ்ஞானமெனப் படும். தன்னைமறந்ததென்றது - கற்பிதமான அயலைத்தா னெனலெனப்படுவதாம். அறிவு - உண்மை, அயல் - கற்பிதம். அறிவுதையமென்றது - மெய்யுணர்வு. மெய்யுணர்வென்றது - அயலைத் தானென்றறியாது தன்னைத்தானென்றறிதலாம். "மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந, தம்மையறி யு மறிவதேயறிவு தானே" என்றார் தத்துவராயர். தஸ் மரணை, விஸ்மரணையெனுமிரண்டில், தஸ்மரணையென்றது - தன்னைத்தானுள்ளவாறுகாண்டல். இதுவே அறிவு. அறிவே

சுகம். அறிவு சச்சிதானந்தமாம். விஸ்மாணையென்றது: தன்னைத்தான் அயலாகக்காண்டல் இதுவே அறியாமை. அறியாமையே அநிர்த, சட, துக்கமெனப்படும்.

### சுகதுக்கமென்பது.

சுகமாவது :—எல்லார்க்கு நலமாக வுணரப்படுவது.

துக்கமாவது :—எல்லார்க்குந் தீங்காக உணரப்படுவது.

### ஆனந்தமென்பது.

எங்குந் தனித்திருத்தல் ஆன்மாவாதலால் ஆனந்தமாம். சகல துக்கங்களினின்றும் விடுபட்டவனுய் செய்யத்தக்கனவனைத்துஞ்செய்து அடையத்தக்கனவனைத்து மடைந்தனமென்னுஞ்சந்தோஷமே ஆனந்தமாம். "எங்கு மிருந்தபடியிருப்ப தியல்பே யென்னு மொருவேதம்" யென்றிருப்பதை யறிக.

### ஆனந்தபபிரிவுகளாவன.

பிரமானந்தம், வாசனானந்தம், விஷயானந்தமென ஆனந்த மூவிதமாம். பிரமானந்தத்தில் ஆத்மானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், அத்துவிதானந்தம், வித்தியானந்தமென வைந்தடங்கிநிற்குமெனப்படும். பிரமானந்தமாவது - சுழுத்தியிலுள்ள ஆனந்தம், அதாவது சுழுத்தியைப்போலச் சமாதியில் அகமுகமாய் ஆத்மா பிரமத்திற்சேர்ந்ததன்மயமாய்ச சுகத்தையனுபவித்தலின் அஃது பிரமானந்தமானதெனப்படும். வேதமுடிவான மகாவாக்கிய உபதேசத்தில் ரமிக்கும் யோகநித்திரையும், அகம்புறமின்றிப் பூரணமாக விளங்கும்போதுள்ள சுகமும், பிரமானந்தமேயெனவும்படும். வாசனானந்தமாவது - மயக்கமாகியநித்திரை தெளிந்துவருஞ் சமயத்துள்ள ஆனந்தம் அதாவது துயிலாகிய நித்திரையைப் போலச் சமாதியினின்று நீங்குஞ்சமயத்தில் பிரமானந்த சமஸ்காரத்தோடும் வருதலின் அச்சுகம் வாசனானந்தமாம். ஆனந்தமயனுன சீவன் பிரமானந்தசுகத்தைவிட்டு நீங்கிச் சாக்கிரத்தில் வெளிவருவதற்குக் காரணமேதெனில், பூர்வத்திற் செய்த கன்மமானது அப்படி வெளியிற்கொண்டுவருமென

வும்; அப்படி வெளிப்பட்டவனும் நன்மையான அச்சுகத்தை விட்டு நீங்கானெனவும், புறம்பிலுஞ்செல்லானெனவும், மறதியையுமடையானெனவும்படும். அன்றெனவும் ஆமெனவும் நின்று நித்திரைசெய்கின்ற சொற்பகாலமாகிய அதுதான் வாசனானந்தமெனப்படுவதாம். விடயானந்தமாவது - போகங்களில்வரும்ஆனந்தம் அதாவது சாக்கிரத்திற் சுழல்பவனுடைய துன்பநீங்கும்பொருட்டு படுக்கையில் நித்திரைசெய்யுஞ்சமயத்தில் மனமானது அந்தர்முகப்பட்டு அம்மனதில் சிதானந்தச்சாயைசேர்ந்து அவ்வண்ணம் மனமானது மகிழ்ச்சியாகுமாம். இதுவே விடயானந்தமெனப்படுவதாம்.

ஆத்மானந்தமாவது - எங்குந் தனதுபிரியவடிவமாகக் காணுஞ்சுகமாம். அதாவது சமாதியிற் றன்னிடத்திற்றானே சுகித்திருக்தலி னச்சுகம் ஆத்மானந்தமெனப்படும்.

முக்கியானந்தமாவது - சமாதியிலுள்ளசுகமாம், அதாவது அறிவறியாமையின்றி அறிவேமுதலாகச் சமாதியிற் சுகித்திருத்தலாம். இது நிசானந்தமெனவும்படும்.

நிசானந்தமாவது - உதாசீனத்திலுள்ள ஆனந்தம். இது முக்கியானந்தமெனவும்படும். உதாசீனம்-விருப்பு, வெறுப்பு.

அத்துவிதானந்தமாவது - அத்துவிதமான தன்னை நாடாநிற்கும் சுகமாம். சமாதியில் ஆனந்தம், ஆனந்தியெனு மிரண்டு மற்ற சுகமாகவிளங்குதலாம்.

வித்தியானந்தமாவது- மகாவாக்கியவிசாரத்திலுதயமான ஆனந்தமாம். சமாதியில் அது நீயென்பதின்றி ஆனந்தபோதமாய்ச்சுகித்திருத்தலாம். இதை ஞானானந்தமென்றுஞ் சொல்லப்படுவதாம்.

இந்த அஷ்டவித ஆனந்தங்களும் சமாதியில் நவநவமாக விளங்கலின் அதிசயானந்தமென்று கூறப்படுவதாம்.

இவ்வெண்விதானந்தங்களிலடங்காத வானந்தபேதங்களை பிரமானந்தலேசமென்றதெனப்படும். மனுடன், மனுடகந்தர்வன், தேவகந்தர்வன், பிதிர்கருமத்தேவன், கருமசுரன், சுரன், இந்திரன், பிரகஸ்பதி, பிரமன், விராட்புருடன், இர

ணியகருப்பன் ஆகிய இந்தப்பதினொருபேர்களின் ஒன்றுக்
கொன்று பேதமாயுள்ள இவ்வானந்தவகைகள் பிரமானந்த
மென்னும் கற்பாந்தவெள்ளமாகிய சாகரத்திரைபோல்வன
வாம். கற்பாந்தவெள்ளமென்றது பிரவாகச்சாகரம்; நிரதிசயா
னந்தக்கடலென்றறிக.

உ-ம். "போகத்தில் வருஞ்சுகம் விடயசுக நித்திரைப் போது
ளது பிரம சுகமாம், மோகத் தனந்தலிற் சுகம்வா சனைச்சுக முழுப்
பிரிய மான்ம சுகமாம், யோகத்தி லுளதுமுக் கியசுக முதாசின
முற்றசுக நிச்சுகம தாம, ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கிய
மெழுந்தசுக ஞான சுகமே" என்று கைவல்லியநவநீதத்திற்காண்க.

## வேதம் சத்தரூபமென்பது.

சத்தரூபமான வேதத்தையுண்டாக்கின தேவனைச் சத்
தத்தைவிட வேறில்லையென்றதெனப்படும். சத்தகுணமுடை
யது ஆகாயம். அது ஒன்றாய், நித்தியமாய், வியாபகமாயிருப்ப
தாம். சத்தம், ஒலிவடிவு எழுத்துவடிவென இருவகைத்
தாம். ஒலிவடிவு - பேரிகை முதலியவற்றிற் றோன்றுவது.
எழுத்துவடிவு - வடமொழி முதலிய பாடைவடிவாயுள்ளது.
இஃதெல்லா வழக்கிற்குங் காரணமானதெனப்படும் "சத்
தம் பிறந்திடத்தே சகலகலையும் பிறக்கும்" என்பதனாலறிக
வாக்கியப்பொருளுணர்ச்சி - சத்தத்தாலாய வுணர்ச்சி; அதற்
குக்காரணம் சத்தம் அணுவென்றது - மிகச் சிறியபொருள்
அணுத்திரளாவது - அணுக்கூட்டம். மொழிமுதற்காரண
மென்றது - சொல்லுக்கு முதற்காரணமாகின்ற அணுத்திரள்.
ஒலியாவது - அணுக்கூட்டத்தின் காரியமாகிய ஓசையெழு
த்து. எழுத்து - எழுத்தாகும். அது, முதலெழுத்து, சார்
பெழுத்தென இருவகைத்தாம்.

வாக்கியமாவது - பதங்களின் கூட்டம். பதமாவது - ஆற்ற
லுடையது. ஆற்றலாவது-இப்பதத்தா லிப்பொருளுணர்த்து
கவென்னு மிறைவன் சங்கேதம். சங்கேதம்-தேவர்மொழி.
வாக்கியமெனினும், தொடர்மொழியெனினு மொக்கும். தொ
டர்மொழி - வேதவாக்கியம், உலகவாக்கியமென விருவகைத்
தாம். வேதவாக்கியம் - இறைவன் வாக்கியமாதலால் எல்லாம்

பிரமாணமேயாம். உலகவாக்கியத்தின் உரியோன் வாய்மொழி பிரமாணமாம். ஏனையதப்பிரமாணமாம். உரியோன்-புருடன்.

வேதம் என்னும்பதமும், அத்தியாபகம், அந்தணர்வாக்கு, ஆதிநூல், ஆரணம், எழுதாக்கிளவி, ஒத்து. சாகை, சுருதி, நிகமம், மறை, முன்னூல் என்பனவும் ஒருபொருட்கிளவி.

சத்தம் என்னும் பதமும், அதிர்தல், அரவம், ஆரவாரம், இசை, இடி, இரை, உரை, ஒலி, ஓசை, குரல், சுருதி, தொனி, நாதம், முழக்கம் என்பனவும் ஒரு பொருட்கிளவி.

பிரமாணம் என்னும் பதமும், அளவை, ஆணை, சத்தியம், சபதம், தேவசாட்சி, விரதம் என்பனவும் ஒரு பொருட்கிளவி.

வேதா - கடவுள், பிரமன். வேதநூலுரைப்போன் - அத்தியாபகன். வேதமார்க்கம் - வைதிகம். வேதமார்க்கத்தி னடப்போர் - வைதிகர் வேதாந்தம் - வேதத்துட்பொருள். வேதாந்தி - வேதாந்தநூலுணர்ந்தோன். அந்தணர் - முனிவர். அந்தணன் - சிவன், பிரமன், வியாழபகவான்.

**வேதாகம, சாஸ்திர, புராண, இதிகாசாதிகளாவன.**

எல்லாவற்றிற்கு முதனூலென்னும் பேதமற்றதாகிய வேதம், வேதாகமமெனு மிரண்டில் சத்தரூபமானதாகிய வேதம் சர்வத்தையும் உலகருக்குப் பொதுவாகச் சொல்லப்பட்டதென்றும; ஆகமம் - சித்தாந்தம், சிறப்புநூலென்றும, இறைவன் வாக்கென்றுஞ் சொல்லப்படும். அனந்தசாகைகளையுடைய வேதத்தை அளவிட்டறிதற் கரிதென்று வேதவியாசபகவான் நாலாகபபிரித்து விளங்க வருளிச்செய்தாரென்றும்; உபவேதங்களும், வேதாங்கங்களும், ஸ்மிருதிகளும், உபநிடதங்களும், சாஸ்திரங்களும், ஆகமங்களும், உபாகமங்களும், புராணங்களும், உபபுராணங்களும், இதிகாசங்களுமாகிய விவையெல்லாம் வேதங்களிலிருந்து விரிந்தநூல்களென்றும்; வேதாகமங்களில் விரித்துச் சொன்னவத்தங்களையெல்லா மறிவற்கரிதானவைகொண்டு திருவருள்பெற்ற பெரியோரால் பிரித்துத் தெளிவுபெறச் சுருக்கிச சைவசித்தாந்த சமயநூல் செய்யப்பட்டதென்றும்; வேதத்தைப் பின்

சென்று தனித்தனி தாம்தாமறிந்தவளவில் தங்கள்தங்கள் கருத்துக்குத்தக்கபடி சமயபேதங்களையு மததற்கேற்ற பொருள்களையுஞ் சாதித்துச் சொன்ன உலகாயதமுதலிய சமயிகள் நூல்களனந்தமென்றுங் கூறப்படும்.

ஆகமம் - கல்வி, இறைவன்வாக்கு, சித்தாந்தம் என்பன ஒரு பொருட்கிளவி.

இறைவன் - கடவுள், குரு, மூத்தோன் என்பன ஒரு பொருட்கிளவி.

சைவமென்றது - சிவசமயம். சைவமென்னும் பதததுக்குப் பொருள் அறிஞர் சிவத்தோடு சம்பந்தமெனப்படுவதாம். சைவமானது - சாமான்னியசைவம், மிசிரசைவம், சுத்தசைவம், வீரசைவமென நான்குபிராகாரமாம்.

உ - ம். "வேதமோ டாகம மெய்யா மிறைவனூ, லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றன்னுக, நாத னுரையிவை நாடிலிரண்டந்தம், பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே" என்றும், "வேத நூல சைவநூ லிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க, ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுச்சைவ மருஞ்சிறப்பு நூலா" மென்றும், 'அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினு லளப்பரிதா மப்பொருளை யானருளா லணுக்க, டருவர்கள்பின் தனிததனியே தாமறிந தளவிற் றர்க்கமொடுத் தரங்களிலுற் சமயஞ்சா திதது" என்றும் சி - ஞா - சியிலறிக. "சைவஞ் சிவத்துடனே சம்பநக மாதலென" என்றும், "சைவ சமயமே சமயம் சமயா தீதப் பழம்பொருளை" என்றுசொல்லப்பட்டிருப்பதையுமறிக.

நான்கு வேதங்களாவன.

பவுடிகமாகிய இருக்கு, தைத்திரியமாகிய யசுர், கீதவேதமென்னும் கௌசிகமாகிய சாமம், அதர்வணம் என வேதங்கணான்கு. நான்கும் - ஞானகாண்டம், கருமகாண்டமெனவிரண்டு பிரிவுகளாயிருக்குமாம்; சீவ, பர, ஐக்கியத்தைச் சொல்லுவனவாம்.

"நால்வகைவேதம் இருக்கு தைத்திரியம் சாம மதர்வணமெனச் சாற்றினர் புலவர்" என்றிருப்பதையறிக.

உபவேதங்களாவன: அருக்கதம், ஆயுள், காந்தர்வம், தனுவென நான்கு.

வேதாங்கங்களாவன: சந்தோபிஜிதம், சோதிடம், நிகண்டு நிருத்தம், மந்திரம், வியாகரணமென ஆறு.

வேதஸ்மிருதிகளாவன: ஆரிதம், காச்யபம், காத்யாயனம், கௌதமம், சங்கம், சம்வர்த்தம்; சனம், தார்க்ஷாத்ரேயம், பராசரம், பாரத்வாசம், ப்ரகஸ்பதி, மனு, யமம், யாக்ஞவல்கியம், வசிட்டம், விஷ்ணு, வியாசம் என்பனவாம்.

உபநிடதங்களாவன: வேதங்களிற்சொல்லும் ஞானகாண்டத்தைப்பிரதிபாதிக்கின்றவஸ்து நிர்ணயத்தைஅவ்வம்முனிவர்கள் தங்கள்தங்கள் பேராற்கூறியுள்ளது உபநிடதங்களெனப்படும். அவையாவன: அங்கிசம், அமிர்தபிந்து, ஆசுவாலாயநீயம், ஆருணி, கடம், காத்யாயனம், காலாக்கினி, கிப்புரோட டியம், கைவல்லியம், சாங்கியாயநீயம், சிரவணம், சிவசங்கற்பம், ஸ்ரீருத்ரம், சுவேதாஸ்வரம், சௌனகீயம், தேஜோபிந்து, நாராயணம், பகுபஞ்சம், பரமாங்கிசம், பாஸ்கரம், பாரகம், பிரகதாரண்ணியம், பிரமம், பிரமபிந்து, பிரமஜாபாலம், போதாயநீயம், மாண்டுகம், முண்டகம், மௌண்டிகம், வல்லி, வாஸிராயநீயம், வார்ச்சிபாயநீயம்என முப்பத்திரண்டு. உபநிடதம் உபநிஷத்தெனவும்படும்.

ஆகமங்களாவன: அஜிதம், அஞ்சுமான், அனலம், காமிகம், காரணம், கிரணம், சகஸ்திரம், சந்தானசர்வோத்தமம், சந்திரஞானம், சித்தம், சிந்தியம், சுப்ரபேதம், சுவயம்புவம், சூக்குமம், நிப்தம், நிசுவாசம், பாரமேச்சுரம், புரோற்கிதம், பேதம், மகுடம், யோகஜம், ரௌரவம், லலிதம், வாதுளம், விஜயம், விமலம், விம்பம், வீரம், என இருபத்தெட்டெனப்படும் இவற்றுள், கௌசிக முனிவர்க்கைந்தும், காசிபமுனிவர்க்கைந்தும், பாரத்வாசமுனிவர்க்கைந்தும், 'கௌதமமுனிவர்க்கைந்தும், அகத்தியமாமுனிவர்க்கெட்டுமாக ஈசுரனாற்சொல்லப்பட்டதெனப்படும்.

இந்தவிருபத்தெட்டாகமங்களும் பதி, பசு, பாச மீர்க் கத்தினுண்மையை யறிவிப்பதெனப்படும். பதி - நிமித்த காரணகர்த்தா, பசு - சீவன், பாசம் - உடலெனப்படும்.

உ - ம். "நரைக்கவரு முடல்பாசம் பசுசிவன்றான் நவில்வர் பதி யானதுவே பரமதென்று" ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிக ளுடலறி விளக்கத்திலும், "முன்றென்ற ரொன்றேகா னொன்றே பதிபசுவா, மொன்றென்ற நீபாசத் தோடுளைகாண்" என்று சிவஞானபோதத் திலுங்காண்க.

உபாகமங்களாவன: கலை, சத்தி, சிவம், சிவாக்கியம், சொற்பிரகாசம், பரம், பாதபபாரகம், பாரதந்திரம், பிரகாச மென வொன்பதெனப்படும்.

சாஸ்திரங்களாவன: வேதங்களும், உபவேதங்களும், வேதாங்கங்களும், ஆகமம், உபாகமங்களும் கூறியுள்ளவிஷ யங்களின் சாராம்சங்களைச்சொல்லுமாம். சாஸ்திரங்கள்-பாட்டம், பிரபாகரம், பூர்வமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை, வைசேடிக்கம் வேதாந்தமென ஆறும். இவை வைதீகசாஸ்திரங்க ளெனப்படும். இந்தஆறில் மீமாஞ்சை சைமினிமுனிவரானும், நியாயம் கௌதமமுனிவரானும், வைசேடிகம் கணாதமுனிவ ரானும், சாங்கியம் கபிலமுனிவரானும், யோகம் பதஞ்சலி முனிவரானும், வேதாந்தம் வியாசமுனிவரானும் செய்யப் பட்டதெனப்படும்.

பாஞ்சராத்திரம், வைகாநசமென்னு மிரண்டும் வைணவா கமங்களெனப்படும். பிரதானதத்துவங்கள் - சித்து, அசித்து, ஈஸ்வரன் என மூன்றாகச் சொல்லப்படும். சித்து - ஆன்மா, அசித்து - பிரகிருதி, ஈஸ்வரன் - பரதத்துவனும்.

புராணங்களாவன: இலிங்கம், ஸ்காந்தம், கூர்மம், சைவம், பிரமாண்டம், பௌஷிபம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமனமாகியபத்தும் சிவபுராணங்களாம். காருடம், நாரதீயம், பாகவதம், வைணவமொனுநான்கும் விஷ்ணு புராணங்களாம். பதுமம், பிரமம், எனுமிரண்டும் பிரமபுரா ணங்களாம். பிரமகைவர்த்தம், சூரியபுராணமாம். ஆக்கினே

யம் ௨ அக்கினிபுராணமாம். ஆக புராணங்கள் பதினெட்டெனப்படும். வேதவியாசமுனிவர் நாலுலட்சசாகைகளாக ஓதியுள்ளாரென்று சொல்லப்படும்.

உபபுராணங்களாவன: வைதீககர்மங்களையே கூறப்படுபனவாம. இவை இருடிக ளதாவது முனிவர்களாலியற்றப்பட்டனவாம். அத்திரியம், கபிலம், ஸ்காந்தம், கௌசிகம், சாம்பரம், சிவதன்மம், சோமம், தூர்வாசம், நாரசிங்கம், நாரதீயம், பார்க்கவம், பாராசர்யம், பிரமாண்டம், மானவம், மாரிசம், வசிஷ்டம், வாயவ்யம், வாருணம் எனும் பதினெட்டாம்.

இதிகாசங்கள் - பாரதம், இராமாயணமெனப்படும்.

கலைஞானங்களாவன: அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தருமசாத்திரம், யோகசாத்திரம், மந்திரசாத்திரம், சகுணசாத்திரம், சிற்பசாத்திரம், வைத்தியசாத்திரம், உருவசாத்திரம், மதனசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரிட்சை, கனகபரிட்சை, இரதபரிட்சை, கசபரிட்சை, அசுவபரிட்சை, இரத்தினபரிட்சை, பூமிபரிட்சை, சங்கிராமவிலக்கணம், மல்யுத்தம், ஆக்ருடணம், உச்சாடனம், வித்துவேடணம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கவுத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிச்யம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கனனத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப்பிரயோகம் என அறுபத்துநான்கெனப்படும்.

## பரசமயங்களாவன.

வேதத்தைப் பின்சென்று சமயபேதங்களையும், அதததற்கேற்ற பொருள்களையும், தங்கள் தங்கள் கருத்துக்குத்தக்கபடி

சாதித்துச்சொன்ன பரசமயங்கள் ஆறெனப்படும். அவை
யாவன: உலகாயதன், புத்தன், சமணனென்னும் அமணன்,
மீமாங்கிசன், மாயாவாதி, பாஞ்சராத்திரி என்பனவாம். இவ்
வாறும் புறச்சமயங்களெனப்படும். இதனிற்பிரிவு புத்தரிற்
பிரிவு, சவுந்திராந்திகம், நிகண்டாவாதம், சமணரிற்பிரிவு,
அஜ்ஜீவகம், யோகசாரம், மாத்மிகம், வைபாடிகமாம்; இவ்
வாறும் புறபுறச்சமயங்களாம்.

உட்சமயங்கள்: ஐக்கியவாதி சைவம், காபாலம், மாவிர
தம், பாசுபதம், வாமம், வைரவமெனவாறும். உட்புறச்சம
யங்கள்: ஈஸ்வர அவிகாரவாதம், சங்கிராந்தவாதம், சிவசம்
வாதம், சிவாத்விதவாதம், பரிணாமவாதம், பாஷாணவாதம்
எனவாறும். ஆக சமயங்களிருபத்தினாலு பேதமெனப்படும்
ஒன்றையொன்றொவ்வாத சமயநெறிகளெனப்படும்.

## சமயநூல்களுக்குப் பிரமாணங்களாவன.

உ-ம். உலகாயதன் சமயநூலுக்குப்பிரமாணம்: "இந்திர
புரோகித வியம்புமொரு நூலின், றந்தர மெனாதறி வினோடருளி
லாமற், சந்தனை புயத்துமண மாலைகட யங்க, வுந்தியுல கத்துளுல
காயத னுரைப்பான்" என்றும், புத்தன் சமயநூலுக்குப்பிரமாணம்:
"நீதியார் வேத நூலின் னெறியலா வரங்க ளனை, மோதியோ ரைந்து
சீல முடையரா யுடல மூடிப், போதிநீண் மரத்தின் மேவு புத்தர்நால்
வரினும் வைத்துச், சாதிசா ரிலாத கொள்கை சவுந்திரா நிகன்முன்
சாற்றும்" என்றும், அமணசமயநூலுக்குப்பிரமாணம். "அந்தவாய்
மொழியி னலவன்கரண மாதியோகமுத லானநூ, லிந்தமாணிட
மயங்கடாதவகை யிங்கியம்பி னிதன்பொருள், வந்தகாலமுயிர் தன்
மதன்மபற மாறவிண்மருவு புற்கலம், பந்தம்வீடினோ டனாதியா
யிவை படைப்பதின்றியுள பத்துமே" என்றும், மீமாங்கிசன் சமய
நூலுக்குப்பிரமாணம்: "வேதமே யோதி நாத நிலையென்று விண்ணி
லேறச், சேதமாக கன்மஞ் செய்யச் செயமுனி செப்பு நூலி, னிதியே
கொண்டு பட்டா சாரிய நிகழ்த்து நீர்மை, யோதநீர் ஞாலத் துள்ளோ
ருள்ளவா றுரைக்க லுற்றும்" என்றும், மாயாவாதிசமயநூலுக்குப்
பிரமாணம்: "நானே பிரமமென் றுரைத்து ஞாலம் பொய்த்தே னென
வெண்ணி, யூனே புகுந்து நின்றுயிர்கட் குபதேசங்க ளுரைத்தவரு,
மானா மதிகே டனுமாய மாயா வாதி பேயாகித், தானே யுரைக்கு
மன்னூலி னுண்மை தன்னைச் சாற்றுவாம்" என்றும், பாஞ்சராத்திரி
சமயநூலுக்குப்பிரமாணம்: "ஆதியா யருவ மாகி யகண்டபூ ரண

மாய் ஞானச், சோதியாய் நின்ற மாயன் சுவேச்சையா லுருவுகொண்டு, நீதிபாரி கருணை யாலே நீள்கடற் றுயின்று நூலு, மோதினுனென்று பாஞ்ச ராத்திரி யுரைப்ப னுற்றே" என்றும் சி - ஞா - சி - நிரம்பவழகியருரையிலறிக. "உலகச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாம், கலைக் கடலுட் கிடந்து தடுமாறு" மென்று மாணிக்கவாசகர்திருவாசகத்திலும், "பேதித்த சமயமோ வொன்று சொனபடி யொன்று பேசாது" என்று தாயுமானுர்பாடலிலும் காண்க.

பாஞ்சராத்திரம், சாங்கியம், நியாயவைசேடிகம், பாதஞ்சலம், மீமாஞ்சம், வேதாந்தமெனுமாறும் வேதசம்பந்தமெனவும், உலகாயதம், புத்தம், ஆருகதமாகியமூன்றும் வேதத்துக்குப்புறம்பெனவும்படும்.

## பாஞ்சராத்திரம்.

### வைணவசித்தாந்தம்.

பிரதானதத்துவங்கள் சித்து, அசித்து, ஈஸ்வரன் என மூன்ருகச் சொல்லப்படும். சித்து - ஆன்மா, அசித்து - பிரகிருதி. ஈஸ்வரன்-பரதத்துவனும். பிரணவம் - அகாரம், உகாரம், மகாரமெனப்படும். அகாரம்-ஈஸ்வரன், உகாரம்-பிராட்டி, மகாரம், சீவனுகிய ஆன்மா. ஆத்மாவை சமஷ்டிவாசகமென்றும், ஜாதி ஏகவசனமென்றும், ஞாதாவென்றும், தேகத்துக்கன்னியனென்றுஞ் சொல்லப்படுமாம். ஆத்மாவாகிய சித்து தேகேந்திரிய மனப்பிராண புத்திவிலட்சணமாய், அஜடமாய், ஆனந்தரூபமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்தியமாய், நிர்வயமாய், நிர்விகாரமாய், ஞானஸ்ரியமாய், ஈஸ்வரனுக்கு நியாம்யகமாய், தார்யமாய், சேஷமாயிருக்குமெனப்படும். அசித்தென்பது - ஞானசூனியமாய் விகாராஸ்பதமாயிருக்குமாம். அசித்து விசேஷம் பிரகிருதியென்றும், ஞானவிரோதியாகையால் மாயையென்றும், அதுவே விகாரங்களைப் பிறப்பிக்கையால் அவத்தையென்றும் மூன்ருகச் சொல்லப்படுமாம். மூன்றும் விசித்திரசிருஷ்டி பண்ணுகையாலே "பொங் கைம்புலனும் பொறியைந் துங்கன்மேந்திரிய மைம்பூதம், இங்கிவ்வுயிரே பிரகிருதி மானங்கார மனங்களே" என்கிறபடி இருபத்தினுலுதத்துவங்களாயிருக்குமாம்.

சாத்விகம், ராஜசம், தாமசமென்னு முக்குணங்களி லுண்டான தைசத, வைகரி, பூதாதி, எனும் அகங்காரங்கள் மூன்றில் தைசதத்தில் சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்கு வை, ஆகாரணமென்னு ஞானேந்திரியங்களைந்தும், மனமும்; வைகரியில் - வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தமென் னுங் கன்மேந்திரியங்களைந்தும்; பூதாதிஅகங்காரத்தில் சத் ததன்மாத்திரையும், ஆகாயமும்; இதில்நின்று ஸ்பரிசதன் மாத்திரையும், வாயுவும், இதில்நின்று ரூபதன்மாத்திரையும், தேஜசும்; இதில்நின்று ரசதன்மாத்திரையும், அப்புவும்; இதில்நின்று கந்ததன்மாத்திரையும், பிருதிவியுமுண்டாமெ னப்படும்.

இருபத்தைந்தாந்தத்துவம் ஞானவாச்சியமாயிருக்கையால் மகாரவாச்சியன் ஆன்மாவென்றும், இருபத்தாறுந் தத்துவம் அகாரவாச்சியன் ஈஸ்வரனென்றுஞ்சொல்லப்படும். "பஞ்ச வன் சோயம்புருஷம்" என்றிருப்பதையறிக. ஈஸ்வரன் சக வுற்பத்திநிமித்தம் வாசுதேவன், சங்கிருஷணன், பிரதியும் னன், அனிருத்தனென நான்குவடிவமாயினராம்.

தத்துவஞானம்பிறந்து உச்சீவிக்கும்போது ஆத்மஸ்வ ரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதிஸ்வரூபமெனு மைந்தையு மறியவேண்டுமெனப்படும். முத்தனுக்கு ஈஸ்வரநியமனத்தால் சிருஷ்டி, திதி, சங்காரம் பண்ணவல்லவராய், பரவியூகாதி சர்வாவத்தைகளிலும்தொட ர்ந்தடிமைசெய்யக்கடவராய், கோயில்கொள்தெய்வங்கள்தொ டக்கமாயமரர்களாவார்களெனப்படும்.

பாஞ்சராத்திரிகள் பிரகிருதிக்குமேல் பரமபதத்திலே அரி யிருப்பர் அவருடையசர்வகுணசாம்யத்தைநித்தியமாகப்பெ ற்று அவருடையசன்னிதானத்திலிருப்பதேமோட்சமென்னு ஞானத்தால் தேகாந்தத்திலே பிரகிருதிதத்துவத்தையடை வர்களெனப்படும்.

### சாங்கியமதசித்தாந்தம்.

இதுவே ஈசுரசாங்கியம், நிரீசுரசாங்கியமென விருவகைப் படுமாம். இவற்றுள் முன்னது, பாகவதம்மூன்றாங்கந்தத்திற்

கூறப்படும். இது கருத்தமரிஷியின் புத்திரரான கபிலரா லும், பின்னது மற்றொரு கபிலராலுஞ்சொல்லப்பட்டதென்க.

புருடனுகிய ஆன்மா பலவென்றும், வொவ்வொன்றும் வியாபகமேயென்றும், புருடன் வொன்றுக்குங் காரணமாகா மையின் பிரகிருதியன்று, காரியமாகாமையின் விக்ருதியு மன்றென்றும், பந்தமோட்சங்கள் ஆத்மாவினிடத்திற் கற்பிக்கப் படுகின்றனவே யன்றி பரமார்த்திகத்திலதாவது உண்மையி லில்லையென்றும், அவிவேகத்தாற் சித்திக்கிற போகத்தால் ஆத்மா, கர்த்தா போக்தாவென்று சொல்லப்படுகிறதென்றும், புத்தி ஆத்மாவுக்கு வேறென்றும், ஆன்மா யிருபத்தைந்தாந் தத்துவமென்றறிந்த விவேகத்தாலே மோட்சமென்றும், புருடதத்துவம் பிராப்தியென்றுஞ் சொல்லப்படும்.

இது கொண்டுள்ள தத்துவங்கள்—பிரதானம், மகதத் துவம், அகங்காரம், சத்தாதிபஞ்சதன்மாத்திரை, பிருதி வியாதி பஞ்சபூதங்கள், சுரோத்திராதி பஞ்சேந்திரியங்கள், வாக்காதி பஞ்சகன்மேந்திரியங்கள், மனம், புருடன் ஆக யிருபத்தைந்தெனப்படும். புருடன்-ஆன்மாவெனினும் புத்தி-மகதத்துவமெனினு மொக்குமென்க.

### பாதஞ்சலம்.

பதஞ்சலிபகவான்சொன்ன பாதஞ்சலமாகிய யோகசாத் திரம் - பிரகிருதியும், பிராக்ருதமும், ஆன்மாக்களும், பந்த மோட்சமா யிருக்குமென்றும், இந்த ஞானத்தினுலும் ஆதி யோகமும், யோகபரிபாகமுமாகிய இருபத்தாறுந் தத்து வம் ஈசுரனொருவனுளனென்றும், இவனுக்கான்மாக்களிற் காட்டில் நின்மலமான சித்தமென்று பெயரையுடைத்தாய், கேவலஞ் சாத்விகமான விக்ரகத்தை யுடையராய், ஆன்மாக் களுக்கு ஞானேபதேசகரா யிருக்குமென்றறிகையே முத்தி யாதலால புருடதத்துவப்பிராப்தியே பின்னர் கூறப்பட்ட தென்றுஞ் சொல்லப்படும்.

### மீமாஞ்சம்.

சைமினிபகவான் சொன்ன கன்மமீமாஞ்சம் ஆன்மா நித்யமென்றும், சுருதி விகிதமாயிருக்கிற கன்மத்தினலே

ஸ்வர்க்காதி போகங்களைப் புசித்திருப்பரென்றும், அவர்கள் நித்ய நைமித்ய கன்மானுட்டானத்தாலே பாகதியுண்டாகை யால் தன்மாத்திரையடைகிறதே முத்தியென்றுஞ் சொல்லப் படுவதாம். பூர்வமீமாஞ்சர் — யக்யாதி கன்மங்களினாலே மோட்சமென்பராம். பூர்வசைவர்—தீட்சாதிகன்மத்தினாலே மோட்சமென்பராம்.

கருமயோகிகளுக்கு ஆதியாத்மீகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகமென்னுந் தாபத்திரியத்தையுமறிந்து நீங்கின விடத்திலுண்டாகு ஞானமூன்று, இஷ்டமாயிருக்கிறவர்க ளுடைய உபதேசத்தினாலே யுண்டாம் ஞானமொன்று, தானே பூர்வசென்ம வாசனாரூபமான சாஸ்திரத்தை யாலோ சனைப்பண்ணுகையினாலே யுண்டாம் ஞானமொன்று, தத்தம் மதப் பிரவர்த்திகளாயிருக்கிற குருபதேசத்தினாலே யுண் டாம் ஞானமொன்று, தான, ஜப, தீர்த்த, யாத்திரை, தேவ தாபக்தி யாதி சத்கருமங்களினாலே சித்தசுத்தித்துவாரா வுண்டாம் ஞானமொன்று ஆக எட்டுவிதத்தினாலும் ஞானம் சித்திக்குமென்கிற தெனப்படும்.

ந்யாயவைசேடிகம். (நையாயிகர். வைசேடிகர்.)

கௌதமமுனிவராகிய அக்கபாதர், கணாதர் இவர்களா லியற்றிய நியாயம், வைசேடிகமென்னு மிரண்டில் நியாயம்— மனஸ்பரியந்தமே தத்துவமென்னும் ஞானத்தால் தேகாந் தத்திலே மனஸ்தத்துவ புவனத்தை யடைவதென்றும், வை சேடிகம் — அகங்காரமே ஆன்மாவென்னு ஞானத்தால் தேகாந்தத்திலே அகங்காரபுவனத்தை யடைவதென்றுஞ் சொல்லப்படுகின்றனவாம். நியாயம், வைசேடிகமிரண்டும் தருக்கநூலெனப்படும். இவற்றை யனுசரித்தே தருக்கசங் கரகநூல்கள் செய்யப்பட்டனவாம்.

இந்திரிய சைதன்னியவாதிகள்—சரீரத்துக்கு வேறாயி ருக்கிற விந்திரியமே ஆன்மாவென்னும் ஞானத்தால் அந்த விந்திரியத்தையடைகிறதே முத்தியென்றும், சிலர் - அந்த விந்திரியத்துக்குக் காரணமான மனதுதானே ஆன்மாவென் னும் ஞானத்தால் அந்த மனதையடைகிறதே மோட்சமென்

ரும்; சிலர் - நானென்கிற பிரத்யக்ரூப ஞானத்தினாலே சித்தத்தையறிந்து நீங்குகிறதே முத்தியெனறும்; அகங்கார சைதன்னியவாதி — பிராணாதிவாயுக்கள் ஆன்மாவென்னு ஞானத்தால் அதனையறிந்து அந்த தத்துவத்தையடைவதே மோட்சமென்றும்; புராணத்தை முக்கியமாகக்கொண்ட ஸ்மார்த்தர் - பூதண்டமாகிய பஞ்சபூதங்களுக்குக் காரணமான பஞ்சதன்மாத்திரையே பிரமமென்னு ஞானத்தால் தேகாந்தத்தில் தன்மாத்திரையிலுள்ள புவனத்தை யடைவர்களென்றும்; கௌளயாமள சாத்திரிகள்—இங்கைமைதுனதியே புருடனுக்குப்பத பிரயோசனமெனப் புத்திபண்ணி, ஐந்துபூதமுஞ் சத்தியமெனக் கருதி அதுவே யான்மாவெனக் கருதிய ஞானத்தால் ஆகாசபிசாச பதத்தை யடைவ. ரென்றும்; சிலர் - அக்கினி, சூரியன், இந்திரன் முதலாயினரையே வழிப்பட்டவர்கள் பதத்தை யடைந்தவர்களைப்போலவிருக்கின்றது தானே முத்தியென்றும்; இப்படியாகப் பலவிதங்களாகச் சொல்லப்படுகின்றனவாம்.

## மாயாவாதி.

பிரகிருதியிலேயதாவது பிரதானத்திலே யடக்கிக்கொண்டிருக்கிற தன்னை, அந்தப பிரதானத்துக் கன்னியமான புருஷன் தானென்றறிகிறதே மோட்சமென்னு ஞானத்தால் தேகாந்தத்திலே அந்தப புருடதத்துவத்தை யடைவரெனப்படும். பிரகிருதி—இயல்பு, பிரதானம், மாயை.

## உலகாயதம்.

வியாழபகவான் சொன்ன சாக்தமென்னும உலகாயத சாத்திரம்—பிருதிவி, அப்பு, தேயு, வாயுவென்னு நாலுபூதங்கள் கூட்டுறவாலுண்டான வுடலே ஆன்மாவென்னு ஞானத்தால் மேலான வாயுபதத்தையடைவது மோட்சமெனபபடும்.

ஜோதிஷர்—ஆகாசங்கூட வைந்துபூதமேயுள்ளதென்னு ஞானத்தால் தேகாந்தத்தில் நட்சத்திரபதத்தை யடைவராம்.

## புத்தமெனும் பௌத்தம்.

சுத்தர்சொன்ன புத்தமெனும் பௌத்தம் — புத்தியினுடைய வியாபாரசொரூபமும், புத்தி நிச்சயமாயிருக்கிற

ஞானத்தை ஜலப்பிரவாகம்போல நித்தியமா யநுபவிக்கப் படாநின்ற ஞானசந்ததி, சுகதுக்கந் திரிசியமின்றியே, சுகத் திற் சந்ததியே ஆன்மாவென்றறிகையால் இருபத்துமூன்றாந் தத்துவமாகிய புத்திதத்துவமே பிரதானமெனக் கருதியிருக் கிற ஞானசந்ததிநசிக்கவே மோட்சமெனப்படுவதாம்.

## சமணமெனும் அமணம்.

அருகதேவன் சொன்ன சமணம் - அருகதேவன் ஆதி சுத்தனாயிருப்பனென்றும், ஜீவனென்பதொரு பதார்த்தம் அநாதியாகவுடையமோகம், அந்தாரயம், கோத்திரம், நாமம், ஆயுஷ்யம், வேதநீயம், தரிசாவர்ணியம், ஞானவர்ணியம் என்று சொல்லப்பட்ட பேதங்களெட்டினுங்கூடி யிருக்கு மென்றும், இவனனே சாந்தவாதியென்றும், அருகனைப் போல பந்தங்களை விடப்படுவனென்றும், குணன்மகஞானத் தினாலே தேகாந்தத்தில் குணதத்துவத்தை யடைவதென் றுஞ் சொல்லப்படும்.

## இதிகாச பாரத புராணங்கள்.

வேதவியாச பகவான்சொன்ன இதிகாச, பாரத, புராணங் கள்—பிரகிருதி தத்துவ மிருபத்தினாலுக்கும் பிரகிருதி வே ருதலா லதற்குக் காரணமென்றும், இருபத்தைந்தாந் தத்து வம் ஆத்மாவென்றும், இருபத்தாறாந்தத்துவம் பொருளென் றெண்ணப்பட்ட ஈஸ்வரனென்றும், இருபத்தேழாந்தத்துவம் பொருளென்றெண்ணப்பட்ட பரமேஸ்வரனென்றும், இப்படி யாகப் பதார்த்தவிவேகம்பண்ணி யறிகிறதே முத்தியென் றும், புருடதத்துவம் பிராப்தியென்றுங் கூறப்படுவனவாம்.

## சைவசமயம்.

சிவமே தெய்வமென்னும் சத்தியத்தை யுடைத்தான சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவ மென்கின்ற சமயங்களாறும், சுத்தவித்தையாதி சிவதத்து வமைந்து, காலமாதி வித்தியாதத்துவமேழு, பிரகிருதி தத் துவங்களாகிய பிருதிவியாதி ஆன்மதத்துவ மிருபத்தினாலு மாக முப்பத்தாறு தத்துவங்களில் நிலைபெறுமென்றும், சித் தாந்தத் தெய்வமாகிய சிவம் முப்பத்தாறையுங்கடந்து நிற்கு

மென்றும், சைவாகமத்திலொழிய மற்றச் சாத்திரங்களில் முப்பத்தாறு தத்துவங்களில்லையென்றும், உலகாயதன் முதலாயின சமயத்தெய்வங்களெல்லாம் பூதமுதல் அசுத்தமாயா தத்துவமீறாக முப்பத்தொருதத்துவங்களில் நிலைபெறுமென்றும், அவ்வச்சமயத்தாருக்கு அவ்வத்தெய்வங்கள் நிலைபெறுந்தத்துவமே முத்தித் தானமெனப்படுமென்றுங் கூறப்படும்.

உ-ம். "மொய்தருபூதமாதி மோகினியந்தமாகப், பொய்தருசமயமெல்லாம் புக்குநின்றிடும்புகன்று, மெய்தருசமயமாதி யிருமூன்றும் வித்தையாதி, யெய்து தத்துவங்க ளேயு மொன்றுமின் றெம்மிறைக்கே" என்றும், "எண்ணுக பிரதானத்தை இருபத்தினாலாம் வேறென், றெண்ணுக புருடன்றன்னை யிருபதனைந்தாவனன்றே, எண்ணுகயிருபத்தாறு பொருளென வீசன்றன்னை, எண்ணுகவினையிலீச னிருபத்தேழாவனென்றே" என்றும் சி-ஞா-சி-யிலறிக.

## வேதாந்திகள்.

வேதாந்திகள்—பரமபிரகிருதியாகிய பிரமமே பரமார்த்தமாக வுள்ளது, இந்தப் பிரமத்தினிடத்திலே நின்றுஞ் சீவான்மாக்களும், பிரபஞ்சமுந்தோன்றும், மற்றுண்டானதெல்லா மசத்தியம், அஃதென்போல வென்னில்? சுத்திகையினிடத்தில் ரசிதபுத்தி பண்ணுமாறுபோல ஜகத்துக்குபாதானம் மாயையென்பது. தான் பிரமத்தைப்போலச் சத்தியமுமன்று, சசவிஷாணம்போல வசத்தியமுமன்று, இம்மாயைக் காட்டில் இலக்கணமான பிரமசொரூபத்தை வேதாந்தஞானத்தினாலே யறிகையாற் புருடதத்துவப் பிராப்தியையடைவதே மோட்சமென்பர்களாம். கொள்ளுந் தத்துவங்களிருபத்தைந்தெனப்படும். அவையாவன — சுரோத்திராதி ஞானேந்திரியமைந்து, வாக்காதி கன்மேந்திரியமைந்து, சத்தாதி தன்மாத்திரையைந்து, பிருதிவியாதி பூதமைந்து, மனாதி அந்தக்கரணம் நாலு, ஆன்மாவொன்று ஆக யிருபத்தைந்து. மற்றும் வருவனவற்றுற் காண்க. சசவிஷாணமென்றது—முயற்கொம்பு.

## சமயசாஸ்திர நூனுதி, சத்திய நெறி சார சங்கிரகம்.

சொல்லப்பட்ட சமயங்களும், பொருள்களும், சாஸ்திரங்களு மொன்றோடொன் றொவ்வாமற் பலவாகச் சொல்லு

நகயினுமேல யெந்தச் சமயத்தை, யெந்தப் பொருளை, யெந்த நூல்களை, யுண்மையாகக் கொள்ளுவதென்னில்? ஆன்மாக்கள் பக்குவத்துக்கீடாக இப்படி பலவாகப் பரமேஸ்வரன் அருளிச்செய்தாரென்கிற முறைமையை, யொருசமயத்தி லறிப்படுவது சைவசமயமே யென்றும்; சைவசமயமே சமயமென்றும், சைவசித்தாந்தமே சித்தாந்தமென்றும்; சர்வத்தையுஞ் சொல்லுவதாகிய வேதாகமங்களிற் சொல்லப்படும் சமயப்பொருள்களெல்லா மடங்கி நிற்குமென்றும்; அந்த வேதாகமங்களிரண்டும் பரமேஸ்வரனுடைய ஞானமாகிய சீர்பாதத்தின்கீழே யொடுங்கி நிற்குமென்றும்; இங்கு முத்தியென்று சொல்லுவது, ஞானத்தினுமேல பரமுத்தியாகிய சாயுச்சியத்தை யடைவதேயதாவது, கர்த்தாவினுடைய சீர்பாதத்திலே, பொருந்தி பிரிவறக்கலந்திருக்கிற முத்தியே முத்தியென்றும்; பிராக்ருத, காமிக, வாசிக, மானசீக, சடசம்பந்த கன்மங்களாகிய வினையெல்லாம் பாச பசு ஞானங்களாதலின் பந்த முறுத்துவனவேயன்றி வீடெய்துவிக்கமாட்டாதென்றும்; பந்தநீக்கமே முத்திநிலை கைகூடுமாகலின் திருவடிஞானமொன்றே முத்திக்குச் சிறந்தகாரணமென்றும், மற்ற ஞானங்களெல்லாங் குற்றத்தைப் பொருந்தின ஞானமாகையால் ஜநநத்தைப் போக்காதென்றும்; சாங்கியர்சொல்லும் ஸ்வதந்திரஞானம், பாதஞ்சலர் சொல்லும் ஸ்வதந்திரயோகம், வேதாந்திகள் சொல்லும் ஸ்வதந்திர சன்னியாசம், மீமாஞ்சர் சொல்லும் ஸ்வதந்திரகன்மம், பூர்வமீமாஞ்சர் சொல்லும் யாகாதிகன்மங்கள், பூர்வசைவர்சொல்லும் தீட்சாதிகன்மங்களாகிய வினையெல்லாமும், பரசமயிகள தந்தந் தெய்வத்தை யடைந்திருப்பதே முத்தியென்று சொல்லுவதும், பாச பசு ஞானங்களே யாமென்றும்; பார்க்கியை தேவிகாலோத்தரமென்னும் ஆகமங்கள், சரியை, கிரியை, யோகமெனு மூன்றும் ஞானத்துக்கு அங்கமென்று கூறப்படுகின்றனவென்றும்; கிரியையென மருவு மவை யாவும் ஞானங் கிடைத்தற்கு நிமித்தமென்றும், கன்மங்களெல்லாம் அஞ்ஞானமான மாயாகாரியத்தாற் செய்யப்படுவனென்றார்; மாயாகாரியத்தாற் பொருந்துவது பந்தமே யாமென்றும்; அஞ்ஞா

னும் நீங்கினுலொழிந்து பாச பந்த மறுதென்றும்; பரமேஸ் வரன் வாக்குமனுதீதனுதலா லவனை மனோவாக்குக் காயங் களா லறியப்படாதென்றும்; அவன் நின்மலனுயும், ஆன்மா மலசம்பந்தியாயு மிருப்பதால் மலசம்பந்தம் நீங்கினுலல்லது பதிதரிசனமுண்டாகாதென்றும்; பதிஞானத்தினுலே பதி யை யறியவேணுமென்றும்; பாசஞானத்தினுற் பாசத்தை யறியுமதொழிந்து பதியை யறியப்படாதென்றும்; பதிஞானத் தினுலே ஞாதுரு ஞேய பகுப்பின்றி யத்துவித மாயகண்டா காரமாய்ச் சிவமாகிநின்று சிவனுடைய திருவடியைப் பெறு கிறது சாயுச்சியமென்றும்; சிவஞானத்துக்குப் பரமுமில்லைச் சமனுமில்லை யாதலால் அநாதிமுத்தனுமாய்ச் சுத்தனுமா யாநந்தவடிவாயிருக்கிற கர்த்தாவினது திருவடியைச் சேர் ந்து சர்வஞ்ஞத்வம் விளங்கிச் சுவானந்தானுபூதியைத் திளைத்திருப்பதே மேலான ஞானமென்றுங் கூறப்படும்.

உ - ம். "ஓதுசமயங்கள் பொருளுணரு நூல்க ளொன்றோ டொன்றொவ்வாமலுள பலவுமிவற்றுள், யாது சமயம் பொருணூலி யாதிங்கென்னி லிதுவாகு மதுவல்ல வெனும் பிணக்கதின்றி, நீதி யினு லிவையெல்லா மோரிடத்தேகாண நிற்பதியாதொருசமயமது சமயம் பொருணூ, லாதலினு லிவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடு மவையிரண்டு மானடிக் கீழடங்கும்" என்று சி-ஞா-சித் தியாரிலும் "சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளைக், கைவந்திடவே மன்றுள் வெளிகாட்டு மிந்தக் கருத்தைவிட்டு, பொய் வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருந், தெய்வசபை யைக் காண்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே" என்று தாயுமான ஸ்வாமிகள் பாடலிலுங் காண்க.

## வேதாகமம்.

### பதி, பசு, பாசமார்க்கவுண்மை.

பதி-கர்த்தா, பசு-சீவன், பாசம்-உடலெனப்படும். இம் மூன்றும், அது நீயானுயென்னும், "தத்வமசி" வேத மகா வாக்கியார்த்தப்படி திரிபதார்த்த நிச்சயமாக வேதாகமங்கள் கூறுகின்றனவாம். திரிபதார்த்த நிச்சயமுணர்ந்து தன் னை நானறிதலே தத்துவஞானமெனவும், கர்த்தா தத்துவா தீதனெனவும் படும்.

மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர்

பதியென்பது:—ஆண், பெண், அலிவடிவாய்த் தோன்றி யழியுந் தேகாதிப் பிரபஞ்சங்களைக் காரியப்படுத்து நிமித்தங் குலாலனைப்போல நிமித்த காரணகர்த்தா வெனப்படும். ஜகத்திற்கு ஈஸ்வரன் பிரதானமான கர்த்திருத்தவத்தினலே நிமித்ய காரணனெனப்படுவனும். ஜடமாகிய மாயையும், சித்தாகிய ஈஸ்வரசத்தியு மிவிதமானபடியினலே பிரபஞ்ச சித் சிதாகாரமாய் நின்றதெனப்படும்.

## பதிஇலக்கணம்.

பதி முதலொன்றே. அப்பதியாகிய பரமேஸ்வரன்-நித்ய, சர்வவியாபக சித ரூப நிர்விகாரியாயும், மாயாசம்பந்தமில்லாதவனுயும், சைதன்னிய ஸ்வரூபனுயும், வெங்குமபரிபூரணமாயழிவின்றி நிறபவனுயும, ஞானஸ்வரூபியாயும, மனுவாக்குக் கெட்டாதவனுயும்; சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னும பஞ்சகிருத்யத் தாண்டவம்நடித்து நிற்பனுயும்; சர்வான்மாக்களிடத்தும் வியாபித் துயிர்க்குயிராயும், அறிவுக்கறிவாயு நின்று சர்வத்தையு முள்ளே யுணர்த் துபவனுயும்; அருளைதாரகமாய் நின்று சுவானுபூதியா லறிவதன்றி மற்றவற்றாற் காணப்படாதவனுயும; தனக்குச் சமானமான முத்தியைக்கொடுப்பவனுயும; சகநிதிமாத்திரத்தாலே பிரபஞ்சம ஜீவித்தொடுங்குவதாயும் விளங்கா நின்ற பதியாகிய பரமேஸ்வரன்வொருவனேயாம.

அநாதி முத்த சித்துருவாகிய பரமேஸ்வரன் ஒன்றினுந் தோய்வின்றித் தானே சொயம்பிரகாசமாய் நிறகுந தன்னுண்மையிற் சிவமென்றும்; பஞ்சகிருத்யமாகிய ஐந்தொழிற் செய்யுந்தன்மையிற் பதியென்றும்; பிரபஞ்சமெல்லாந் தானேயாயிவையிற்றுக்கு வேறுமா யவ்வாருயிர்களின் வழிநிற்குந் தன்மையிற் சத்தியென்றும பெயர்பெற்று நிற்பனும.

சிவமென்பது:— ஞானமேயானபோது சிவமென்றும், கிரியையாய் வியாபிக்கும்போது சத்தியென்றும், ஞானங் கிரியை யிரண்டுமொத்து வியாபிக்கும்போது சதாசிவமென்றும், ஞானங்குறைந்து கிரியையேறி வியாபிக்கும்போது மஹேஸ்வரனென்றும், கிரியைகுறைந்து ஞானமேறி வியா

பிக்கும்போது சுத்தவித்தையென்றுமைவகையாகச் சொல்லப்படுவதாம்.

சத்தியென்பது:—தடையிலா ஞானமெனப்படும். சத்திக்குமுதல் சிவமேயென்றும், சத்தனாகிய அந்தச் சிவனெத்திர நிற்பானத்திற மந்தச்சத்தியு நிற்பளென்றும், பிரபஞ்சத்திற் றோற்றப்பட்ட பதார்த்தங்களெல்லாஞ் சத்திமயமுஞ் சிவமயமுமாகவேயிருக்குமென்றும், அறிந்துமறிவித்து நிற்பதாகிய அந்தப் பராசத்தியொன்றே காரிய வேறுபாட்டாற் பல பேதமாகுமென்றும், சிவனி லயியானபோது லய சத்தியென்றும், போகியானபோது போகசத்தியென்றும், அதிகாரியானபோது அதிகாரசத்தியென்றும், பெயருற்று நிற்பளென்றும், பிருதிவிமுதல் நாதநத்துவமீறாகவுண்டான தத்துவங்களெல்லாமவளைபொருந்தி நிற்பளென்றுஞ்சொல்லப்படும்.

பஞ்சசத்திகளாவன:—சிற்சத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி யெனவைந்தாம். சிற்சத்தியென்பது—உயிர்க்கொளியாக நிற்பதாம். பராசத்தியென்பது—பிராணன்முதலிய வாயுவாக நிற்பதாம். இச்சாசத்தியென்பது—உயிர்க்கருணைசம், பஞ்சபூதமாக நிற்பதாம். ஞானசத்தியென்பது — கருமங்களை யறிந்தூட்டல், ஐம்பொறியுணர்ச்சியாக நிற்பதாம். கிரியாசத்தியென்பது—உலகங்களாக்குதல், வினைத்துணையாக நிற்பதாம். இச்சாஞானஸ்வரூபியான சத்தியில் நாதமூர்த்தியும், அந்தநாதத்தில் விந்துசத்தியு முண்டாயினவெனப்படும்.

சிவனுக்குச் சத்தி விந்துக்களினலவத்தைகளென்பன: பரப்பிரமம், பரசிவம், பரஞானம், பராபரம், அரன்றருஞ்சீர் நிலையெனுமைந்தும் சிவனுக்குச் சத்தியினும் விந்துவினுமுண்டான அவத்தைகளெனப்படும். இவற்றுள் பரப்பிரமமென்றது—குணநாமக்கிரியைக ளொன்றுமின்றி நிருவிகற்பஞானஸ்வரூபமாகப் பெரிதாய் நின்றவவதாமாம். இது ஸ்வரூபசிவத்தையென்றதாம். பரசிவமென்றது—பராசத்தி தோன்றிச் சிவனென நாலுசத்திகளுந் தன்னிடத்திலுண்

டாகச் சுத்தமாக நின்றவவதரமாம். இது தடஸ்த சிவநிலைதை யென்றதாம். பரஞானமென்றது—ஞானசத்திமூர்த்தியாகி ஆன்மாக்களுடைய கன்மங்களையு மவற்றின்பக்குவங்களையும் பாரதந்திரியங்களையுங்கண்டு நிற்குமவதரமாம். ஆகுபெய ரான அதனை யுடையாரென்பதாம். பராபரமென்றது—பரம மாகிய சுத்தாசுத்த மாயைக்கு மேலாய கிரியாசத்தி மூர்த்தி மானுச் சுத்தமாயையிலே காரியங்களை யுண்டாக்குமவதர மாம். இது ஏனைத்தாபரமூர்த்தத்தை யென்பதாம். அரன் றருஞ் சீர்நிலையென்றது—சதாசிவன், மகேஸ்வரன், ருத்தி ரன் என்னு நாமங்களையுடைத்தாய் சுத்தாத்வ, மிசிராத்வ, அசுத்தாத்வ கிருத்யங்களைப் பண்ணுவதாம். இது அடியார் கள்பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையு மூர்த்தங்க ளெல்லாவற்றினையுமெனக் கொள்கவென்பதாம்.

அக்கரங்கடோறும் அகரம் செறிந்துயிராய் நின்றது போல அநேக சீவான்மாக்கடோறும் சிவன் பிரிவறச்செறி ந்து பரமான்மாவாக நின்றானெனப்படும். ஜீவான்மாவும், பரமான்மாவும், வஸ்துவினாலே பேதமும், வ்யாப்தியினாலபே தமுமாகையால் அத்வைதமென்பதாம். ஜநநமரணங்களைப் பேதமாகக் காண்கையினாலே ஆன்மாக்களனேகமெனப்படும்.

## பரமான்மா ஒருவனும், ஜீவான்மா பலவுமென்பது.

ஜந்மாதிபேதங்களையுடைய இந்த லிங்கசரீரமும் ஆன்ம பேதத்திற்கேதுவாகுமாம். கும்பகலசாதிகளிலே யிருக்கிற ஆகாசம் ஏகரூபமாகவே யிருக்குமாம். அநேக சரீரங்களி லே யிருக்கிற சைதன்னியம் அப்படியல்லவாம். அஃதெப்படி யெனில்: ஒருகாலத்திலேதானே லொருதேகிக்கு போச னேச்சையும், ஒருவனுக்கு வழிநடக்கிறதிலே யிச்சையும், ஒருவனுக்கு நித்திரையிலே யிச்சையும், ஒருவனுக்கு அஞ் ஞானமும், ஒருவனுக்கு ஞானமும், ஒருவனுக்கு வைராக் கியமும், ஒருவனுக்கு விஷயாசக்தியுமாகக் காண்கையால் ஒருவனுக்கு நானாகிருத்யம் ஏககாலத்திலே கூடாதாகை யால் ஆன்மா அநேகமென்பது சித்தமாம். வேதத்துள் ஆன்மா ஏகனே யென்பதற்குப் பரமான்மா லொருவனே

யென்பது தாற்பரியமெனப்படும். அப்பொழுது பிறந்தகுழந்தைக்கும் அந்ததேகத்திலே சைதன்னியமுண்டாயிருக்கையினாலே சைதன்னியத்தோடே லிங்கசரீரத்திற் குற்பத்தியாம். ஆன்மாக்கள் சரீரத்தையுள்ளடக்கித் தானே பிரகாசித்து நின்றாற்போலச் சிவனுமிப்படி ஆன்மாக்களை யுள்ளடக்கித் தானும் பிரகாசியாநிற்பனும். அப்படிக்கிருந்தானேயாயினும் ஆன்மாகர்த்தாவும், கர்த்தாவுயிரும், உடல் உயிரும், உயிர் உடலுமாகாவென்றும்;. முத்தான்மாக்களை வேறறக்கலந்து ஜீவஸ்வரூபந் தோன்றாமற்றானேயாக வாழ்வனென்றும்; அந்தச்சிவன் வியாப்பிய, வியாபக சம்பந்தத்தினாலே இந்த ஆன்மாக்களாயும், வஸ்துவினாலே வேறாய்த் தனித்தொரு பொருளாயுமிருப்பனென்றும்; சர்வான்மாக்களிடத்துங் கலந்து வியாபித்தறிவிக்கையினாலே இந்த ஆன்மாத்தானே சிவமுமாமென்றும்; சிவாகமநூலுணர்ந்தோர் பகுத்தோதினரென்ற தெனப்படும். வியாப்பியம் - ஒன்றிலே யொன்றடங்கிநின்ற நினைவு. வியாபகம் - நிறைவு.

## முத்தான்மாவைக்குறித்துச்சிவன் பிரேரகனல்லனென்பது.

முத்தான்மாக்கள் நிரஞ்சனர்களாதலால் சிவன்போலச் சிவப்பிரேரியர்களன்றென்றும், மோட்சபரியந்தம் சிவனுக்கு வசியனென்னும் பெயராமென்றும், மிருகேந்திரவசனம் "வஸ்யோநாவிரத வீர்யாஸ்ய ஸ்வதயே வாபிமோக்ஷணாத்" என்று கூறப்படுகின்றதென்றும்; சிவதத்துவம்பெற்ற முத்தான்மாவைக்குறித்துச் சிவன்பிரேரகரல்லர் சிவனைக்குறித்தவனும் பிரேரியனல்லனென்றும் மதங்கபாரமேசுரத்தில் "பச்சார்த்தத் தே சிவத்வேநே, காரணத்வேநகாரணம், நதம்பிரதிகதா சித்ஸ்யாத் ஸோபிகார்யத்வகோசராத்; அதீத: பரிபூரணச்ச, ஸ்வதந்திரஸ் ஸர்வதோமுக" என்று பேசப்பட்டிருக்கிறதென்றும்; ஆன்மாச் சிவத்தைப்பொருந்தினபோது மாயா பிரபஞ்ச பேதங்களெல்லாம் நேராகயில்லையாய்ப் போகுமென்று சி - ஞா - சி அத்விதஇலக்கணம் 2-ம் சூத்திரம் 50 - வது விருத்தத்தில் "சாலவின்றுகுட்டான்மா சிவத்தினைச் சார்ந்தபோது" என்றும் பிரமாணங்க ளிருப்ப

வைகளைக் கொண்டறிக. சிவனையென்னாது சிவத்தைதயென்று நபும்ஸகமாக வுரைத்தது நிர்க்குணபிரமத்தை யெனவறிக வென்பதாம். சிவம் - மங்கலமுடையது. மங்கலம் - சுபம், சிவம், அறிவு, நன்மை, முத்தி ஒருபொருட்கிளவி, சிவன் - மங்களகரன், ஞேயப்பொருள். ஞாதுரு - காண்பான், ஞானம் - காணப்படுபொருள், ஞேயம் - காட்சி மூன்றும் திரிபுடி யதாவது மூவிதமெனப்படும்.

**சிவனுக்குண்டாயிருக்கு நாமங்களிற் சிலதைக் கூறுதும்.**

அந்திவண்ணன், அரன், அரவணிந்தோன், அழலேந்தி, ஆலமர்கடவுள், ஈசானன், ஈசுரன், ஈமத்தாடி (ஈமம்-சுடலை). உமாபதி, உருத்திரன், எண்டோளன், ஐமுகன், கங்காதரன், கண்ணுதல், கபாலி, கைலையாளி, கரியன், கறைமிடற்றோன், காமநாசன், காலகாலன், கிரீசன், குன்றவில்லி, கூற்றுதைத்தோன், கொன்றைச்சூடி, சங்கரன், சசிதரன், சடைமுடியோன், சதாசிவன், சந்திரசேகரன், சம்பு, சூலபாணியன், தந்திபுரியோன் (தந்தி - ஆண்யானை), தாணு, திரிபுராந்தகன், திரியம்பகன், நக்கன், நிருவாணி, நந்தி, நந்திகேசுரன், நீலகண்டன், நீறணிந்தோன், பசுபதி, பவன், பாண்டரங்கன், பார்வதிகொழுனன், பிஞ்சகன், பித்தன், பிறைசூடி, பிநாகபாணி, புரமூன்றெரித்தோன், புலித்தோலுடையோன், பூதநாதன், பெருமான், பேயோடாடி, மழுவேந்தி, மானிடமேந்தி, முக்கண்ணன், மூர்த்தி, யோகி, வரன், வாமதேவன் என்னு நாமங்களுமின்ன மனந்தநாமங்களு முள்ளனவென்றறிக.

சிவன்கூத்தாவது—காபாலம், கொடுகொட்டி, பாண்டரங்கமெனப்படும். கூத்தென்பது—இலயம், தாண்டவம், நடனம், நாட்டியம், நிருத்தம், பரதம் என்பனவாம்.

சிவன்புதல்வர்—குமரன், விநாயகன், ஐயனார். சிவன் மனைவிகள்—கங்கை, பார்வதியாம். சிவம் - நாததத்துவம், சத்தி - விந்துதத்துவமாம். விந்துவாகிய சத்திதத்துவமும், சிவமாகிய நாததத்துவமும் வாக்குரூபமாகப் பிரதமபந்தமான தேகமென்பதாம்.

பதிநிச்சயத்துக் குதாரணம்—"சித்ரூப மாத்ம சொரூபம் திருக்கிரியா குணலக்ஷிதம், ஞானரூபஸ்ய தஸ்யாபி ஸ்வரூபம் த்ருக்கிரியாத்மிகம், சைதன்னியம் த்ருக்கிரியாரூபத் தஸத்யாத்ம நிசர்வதா, சர்வதச்சய தோமுகதௌ ஸ்ரூயதே ஸர்வதோமுகம், அதாநாதி மலோபேதஸ் ஸக் வக்ருத் ஸர்வவித்சிவ" என்றிருப்பதையும், "உலகெலாமாகி வேறாயுட னுமா யொளியா யோங்கி, யலகிலா வுயிர்கட் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத், தலைவனாயிவற்றின் றன்மைத் தனக்கெய்த லின்றித்தானே" என்றும், "ஐந்து நலமிகுதொழில்களொடு நாடக நடிப்பனுதன்" என்றும், "தன்னறிவத னாற் காணுந்தகமைய னல்லனீசன்" என்றும், "விரித்திடு முணர்வுங்காட்டி வீட்டையுமளிப்பன் மேலோன்" என்றும், "நிறைபரன் சன்னிதிக்க ணீடுணர்வுதிக்குமன்றே" என்றும், "நன்றவை பதிதானென்றென் றறையுமக்கரங் களோடாமுஞ், சென்றிடு மகரம்போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே" என்றும், "நின்றனன் வேறாய்த்தன்னி னீங்கிடா நிலைமையாலே, பின்றிய வுணர்வுக்கெட்டாப் பெருமையன றிவினுள்ளே, யென்று நின்றிடுதலாலே யிவனவ னென்னலாமே" என்றுஞ் சி-ஞா-சியாரிலும், "ஒன்றன்றதொன்றே காணென்றே பதிபசுவா, மொன்றென்ற நீபாசத்தோடுளோகா- னென்றின்றா, லக்கரங்களின்றா மகரவுயிரின்றே, விக்கிரமத் தென்னு மிருக்கு" என்றும், "அரக்கொடு சேர்த்தியணைத் தவக்கற்போ, லுருக்கி யுடங்கியைந்து நின்று-பிரிப்பின்றித், தானே யுலகாந்தமியே னுளம்புகுதல், யானே யுலகென்ப னின்று" என்றும் சி - ஞா போதத்திலும், "அகரமுதலானை பணியாப்பநூரானை - வினைப்பற்றறுப்பாமே" என்று திருஞானசம்பந்தப் பிள்ளையாரும், "அகரமுதலெழுத்தாகி நின்றாய்சொல்லே" என்று சுந்தரப்பெருமானாயனாரும், "அகர முதலவெழுத்தெல்லா மாதிபகவன் முதற்றேயுலகு" என்று தெய்வப்புலவரும் சொல்லியிருப்பதை யறிக.

சிவசத்திக்குதாரணம்— "சத்தி தன்வடிவேதென்னிற் றடையிலா ஞானமாகும்" என்றும், ஒன்றதா யநேகசத்தி யுடையதா யுடனாயாதி" என்றும், சத்திதானுதமாதி தானு

குஞ் சிவமுமந்தச், சத்திதானுதியாகுந் தரும்வடிவாமாமெல் லாஞ், சத்தியுஞ் சிவமுமாகுஞ், சத்திதான் சத்தனுக்குச், சத்தியாஞ்சத்தன் வேண்டிற் றெல்லா மாஞ்சத்திதானே" என்றும், சி - ஞா - சியாரிலறிக.

சிவனுக் கவத்தையென்பதற் குதாரணம் — பரமபிரம மிவனென்றும் பரசிவன் றானென்றும், பரஞானமிவனென் றும் பராபரந்தானென்றும், அரன்றருஞ் சீர்நிலையெல்லாமிவ னேயென்றும்" என்று சி - ஞா - சியிலறிக.

**பசுவிலக்கணம்.**

அநாதியே யாணவமலமென்னு மஞ்ஞானத்தால் தன திச்சா ஞானக் கிரியைகள் மறைப்புண்டு பசுத்துவமடைந்த மையால் உடலின்வேறு உயிரெனுஞ்சீவனுகிய ஆன்மா பசு வெனும் பெயர்பெற்றதெனப்படும். பசுவென்னுஞ் சத்தத் துக்கருத்தம் அஞ்ஞானமாம். ஆன்மசத்தத்துக் கருத்தம் ஞானமாம். உயிர்செய்த கன்மத்தளவில் கர்த்தாபயனளிக்க அநுபவிக்குமென்றும், உயிர் கர்த்தாவாகாது, கர்த்தா உயி ருமாகாதென்றும், உயிர் கன்மத்துக்கீடாகிய சுகதுக்க போ கங்களைப்புசித்து ஜநநமரணங்களுக் கேதுவாய்ச் சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரியம், துரியாதீதமெனு மவத்தை களைப் பொருந்துமென்றும், உண்மை துரியாதீதமென்றுஞ் சொல்லப்படும். இச்சாசத்தியென்றது—உயிர்கட்கு மலத் தைநீக்கிச் சிவத்தை யளித்தற்கணுள்ளதாகிய கருணையாம். ஞானசத்தியென்றது—கர்த்தாநன்றெலாம் நயந்தறிவரென்ப தாம். கிரியாசத்தியென்றது—அருளின்வேறெல்லாத கிரியா சத்தியா லறிந்தபோதே யவற்றை அவ்வாறே கர்த்தா சங் கற்பித்துச் செய்வனென்பதாம். இம்மூன்றும் கர்த்தாவுக் கொப்ப உயிர்கட்குமுளதென்றும் இவற்றினையநாதியே யா ணவமலமாகிய அஞ்ஞானமறைத்ததென்றுஞ் சொல்லப்படும்.

உ - ம். "உயிரெனப்படுவதிந்த வுடலின் வேறுளதாயுற்றுச், செயிருறு மிச்சாஞானச் செய்திகளுடையதாகிப், பயில்வரு மின்ப துன்பப் பலன்களு நுகரும் பார்க்கிற், றுயிலொடு மைந்தவத்தைப் படுமுண்மை துரியாதீதம்" என்றும், "உருவொடு கருவியெல்லா முயிர்கொடு நின்றுவேறாய், வருவது போலவீச னுயிர்களின் மருவி

வாழ்வுன், றருமுயி ரவனேயாகா வுயிரவை தானுமாகான், வருபவ னிவைதானுயும் வேறுமாய் மன்னிநின்றே" என்றும், "இருவினை யின்பதுன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து, வருவது போவதாகு மன்னிய வினைப்பயன்க டருமரன் றரணியோடு தராபதி போலத்தாமே, மருவிடா வடிவுங்கன்மப் பலன்களு மறுமைக்கண்ணே" என்றும் சி-ஞா-சி-யாரிலும், "கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள, மிட்டதொரு பேரழைக்க வென்னன்றுங்—கொட்டி, யவனுளமா இல்லா னுளமவனு மாட்டா, தவனுள மாயல் லனுமா மங்கு" என்று சி-ஞா-போதத்திலுங் காண்க,

## பாசவிலக்கணம்.

பாசமெனுமுடல் ஆன்மாக்களுடைய விபுத்வ சர்வஞ்ஞதையை அநாதியே பந்தித்திருக்கும் ஆணவமலம், கன்மம், காமியம், மாயையாகிய விவைகளைப் பாசமெனப்படுவதாம். அது ஒன்றாயும் அளவிறந்த சத்திகளையும் இருண்ட மயக்கத்தையு முடையதாயும், செம்பிற்களிம்புபோ லழியாத பிரதானமலமா யான்மாக்களுடையஇச்சா, ஞானக், கிரியைகளடங்கலையு மறைத்து நிற்குமாம்.

உ-ம். "ஈசனது சத்தி மல மூன்றினையு மேவுதலாற் பாசமெனும் பேரதற்குப் பாங்கு" என்று சைவக்குறளிலும், "மாயையின் காரியத்தை மாயேயமலமதென்று, மேயுமும் மலங்கடத்தந் தொழிலினை யியற்றவேவுந், தூயவன் றனதோர்சத்தி திரோதான கரிபதென்று, மாய்வரிம் மலங்களைந்து மணுக்களை யணைந்துநிற்கும்" என்று சி-ஞா-சி யாரிலும், "மோக மிகவுயிர்க டொறு முடனாய்நிற்கு மூலவாணவமொன்று முயங்கிநின்று, பாகமிக வுதவுதிமிர தாயியொன்று பகர்மாயை யொன்றுபடர் கன்மமொன்று, தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாரு மாமாயைத் திரட்சியொன்றென், றுகமல மைந்தென்பர்" என்று சிவப்பிரகாசத்திலுங் காண்க.

## சிவம் நீயாவையேன்பது.

பதி-அதி சூக்கமசித்தெனவும், உயிர் தூலசித்தெனவும், பாசம்-அசத்து அநாதியே உயிர்களைப்பற்றி நிற்குமெனவும் படும். பசுவாகிய தன்னையும், தன்னையநாதியே மறைத்து நின்ற பாசத்தையும், தனக்குயிர்த் துணையாயிருக்கும் பதியையு மறிவிக்குமிடத்துத் தானே மற்றிரண்டிற்கு மிடமாகுமென்றும், அக்கினியைக் காட்டத்தினிடமாகக் கடைந்து

காணி லவ்வக்னிவேறு உஷ்ணம்வேறுய்ப் பிரித்தறியச் கூடா ததுபோலச் சுவானுபவத்தால் மலத்தினைநீக்கித் தன்னை யுள்ளபடி யறியிற் றான்வேறு சிவம்வேறுய்த் தோற்றாது அது நீயானுயென்னும் "தத்வமசி" வேதமகாவாக்கியார்த் தப்படி அச்சிவம் நீயாமென்றும், சிவமென்றும், ஆன்மாவெ ன்றுமிரண்டுஞானங்கள் வேறுயிருந்தும், கைநாசியைப்போல ஐக்கியத்துப்பிரிபடாது அதுவே இதுவாய், இதுவே அது வாயிருக்குமென்றுஞ் சொல்லப்படும்.

உ - ம். "உனையுணர்த்திப் பாச முதலி புடையோன், தனை யுணர்த்தி நீயே தலமாம் - கனலை, விறகிடமாய்க் காணிலதன் வெம் மையை வேறுக்கி, யறியகிலாப் போலதுவே யாம்" என்று ஒழிவி லொடுக்கத்திலறிக.

## பதி, பசு, பாசமுத்தியிலுமழியாதென்பது.

பேரின்பத்தைப்புசிக்கிறது ஆன்மா, பேரின்பத்தை மிக வுங்கொடுக்கிறது கர்த்தா, பேரின்பத்தை மேன்மேலும் விளைவிக்கிறது மலமாதலால் பதிபசுபாசமுத்தியிலு மழியா தெனப்படும்.

உ - ம். "முத்தி தனில்மூன்று முதலு மொழியக்கேள், சுத்த வனுபோகத்தைத் துய்த்தலெனு - மெத்தவே, யின்பங் கொடுத்த லிறை யித்தைவிளை வித்தல்மலம், அன்புட னேகண்டு கொள்" என்று உண்மைவிளக்கத்திலறிக.

## சிவோகம்பாவனை யென்பது.

விஷந்தீண்டினவன் தன்னைக் கருடனுகப்பாவிக்க யந்தப் பாவகத்தினுலே யவனுக்குண்டாகிய விஷந்தீர்ந்தாப்போல பதிஞானத்தினுலே அந்தச்சிவன் நானென்று ஸோகம்பாவ னைசெய்யில் அப்பொழுதே காட்டத்திலக்கினிதோன்றினுற் போலச் சிவன்றனே ஆன்மாவிலேதோன்றிப் பிரகாசியாநிற் பனும். அப்படித்தோன்றவே அநாதியாக விவனிடத்திற் செறிந்து நீங்காதிருக்கிறமலங்களெல்லாம் போகாநிற்குமாம்.

ஸ - அவன், அஹம் - நான் இதனைச் சோகமெனப் படும். இது வடமொழி. பழயதாகியவேதங்களும் "அது நானுனேன்" என்று சோகம்பாவனை பண்ணும்படி கூறு

கின்றனவாம். அப்படி பாவிக்கும்போது அத்துவிதமாகப் பாவிக்குமாம் சிவோகம் பாவனையினுற் சிவமுமாவராம்.

கருடனென்றது—கருடனுக் கதிதெய்வமாகிய மந்திர சொரூபமெனக் கொள்க.

உ - ம். "சிவோகம் பாவிக்குமத்தாற் சிவனுமாவர்" என்றும், "கண்டவிவை யல்லே னானெனன் றகன்று காணுப் பரமுநா னல்லேனெனக்கருதிக் கசிந்த, தொண்டியெருடு முளைத்தவன் றுனின்று கலப்பாலே சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறன்றி, விண்டகலு மலங்களெல்லாங் கருடத் தியானத்தின் விடமொழியு மதுபோல விமலதையுமடையும், பண்டமறைகளு மதுநானென் றென்று பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைத் தானே" என்றும் சி-ஞா-சி - யிற் காண்க.

சோகமென்றது—பரோக்ஷாபரோக்ஷப் பொருள், ஐக்கியப் பிராந்தியாம். சிலவாகமங்களிற் "த, ஸோஹ மிதிஸம் மோஹம் ஸோகமேவபரிப்ரம: அஹமேவ பரிப்ராந்தி தன் மாத் ரீணிபரித்யஜேத்" என்று கூறப்பட்டிருக்கிற தென்க.

பரஞானத்தினுலே சித்தஸ்திரத்தைப் பண்ணினவனே பிரமாவும், விஷ்ணுவும், சிவனும், இந்திரனும், சுப்ரமணியனும், குருவும், சர்வசத்விதாஸ்வரூபனும், யோகியும் தபோதனனும், பண்டிதனும், மகாபாகன் அதாவது பாக்கியமுள்ளவனும், கிருதார்த்தன் அதாவது பயனடைந்தவனும், பரமாத்மவித்துவுமாமென்று சொல்லப்படுவனும்.

பரஞானமென்றது—தன்னையுள்ளவாறு காண்டல். தன்னையென்றது நசிப்பதான தேகத்தில் நசியாமற்றுனுய்ச் சேடித்திருக்கிற பிரத்யேகவான்மாவாம். தாமென்றது—போதமாகிய அறிவாம். சிவாக்ர யோகியருரை நாலாஞ்சூத்திரம் முப்பத்தினுலாவது செய்யுள் சி-ஞா-சி-யிலறிக.

**பாச, பசு, பதி ஞானங்களாவன.**

பாசஞானமாவது—வேதசாஸ்திர முதலானவையெல்லாம் ஆன்மபோதத்தினு லறியப்படுகையினுலே பாசஞானமாம். பசுஞானமாவது — கருவிகளாகிய தத்துவங்களையெல்லாம் நியதிகளைந்து கழன்றவிடத்து ஆசையின் மிகுதியினுலே நானே பிரமமென்று சொல்லப்பட்டவறிவு ஒரு சரீரத்திலே

4

கூடி நின்று இந்திரியவிடயங்களை ஒவ்வொன்ருகச் சுட்டி யறிகையினுலே பசு ஞானமாம். பதிஞானமாகிய பதியறிவானது ஒருத்தரறியாமற் சர்வத்தையு மேககாலத்திலே தானே யறிகையினுலே பதிஞானமாம்.

**பாசங்களைநீங்குமார்க்கமாவது.**

அவயவங்களைக்காண்கிற கண் தன்னைக் காணமாட்டாது. அந்தக்கரணங்கள் தாமெல்லா விடயத்துக்கு மறிவாய் நிற்பினுந் தன்னை யறியமாட்டாது. அந்தக்கரணங்களைக் காரியப்படுத்தி நிற்கிற பிராணவாயுவுந் தன்னைத்தான் காணமாட்டாது. கன்மத்தாக்கீடாகச சரீரத்தைப் பொருந்தி சுகதுக்கங்களை யனுபவிக்கிற வான்மாவுந் தன்னைக்காணமாட்டாது. ஆனலந்தச் சிவனையறியும்படி யெப்படி யேனென்னில்? எல்லாத்தையு மறியத்தக்க சிவன் பேதத்திலிந்த வான்மாவுக்குத் தோன்ருமல் நின்று முத்தியிற் றன்னையுங்காட்டி அந்த வான்மாவையுங்காட்டிச் சிவன்றன்னைக் காண்கைக்கு ஆன்மாவுக்குத் திருஷ்டியுமாய்க், கரணங்களா லறியுமிடத்துத் தோன்ருமலு நிற்பன். தனக்குப பிராணனுய்நிற்கிற சிவனுடைய ஞானத்தினுலே தன்னிடத்திலே கண்டுகொண்டு அவனுடைய பேரதத்தைப்பொருநதில் மயக்க விகற்பங்கள் பொருந்தாது. அப்படி பொருந்திறருயினும் ஞாதுருவென்கிற தன்மை போய் ஞானமாய்நிற்கவே முற்பட்ட நிலைகைகூடுமாம். பேதத்தில் மலசம்பநதமாயிருக்கையால் பதியையும் பசுவையும தரிசிக்கபபடாதென்றும், முத்தியில் மலசம்பந்தம் நீங்குகையால் அவ்விரண்டையுந தரிசிக்கப்படுமென்றுஞ் சொல்லபபடும்.

உ - ம். "காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக், காட்டாய வுள்ளத்தைக் கண்காணக்—காட்டிய, வுள்ளந் தனைக்காண வுள்ளத்தின் கண்ணுய, கள்ளந்தா னுள்ளத்திற் காண்" என்று சி-ஞா-போதத்திலும், கண்டிடுங் கண்டனைக் கரணங்க டமைக்காணு வுயிருங் காணு, வுண்டியம ருயிர்தானுந் தன்னைக்காணு துயிர்க்குயிராமொருவனையுங் காணுதாகுங், கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங்காட்டிக் கண்ணுக் கக்கரணங்கள் காணுநிற்பன், கொண்டானை யுளத்திற் கண்டடிகூடிற் பாசங் கூடாதுகூடினுங் குறிப்படியினிறுத்தே" என்று சி-ஞா-சியிலுங காண்க.

**பாசமசத்தென்றறிந்தால் சிவம் பிரகாசிக்குமென்பது.**

தற்போதஞ் சீவியாமல் பரமேஸ்வரன் திருவடியிலே அந்த ஞானமேயாய் நின்று நற்குணங்களாகச் சொல்லப்பட்ட நுண்மை, பெருமை, அறவு, நொய்தாயிருத்தல், மிகவுங் கனத்திருத்தல், விண்மிசையேகல், பரமெய்சேர்தல், வேணடின வுருவைக்கொள்ளுதல், எங்குந் தானேயாய்நிற்றலென்னு மெட்டுச்சித்திகளையும், பிரமாவினுடைய ஐஸ்வரிய முதலாகவுள்ள ஐஸ்வரியங்களையும், கொண்டாடப்பட்ட பதங்களையும் வெறுத்துக் கீழுமேலுமாக யெங்கு நிறைந்து நிற்கத்தக்க மந்திர, பத, வன்ன, புவன, தத்துவ, கலைகளென்னும் ஆறத்துவாக்களின் வழிபடங்கலையுஞ் சுத்த வசத்தியமென்றறிந்தந்த ஞானமாய் நிற்கவே முதல் நடு விறுதி மூன்றுமில்லாதவனுமாய், நிர்க்குணனுமாய், ஒருவராலு மறியப்படாதவனுமாய், சர்வமுந் தானாய் நிற்கச்செய்தே ஒன்றுந் தானல்லவனுமாய் நிற்கிறவன் வேதத்திற் சொன்னமலப்பிரகாசமாய்நின்ற முதலதானே முத்தியிற் பிரகாசித் திவனுக்குள்ளே பொருத்தற்கரிய மிகுந்தபக்தியையுமுண்டாக்கி அதன் வழியே புகுந்திடுவனும். அந்தப் பெரியபக்தியின்வழி பாகத் தானுஞ்சென்று கூடி யெவ்விடத்துமில்லாத சிவபோகத்தைத் படையாநிற்பனும்.

உ-ம். "குறிப்படியினின் றட்டகுண மெட்டெச்சித்தி கோகனகன்முதல் வாழ்வு குலவுபதமெல்லாம், வெறுத்து நெறியறு வகைமே லொடுகீ ழடங்க வெறும்பொய்யென நினைந்திருக்க மேலொடு கீழில்லா, னிறுத்துவதோர் குணமில்லான் றன்னை யொருவர்க்கு நினைப்பரியா னொன்றுமிலான் நேர்பட வந்துள்ளே, பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே" என்று சி-ஞா-சியிலும், "நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த், தற்பரமாய்நின்றதனிமுதல் - லற்புதம்போ, லானவறிவா யளவிறந்து தோன்றுமே, வானே முதல் களையில் வந்து" என்று சி-ஞா-போதலுங் காண்க.

**பரம், பரன், பரை, பரகுடிலை, பரநாதம், பரவிந்துவென்பன.**

பரம், பரன், பரை, பரகுடிலை, பரநாதம், பரவிந்து, வென ஆதாரமாறும். பரமாகிய நாதாந்தச் சோதிபராபர

மாகிய பெரும்பாழ் வெளியிலே ஆண், பெண், அலியென்னு மூன்றிற்கு மப்பாற்பட்ட விசுவப்பிரகாசமா யெழுந்தருளிய தற்பர சிற்பரமூர்த்தி தராதலம் படைக்கவேண்டி பரமாகிய வெளியே வீடாகக்கொண்டு அப்பெருவெளி வீட்டுக்குள்ளே பரனும் பரையுங்கூடின வவதாரம் பரை குடிலையாம். பரமாவது—வெளி, சிவமாவது—அறிவு, சத்தியாவது—மனம், குடிலையாவது—மாயை, நாதமாவது—வலது நாசி சூரியன், விந்தாவது—இடது நாசி சந்திரனுமாம். பரமாத்மன்—சீவப்பாழ், சிவப்பாழ், பரப்பாழென்னு முப்பாழுங்கடந்து பெரும்பாழாகிய வெளியிலே விசுவப்பிரகாசனாய் விளங்குஞ்சொரூபமாம். இந்தச் சொரூபங் காணக்கிடைத்த லரிதினு மரிதாம்.

## இரம்பரம் பராபரமென்பது.

இரமாவது—பிண்டம். பரமாவது—அண்டம். பராபரமாவது—பேரொளியாம். இரமும் பரமுங் கலந்தவிடமே பராபரமாம். இதுவே நடுநிலை ஞானமெனப்படும். நடுநிலை ஞானமாவது—அழியாப்பதமாம். நடுநிலை ஞானத்தையே தானவனாக நினைக்கத் தற்பரமாகுவராம்.

உ - ம். "பரத்திநிலை யொருவராற் பகரொணாதே" என்றும் "வின்னமொருவரு மவ்விடங் கண்டதல்ல வெம்பிரானிருந்த விடம் யானுமறியேனே" என்றும் "பெண்ணுமன்று வாணுமன்று வலியுமன்று, பெரியதன்று சிறியதன்று பிரம்புளன்ன்று, மண்ணுமன்று நீருமன்று வங்கியன்று மதியுமன்று வெளியுமன்று வாயுமன்று, எண்ணுமன்று யெழுத்துமன்று விரவியன்று விருளுமன்று பகலுமன்று வேதுமன்று, நண்ணுமன்று தீதுமன்று வெங்குந்தானாய் நடுவெழுந்த பரத்திநிலை நானுமறியேனே" என்றும், "யெங்கு நிறைந்தெவ்வுயிர்க்கு முயிரதாக விருந்தணுவுக் கணுவான வெம்பிரானைக், கங்குல்ப கலற்றவிடத் திடைவிடாமற் கதிர்முனையி லாடிநிற்குங் கருதினனை, யிங்கு நினைந்திருப்பவ யெழுபிறவி நீங்கி யிருக்கலாமென்ற குரு பரனுஞ் சொன்னார்" என்றும், ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகளுடலறிவிளக்கத்திற் காண்க.

## குடிலையிற்றோன்றுவன.

குடிலையென்னும் சுத்தமாயையிலே பஞ்சகர்த்தாக்களும், பஞ்சபூதாத்மாக்களும், அவ்வாத்மாவிலே பஞ்சபூதங்களும், அவற்றில் பிருதுவிலே அன்னவஸ்துவும், அதிலே

சப்ததாதுக்களும், அத்தாதுவிலே நால்வகை யோனி, எழு வகைத்தோற்றம் எண்பத்துநான்கு நூறுயிர ஜீவபேதங்க ளுந் தோன்றினவாம்.

**தேவதாக்ஷரங்களாவன.**

பரனெழுத்து — ஹரீம். பரையெழுத்து — ஓங்காரம். குடிலையெழுத்து — றீங்காரம். பரவிந்துவெழுத்து — ஸ்ரீங் காரம். அந்த ஸ்ரீங்காரத்திலே யகாரம்—சதாசிவனெழுத்து. அந்த யகாரத்திலே மகேஸ்வரனெழுத்து—வகாரம். அந்த வகாரத்திலே ருத்திரனெழுத்து—சிகாரம். அந்தச்சிகாரத் திலே விஷ்ணுவெழுத்து—மகாரம். அம்மகாரத்திலே பிரம னெழுத்து நகாரமாம். அந்நகாரத்திலே சர்வான்மாக்களும், அவ்வான்மாக்களிலே வான்வளி, தீ, நீர் மண்ணும், அம் மண்ணில் அனல் முதலிய பதினெண்வகையும், அதில் சப்த தாதுக்களும, நால்வகையோனி, எழுவகைத்தோற்றம், எண் பத்துநான்கு நூறுயிரம் சீவபேதங்களுந் தோன்றினவாம். தோன்றின முறையே ஒடுக்கமுமாம். பரவெளிவிட்டுக் கூர் ளொடுங்கு மென்பதாம்.

**சுத்தமாயையினிலக்கணம்.**

குடிலையாகிய சுத்தமாயை நின்மலவடிவாய் விஞ்ஞான கலர், பிரளயகலர், சகலரென்று மூவகைப்பட்ட ஆன்மாக்க ளிடத்துஞ் சேர நிறைவுண்டாய் ஓங்கார முதலிய முப்பத் தொருபேதமாக விரிந்து சதாசிவர், உருத்திரர், புவனேசர் முதலிய பதமூர்த்திகளாகிய விவர்கட்கெல்லாம் மதிலாயும், தனுகரண புவனபோக வீடு முதலானவையாயும், மெய்ஞ் ஞானமிக்குங் குறைந்தும் அருளுக்கிடமாய் நின்றதென்க.

முப்பத்தொரு பேதமாவன :—குடிலை, குண்டலி, பரம், பிரமம், வைந்தவம், மாயேயம், மாயை, விந்து, சிவம், நாதம், பிரணவம், பேரொளி சுத்ததத்துவமைந்து, தனுவாதி போ கங்களுன்கு, வாக்குகளுன்கு, கலைகளைந்து ஆக முப்பத் தொரு பேதங்களாம்.

**சுத்த தத்துவதோற்ற முதலியன.**

மகாமாயையென்னுங் குடிலையிலே நாதமும், நாதத்திலே விந்துவும், விந்துவிலே சாதாக்கியமும், சாதாக்கியத்திலே

ஈஸ்வரமும், ஈஸ்வரத்திலே சுத்தவித்தையுந் தோனறின வாம். இந்தச் சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம், என்னுமைந்தும் சிவதத்துவங்களாம். தத்துவகர்த் தாக்கள் சிவம், சத்தி, சதாசிவம், மகேஹஸ்வரன், வுருத்திர னுமாம். புவனங்களைச்சார்ந்த வான்மாக்களுக்குச் சர்வஞ் ஞத்வம், சர்வகிருத்யங்க ளுண்டாக்குதற்குச் சாதனமாகை யால் சுத்தத்துவங்க ளெனவும், சிற்சத்திக்குச் சுதந்தரவடி வாகலின் சைதன்னியங்களெனவும், சேதனமெனவும், பெயர் பெற்று நிற்குமெனப் படும்.

சுத்த மாயாகாரியம் அபரமுத்தித் தானமாதலால் ஆன் மாக்களுக்கு மோக்ஷத்துக்குக் காரணமானதென்க.

அசுத்த மாயாகாரியம் ஆன்மாக்களுக்குப் பந்தமென்க.

சுத்த மாயாதத்துவங்கள் அசுத்த மாயாதத்துவங்களைப் பிரேரிப்பிக்கையால் பிரேரகாண்டமெனவும், அசுத்த மாயா தத்துவங்கள் ஆன்மாக்களுக்குப் போகசாதனமாகையால் போககாண்டமெனவும், போக ஜயித்துறு காண்டமெனவும் படுமாம்.

## பரமேஸ்வரன் பஞ்சகிருத்யத் தாண்டவமென்பது

ஆன்மக்களறி விற்குப்புலப்படும்பொருட்டு சுத்தமாயை யிலே பரமேஸ்வரன் சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேஹஸ்வரன், வுருத்திரன், மால், அயன், என்னுமொன்பது விதமான திருமேனியை வொன்றிலொன்றாகக் கொண்டு பஞ்சகிருத்ய பரமானந்தத்தாண்டவம் நடித்தாரெனப்படும். அந்தத்திருமேனியைப் பிரித்தறியில் அருவம்நான்கு, உரு வம்நான்கு, அருவாரூவ மொன்றுமாக ஒன்பதாயினவாம். இவைநிட்களம், சகளம், நிட்களசகளமெனப்படும். இவற் றுள் சிவம், சத்தி, நாதம், விந்துவெனுநான்கும் நிட்களமா கிய அருவமாம். இது சிவயோகிகள் தியானித்தற் பொருட் டெனப்படும். பிரம, விஷ்ணு, ருத்திரன், மகேஹஸ்வரன், எனுநான்கும் சகளமாகிய உருவமாம். இது தாமராதி லோக ங்களிலும், காட்டமுதலியவற்றினுலுந், திருமேனிகொண்டு பூசாதி உச்சவாதிகளுக்கெழுந்தருளி அங்கங்கே ஆன்மாக்க ளுக்கு அனுக்கிரகஞ்செய்தற் பொருட்டென்க. சதாசிவன்

நிட்களசகளமாகிய அருவாருவமாம் அதாவது உபயரூபம். இதுசத்தியுஞ் சிவமுங்கூடி மிச்சிரமாயிருக்கிற சிவலிங்கமெனப்படும். இதையே சிறப்புடைத்த தெனக்கருதி தேவர் முதலாயினோர் பூசைசெய்தமையை ஆகமத்தோதினதென்க.

## சத்திபேதமாவன.

சத்தனாகிய அந்தப்பரமேஸ்வரன் ஒன்பது திருமேனி கொண்டபோது அந்தப்பராசத்தி யொன்றுமேயழுபேதமாக நின்றதெனப்படும், அஃதெப்படியென்னில்? சத்தியொன்றேபல வாயதிட்டித்துக்கொண்டு சிவத்துக்குச்சத்தியும், மகேஸ்வரத்துக்கு மகேசையும், வுருத்திரனுக்குக் கௌரியும், விஷ்ணுவுக்கு லட்சுமியும், பிரமாவுக்குச் சரஸ்வதியுமாக நின்றதென்க. சிவனுக்குச்சத்தியென்றும், நாதமென்றும் பெயரானதாம். கிருத்யபேதங்களினாலேசிவம், சத்தி, நாதம், விந்துவெனப் பின்னமாகக் கூறப்படுகின்றனவாம். இந்தச் சிவம், சத்தி, நாதம், விந்துவெனுநான்குஞ் சாந்தி யாகலை, வித்தியாகலை, பிரதிட்டாகலை, நிவ்ருத்திகலைகளெனப்படுவனவாம். அந்தப்பராசத்தி சுத்தமாயையிற் பதிந்தபொழுது சாந்தியாதீதகலை யுண்டாமென்றும், சாந்தியாதீதகலையைப் பராசத்தியென்று பரியாயமாகக் கூறப்படுமென்றுஞ்சொல்லப்படும்.

உ-ம். "சிவம் சத்திநாதம் விந்து சதாசிவன்திகழுமீச, னுவந் தருளுருத்திரன்றன் மாலயனொன்றினொன்றாய், பவந்தருவருவநா லிங்குருவ நாலுபய மொன்றாய், நவந்தருபேதமேக நாதனேநடிப்பன்" என்றும், "சத்தியாய்விந்து சத்தியாய்மனோன்மனிதானாகி, யொத்திருமகேசையாகி யுமைதிருவாணியாகி, வைத்துறுஞ்சிவாதிக்கிங்கண் வருஞ்சத்தியொருத்தியாகு, மெத்திறனின்றனீசனத் திறமவளுநிற்பள்" என்றும், "ஒன்றதாய நேகசத்தியுடையதாயுடனுமாதி" என்றும் சி-ஞா-சியிலும். "சகளநிட்களேசைவ சர்வதரைவ வமாந்த, ஸாயுஜ்யம்திதிப்ரோக்தம் ஸாருப்யமூர்த்தி துல்யதா" என்று சிந்தியவிசுவசாதாக்கிய வசனத்துமறிக.

## சிவசத்திசிருஷ்டிகளாவன.

பரமேஸ்வரன் பராசத்தி, ஆதிசத்தி, யிச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியென்னும் பஞ்சசத்திகளைத்தோற்றுவிப்பனும். அவற்றுள்பராசத்தி சாதாக்கியத்தையும், ஆதிசத்தி

வமூர்த்திசாதாக்கியத்தையும், இச்சாசத்தி மூர்த்திசாதாக்கியத்தையும், ஞானசத்தி கர்த்ருசாதாக்கியத்தையும், கிரியாசத்தி கன்மசாதாக்கியத்தையும், சர்வான்மாக்களுக்குத் தியானபூசைநிமித்தமாக அந்தப்பராசத்தியேதோன்றுவியா நிற்பளாம். கர்த்திருசாதாக்கிய முதலியநான்கும் இலிங்காகாரமாகவேயிருக்குமெனவும், கன்மசாதாக்கியமொன்றுமே சிவலிங்கமும் பீடமுமாயிருக்கு மெனவும்படும். இந்தக்கன்மசாதாக்கியத்தினிடத்திலேதானே சிவ பூஜாதிகன்மங்களையான்மாக்கள் செய்வர்களாம். லிங்கபீடமாயிருக்கிற சிவசத்திகளிரண்டும் பிறிவறப்புணர்ந்துநின் றெல்லாப்புவனங்களையும் பரமேஸ்வரன் வுண்டாக்குவனென்றும், இந்தஉற்பத்திகளைப்பண் ணுவிக்கும் பவனென்னும் நாமத்தையுடைய பரமேஸ்வரன் யெப்பொழுது நித்யபிரமசாரியேயாயும், அந்தப்பராசத்தியாகிய பரமேஸ்வரியெப்பொழுது நித்யகன்னிகையேயாயு மிருப்பர்களென்றும், ஞானத்தையுணர்ந்தஞானிகளிந்த முறைமையறிவர்களென்றுஞ் சொல்லப்படும்.

உ-ம் "சிவஞ்சத்தி தன்னையீன் றுஞ்சத்திதான் சிவத்தையீன்று, முவந்திருவரும் புணர்ந்திங் குலகுயிரெல்லாமீன்றும், பவன்பிரமசாரியாகும் பான்மொழிகன்னியாகும், தவந்தருஞானத்தோர்க்கித் தன்மைதான் றெரியுமென்றே" என்று சி-ஞா-சி-யிலறிக.

## விந்துசத்தியிற்றோன்றுவன.

விந்துவிலே சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென்னுநாலுவாக்குகளும், ஐம்பத்தோரக்ஷரங்களும், எண்பத்தொரு பதங்களும், இருநூற்றிருபத்திநாலு புவனங்களும், சத்தகோடிமகாமந்திரங்களும், சகலசாஸ்திரங்களும்,' ஆன்மாக்களும், சகலருக்குந்தனுகரண புவனபோகங்களும், சாலோக, சாமீப, சாரூப, மென்னும்பதமுத்திகளும் நிவ்ருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதமென்னுங் கலைகளைந்துந் தோன்றினவாம்.

## கலைகளைந்திற்பொருந்துவன.

நிவ்ருத்திகலையிலே இரண்டுமந்திரம் இருபத்தெட்டுபதம், ஓரக்ஷரம், நூற்றெட்டுபுவனம், பிருதிவிதத்துவமொன்றுஅதிதெய்வம்பிரமா அக்ஷரம்அகாரமாகவும், பிரதிட்டாகலையிலே

இரண்டுமந்திரம், இருபத்தொருபதம், இருபத்திலக்கரம், ஐம்பத்தாறுபுவனம், யிருபத்துமூன்றுதத்துவம், தெய்வம் விஷ்ணு அக்ஷரம்உகாரம்ரகவும், வித்தியாகலையிலே இரண்டு மந்திரம் இருபதுபதம், ஏழக்கரம், யிருபத்தேழுபுவனம், ஏழுத்த்துவம், அதிதெய்வம்உருத்திரன், அக்ஷரம்மகாரமாக வும், சாந்தியாகலையிலேஇரண்டுமந்திரம், பதினொருபதம், மூன்றக்கரம், பதினெட்டுபுவனம், மூன்றுதத்துவம், தெய் வம் மகேஸ்வரன் அக்கரம்விந்துவாகவும், சாந்தியாதீதகலை யிலே மூன்றுமந்திரம், ஒருபதம், பதினாறுஅக்கரங்கள், பதி னைந்துபுவனம், இரண்டுதத்துவம், அதிதெய்வம்சதாசிவன் அக்ஷரம் நாதமாகவும் பொருந்திநிற்குமெனப்படும்.

**கலைஅத்துவாக்களாறவன.**

மந்திர, பத, வன்ன, புவன, தத்துவ, கலைகளென்னுமா றுங் கலைஅத்துவாக்களாம். இவ்வாறுருப்புகளும் சிவனுக் குத் தேகமெனப்படும். மந்திரம்பதினொன்று, பதம் எண் பத்தொன்று, வன்னம் ஐம்பத்தொன்று, புவனம் இருநூற் றிருபத்துநாலு, தேகதத்துவம் முப்பத்தாறு, கலைகளைந்து மாம். மந்திரமாவது சோரியென்னும் ரக்தமாம். பதமா வது நரம்பு, வன்னமாவது தோல், புவனமாவது ரோமம், தத்துவங்களாவது என்பும் தசையும், கலைகளாவது நிவ்ருத் தியாதி ஐந்தெனவும்படும். மந்திரம் அக்கரங்களின் கூட்டமா கிய பதத்திலேயும், அப்பதம் வன்னத்திலேயும் வன்னம் புவனத்திலேயும், புவனந்தத்துவத்திலேயும், தத்துவங்கலை களிலேயும், ஒன்றிலொன்றாகவும் ஐந்தத்துவாவுங், கலையத்து வாவிலேயும் வியாபித்திருக்குமென்றும், சிவனுக்குச் சம வாயமான சத்தியே இவ்வாறுக்குந்துணைக் காரணமாகையால் கலைகளதனை வியாபித்திருக்குமென்றுஞ் சொல்லபபடும்.

உ - ம். "வழுவிலாவழியாறு மந்திரங்கள் பதங்கள் வன்னங் கள் புவனகடத்துவங்கள் கலைசத்தியின்கண்சத்தி சிவன்கண்ணும்" என்று சி-ஞா-சி-யிலறிக.

**மூலப்பிரகிருதி, முக்குண, மந்தக்கரண, தத்துவ தோற்றமாவன.**

கலையிலே மூலப்பிரகிருதியும், அந்தமூலப்பிரகிருதியி லே புத்திக்குபாதானமாகிய சத்துவ, ரஜஸ், தமஸென்னு

முக்குணங்களுந்தோன்றி, அம்முக்குணங்களும் ஒவ்வொன்றுமூன்றாக அதாவது தாமசதாமசம், தாமசராஜசம், தாமசசாத்வீகம், ராஜசதாமசம், ராஜசராஜசம், ராஜசசாத்வீகம், சாத்வீகதாமசம், சாத்வீகராஜசம், சாத்வீகசாத்வீகமெனவொன்பதாக விரியாநிற்குமாம். முக்குணங்களுந்தோன்றாதவிடமே அவ்யக்தமெனப்படுமாம். அந்த அவ்யக்தத்தில் சித்தமும் புத்தியுந்தோன்றுமாம. அந்தபுத்தியிலே அகந்தைக்குவிததான யானெனதென்று விகற்பிக்கும் அகங்காராதிகளாகிய தைசதஅகங்காரம, வைகரிஅகங்காரம, பௌதாதியகங்காரமெனு மூன்றுந் தோன்றுமாம். சாத்வீககுணாதிக்யத்தாற்றைசதமென்றும், இராஜசத குணாதிக்யததால் வைகரியென்றும், தாமதகுண மிகுதியால் பௌதாதிகமென்றுஞ் சொல்லபபடுவனவாம். ஆதிக்கியம்—அதிகம், மிகுதி.

புத்தியென்றது-ராஜசமும், தாமசமும், குறைந்து சாத்வீகமேலிட்டவவதரமாம்.

'பிரகிருதியென்றது - முதற்காரணமாம். அவ்யக்தமென்றது-மாயை, மோகினிபிரிந்துதெரியாத தென்றறிகவென்பதாம். வைகரியென்றது - விகாரத்தாலென்றறிதெனக. அகங்காரம் ஆங்காரமாக மருவியற்றெனக.

தைசதஅகங்காரத்திற்சத்துவகுணமும், மனமும், சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்ராணமென்னும் ஞானேந்திரியங்களைந்துந் தோன்றுமாம. ஞானேந்திரியமென்றது - அறிகருவிகளாம.

வைகரி அகங்காரத்தில் ரஜோகுணமும, வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபததமென்னுங் கன்மேந்திரியங்களைந்துந் தோன்றுமாம. கன்மேந்திரியமென்றது - தொழிற்கருவிகளாம். வசனம, கமனம், தானம, விசர்க்கம், ஆனந்தம், அதன்விஷயங்களாம.

பௌதாதிகாகங்காரத்தில் தமோகுணமும், சத்தம், ஸ்பரிசம் ரூபம, ரசம் கந்தமென்னுந தன்மாத்திரைகளைந்துந தோன்றுமாம். தன்மாத்திரையென்றது—சூக்கும பூதமெனவும், புலன்களெனவும் படும. சத்தம்-ஒலி, ஸ்பரிசம்-தொ

டல், ரூபம்- உடல், வடிவு. ரசம் - ரதம். கந்தம் - நற்கந்தம் துர்க்கந்தமாம். தன்மாத்திரையே பஞ்சபூதங்களுக்குக் காரணமாம். அவை ஞானேந்திரயவிஷயங்களாம்.

சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்த, மென்னுந் தன்மாத்திரைகளைந்தி நின்றடைவேவாகிய ஆகாயம், வளியாகிய காற்று, தீயாகிய தேயு - நெருப்பு, நீராகிய அப்பு, மண்ணாகிய பிருதிவி யென்னும் பூதங்களைந்துந் தோன்றுமாம். தன்மாத்திரைகளும் பூதங்களும் அங்காங்கிபர்வமதாவது தேகியுந் தேகமுமா யிருக்குமாம்.

உ - ம். "சாற்றிய பஞ்சதன் மாத்திரைகளிற் சத்தமுன்னாத், தோற்றும் வான் வளி தீர் மண் டடகியே யொன்றுக்கொன்றுங், கேற்றமா மோசையாதி யிருங்குண மிசைந்து நிற்கு, மாற்றவே விடய பூத மங்காங்கி பாவத்தாமே" என்று சி-ஞா-சியிலறிக.

அசுத்தமாயையின் லக்கணம்.

அசுத்தமாயை வுலகிற்கு முதற்காரணமானதெனப்படும். அதுநித்தியமாய், அருவாய் அதாவது ஒருவருக்குந்தோன்றுததாய், வொன்ருய், வுலகமுண்டாவதற்கோர்வித்தாய், சடமா யதாவது அசித்தாய், எவ்விடத்தும்வியாபகமாய், மலரகிதனைபரமேஸ்வரனுக்குத் தானொருசத்தியாய், ஆன்மாக்களுக்குத்தனு, கரண, புவன, போகங்களுமாய், பொய்யை மெய்யாகவு மயக்கத்தைச்செய்தலாகிய இலக்கணங்களையுடையதாயிருக்குமெனப்படும். தனுவாவது-தூலதேகம். கரணமாவது-சூக்குமதேகம், புவனமாவது-வுலகங்கள், போகமாவது-அன்னமுதலியன. தனுகரணபுவன போகங்களெல்லாம் மலசம்பந்தமாதலால் மலமெனப் பெயர்பெறுமாம். மாயையானது ஆணவம், கன்மம், மாயை, என்னும்மும்மலங்களிலொன்ரும். ஆணவமலம் போக்ருத்வம், கன்மமலம் போகம், மாயாமலம்பந்தமென்க. மாயாமலம்-பொய்யையுண்டாக்குகிறபோகத்தைப் பண்ணுவதாம்.

அசுத்த மாயாகாரியங்க ளான்மாக்களுக்குப் பந்தமாம். அசுத்தமாயை-அதோமாயையெனவும் படும்.

உ-ம் "நித்தியமாயருவாயேக நிலையதாயகிலத்துக்கோர், வித்துமாய்ச்சித்தாயெங்கும் வியாபியாய் விமலனுக்கோர், சத்தியாய்ப்

புவனபோகந் தனுகரணமுமுயிர்க்காய், வைத்ததோர்மலமாய் மாயை மயக்கமுஞ்செய்யுமன்றே" என்று சி-ஞ-சி-யிற்காண்க.

**அசுத்தமாயாதத்துவதோற்றம் காரியப்பாடுமுதலியன.**

அசுத்தமாயையில் காலம், நியதி, கலை, வித்தை, ராகம், புருடன், மாயை என்னுந் தத்துவங்களேழுந்தோன்றினவாம். இந்தத்தத்துவங்கள் வித்தியா தத்துவங்களெனப்படுமாம். இந்த ஏழுதத்துவங்களும் சுத்ததத்துவங்களாந்தாலே பிரேரிக்கப்படுகின்றனவாம். ஆன்மாக்களுக்குச் சகாயமாய்நின்று போகத்தையுண்டாக்குவதால் போககாண்டமாகவும், புசிப்பிக்கப்படுவதாயிருப்பதால் போக்கியகாண்டமாகவுஞ் சொல்லப்படுமாம். அசுத்ததத்துவங்களேழும் சுத்தமாயு மசுத்தமாயு மிச்சிரப்பட்டிருக்குமாம். ஆன்மாக்களுக்குச் சிறிதறிவை விளக்குதற்குக் காரணமாகையால் சுத்தமாகவும், சூக்குமரூபத்துவாரத்தாலே குணரூபமாகிய சுகதுக்கமோகங்களை யுண்டாக்குவதற்குச் சாதனமாகையால் அசுத்தமாகவுஞ்சொல்லப்படுமாம். பிரகிருதியிற்றோன்றுந் தத்துவங்கள் சிறிதறிவைவிளக்கிச் சிறிதுகர்த்திருத்வத்தையும், சுகாதிகளையுமுண்டாக்குவதாலிதுவும் அசுத்தமெனப்படுவதாம். இந்ததத்துவம் ஆன்மாக்களுக்குப் போகார்த்தமாகையால் போககாண்டமென்ற தெனப்படும். காலமாவது - ஆன்மாக்கள் புவனத்துண்டாகிய போகங்களைப் புசித்தற்குக் காலவறையுண்டாக்கப்பட்டதாம். நியதியாவது - அவரவர் செய்தகன்மமவரவர் நுகருமாறு இன்னதுக்கின்னதென்று நியமிப்பதாம். கலையாவது - மாயையினின்றே மயக்கமில்லாத கலைதோன்றியாணவத்தை யேகதேசத்தில் நீக்கியான்மாவின் கிரியாசத்தியை வினைக்கீடாகவரும் போகத்திற்செலுத்துமாம். வித்தையாவது - மேலானகலையினிடத்தே தோன்றியான்மாவுக்கறிவையுண்டாக்குமாம். அராகமாவது-வித்தையிற்றோன்றி யான்மாக்கள்செய்த கன்மத்துக்கீடாக சுகதுக்கானுபவங்களைப் புசிக்கையின் பொருட்டிச்சையைப்பண்ணுமாம். காலம், நியதி, கலையெனுமூன்றுங் கிரியையாம். வித்தைஞானமாம். அராகம் இச்சையாம். இந்தஐந்துங்கூடி பஞ்சகஞ்சுகமெனப்படுவதாம். புருடனென்றது, இச்சாஞா

னக்கிரியாசொரூபனென்றும், பஞ்சகஞ்சுகனென்றும், புருடனென்றும் புருடதத்துவமென்றும் பெயராய்ப பொதுமையிலேற்பனும். தொழில், அறி, விச்சைஎன்னுங் கிரியை, ஞானம், இச்சையாகிய மூன்றுசத்தியையுந் தனக்குடமபாகப்பொருந்தி கன்மத்துக்கீடாக விடயங்களையறுதியிட்டுப் புசிக்கத்தக்கதாக வருகிறவவதரம் புருடனென்பதாம்.

அசுத்தமாயையில் பஞ்சசரீரமுண்டாமென்பது.

அசுத்தமாயையில் கலக்குண்டபாகமாகிய காரணசரீரமென்னும் ஆனந்தமயகோசமாகிய பரசரீரமொன்று, பஞ்சகஞ்சுகமென்னும் விஞ்ஞானமயகோசமாகிய சரீரமொன்று, பஞ்சகஞ்சுகத்திலொன்றாகிய கலையிற்றோன்றும் அவ்யக்தவியக்தரூபமான குணசரீரமென்னும் மனோமயகோசமாகிய பரசரீரமொன்று, மனம், புத்தி, யகங்காரமும, சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமாகிய தன்மாத்திரைகளாதுங்கூடி புரியட்டகமென்னும் பிராணமயகோசமாகிய சூக்குமசரீரமொன்று, தூலசரீரமென்னும் அன்னமயகோசமாகிய சரீரமொன்று, ஆகஐந்துவிதசரீரங்களும் அசுத்தமாயையிலுண்டாயினவென்க. புருடனொருவனை ஐந்துசரீரங்களோடுங்கூடி வினைக்கீடாகப் பிறப்பிறப்பையடைவனும்.

அசுத்தமாயாதத்துவ மதிதேவதைகளாவன.

காலதத்துவத்துக்குக் காலேஸ்வரியாம். கலைதத்துவத்துக்கும் நியதிதத்துவத்துக்குங் காலருத்திரனும். மாயாதத்துவத்துக்கு மாயாதேவியாம். ராகதத்துவத்துக்கும் புருடதத்துவத்துக்கும் அராகபகவானும. வித்தியாதத்துவத்துக்கு வித்தியாதேவியாம்.

உம். "மாயையிற்காலமொடு நியதிபின்கலாதி தோன்றும்." என்றும் "வித்தையுபர்கலையதனிற்றோன்றி யறிவினையுதிக்கப்பண்ணும்" என்றும் "விச்சைபினிராகந்தோன்றி வினைவழிபோகத்தின்க, ணிச்சையைப்பண்ணிநிற்குந் தொழிலறிவிச்சை மூன்றும், வைச்சபோதிச்சாஞானகிரியை முன்மருவியான்மா, நிச்சயம் புருடனுப் பொதுமையினிற்குமன்றே எனறும்" சி. ஞா. சி. யிற்காண்க. "வித்தியாதத்துவங்க ளேழும் வெருண்டோடச், சுத்தபரபோகத்தைக் துய்க்குநாளெந்நாளோ" என்று தாயுமானஸ்வாமிகள் சொல்லியிருப்பதையுமறிக.

## மும்மலங்களாவன.

ஆணவமலம், கன்மமலம், மாயாமலமென மும்மலங்க
ளாம். ஆணவமலமாவது-ஆன்மாக்களுடைய ஞானக்கிரியை
களை மறைத்துக்கொண்டு நீயில்லையென்றது ஆணவமலமெ
னப்படும். யானென்னு மமதகங்களைப்பண்ணி விஷயங்களைப்
புசிக்கிறவனுகப்பண்ணிநிற்குமாம். அது ஒன்றதாயநேக
சக்திகளையுடையதாயநாதியேயுள்ளதாய் அக்கினியைக்காட்ட
மறைத்தாற்போல சற்றுந்தோன்றமல் ஆன்மபோதத்தை
மறைத்துநின்று புசிப்பிலேமிகதிருப்தியை யுண்டாக்கி எப்
பொழுது மறிவாமையையுண்டாக்கிக் கொண்டிருப்பதாம்.
நெல்லுக்குண்டாகிய முளைபோலஆணவமும், தவிடுபோல
மாயையும், உமிபோலகன்மமுமாம். கன்மமலமாவது-இது
ஆன்மாக்களிரு வினையாலி யற்றுஞ்சுகதுக்கமாகிய போகங்
களைபுசிப்பித்துத் திருப்திகளைப்பண்ணுநிற்குமாம். மாயா
மலம்-இது பொய்மையுண்டாக்குகிற போகத்தைபபண்ணுவ
தாம். துகளற்ற வரிசியினிடத்திலே உமியுந்தவிடுமில்லை,
உமியுந்தவிடும் நீங்குவோரால் கிரமத்திலேநீங்கும், தொகுதி
ருந்து மற்றொருநெற்றேற்றிடாவா. அதாவது தோலாகிய
உமிதுகளற்ற அரிசியுடனே கூடியிருந்தாலுமந்த வரிசி
யின்னையொரு நெல்லாகாது. இதுபோல பாசத்தை நீங்கின
வான்மாவிபுவாகையால் பாசத்திறகுமான்மாவுக்கு மோரிடத்
தாயினு முன்புபோல, முத்தான்மா பசுவாகானென்றறிக.

## பஞ்சமலங்களாவன.

பஞ்சமலங்களென்பன : — ஆன்மாவையனுசம்பந்தமாக்
கியவாணவமலம், ஆன்மாக்களறிவை யியக்கும்மாயை, ஆன்
மாக்க டொழிலைச்செய்விதினு லுண்டாகியகன்மம், மாயை
யின்காரியமாகிய கலைமுதலியதத்துவ சமுகங்களான மாயே
யமலம், ஆன்மாவினுடையவும் சிவனுடையவும் தரிசனத்தை
யாகவொட்டாமல் மறைக்குந்திரோதாயியுமாகிய விவைகளே
பஞ்சமலங்களாம். இந்தப பஞ்சமலங்களையும் ஆன்மாக்கள்
பொருந்திநின்று சநநமரணங்களை யடைவர்களாம். எடுக்
குஞ் சநநங்கடோறும் பழயதாய்வருகிற பிராரத்த கன்மங்க

னெல்லாவற்றையும் ஆன்மாக்கள் புசித்துத் தொலையாவிட
த்து சகலகாரணங்களுறுதாதலா லதனைப்புசித்துத் தொலைக்
கைக்குக் காரணமாகவும், ஆணவமலத்தைப் போக்குகைக்
குக் காரணமாகவும், தீக்கையினாலே, சஞ்சித கன்மமெடுக்கு
முடலின் கட்பொருந்தி நில்லாதபடி சோதித்துப் போக்கு
கைக்குக் காரணமாகவுந் தத்துவங்களைக்கூட்டி பரமேஸ்
வரன் காரியபபடுத்துவனென்று சொல்லப்படும். நசிப்பதான
தேகத்தில் நசியாமலிருக்கும் ஆன்மாவாகிய தன்னை மறை
த்து நிற்பது தனுகரண புவனாதிகளேயாம். "பொன்னை
மறைத்தது பொன்னணி பூஷணம், தன்னை மறைத்தது தனு
கரணங்களே" என்று திருமந்திரத்திற் காண்க.

உ - ம். "மலங்களைந் தாற்சுழல்வன் றயிரிற் பொருந்துமத்
துளவே" என்று மாணிக்கவாசகஸ்வாமிகள் சொல்லியிருப்பதை
யறிக. "எழுமுடல் காரணமாதி யினைமலம் என்றும், "தனுகரண
புவனபோகந் தறபரம்பந்தம்" என்றும், "மலமாயை கன்ம மாயே
யந்திரோதாய் மன்னிச், சலமாறம் பிறப்பிற்றங்கி யித்தரை கீழ்மே
லும்" என்றும் சி-ஞா-சி-யிலறிக.

## கன்மமாவது.

கன்மமா ஆணவம், மாயை, கான்மீகமென்கிற மும்மலங்
களிலொன்று மநாதியாய் நிற்குமெனப்படும். தனுவின் செய்
தியாற் கன்ம முண்டாம். வித்தின்கண் மரமுண்டாய் மரத்தின்
கண் வித்துண்டா யிப்படி யொன்றுக்கொன்று காரணமாய் வந்
து தோன்றுமாறுபோல யிருவினைக்கீடாய் கன்மத்தினாலே
உடலும், உடலினாலே கன்மமுண்டா யிப்படி யொன்றுக்கொ
ன்று காரணமாய் தொண்டு தொட்டு தொடர்ச்சியாய் வரு
மெனப்படும். யோனி பேதங்களாகவும் இந்திரியங்க*ளேற்
றக்குறைவாகவும் சாதிபேதங்க†ளாகவுமாக யிப்படி பேதப்
பட்டது கன்மத்துக்கீடாகையால் கன்மமுண்டென்றதெனக்

* இந்திரியபேதம் - ஆனைக்கு நாக்குறுகியிருத்தல். பாம்புக்கு
கட் செவியாயிருத்தல், கோட்டானுக்குக் கண் விரிவாயிருந்துந்
தெரியாதிருத்தல். சாதகப்புள் வானத்திநீரையே யம்பக்ஷித்திருத்
தல் முதலியன.

† சாதிபேதம்-சுரர், நரர்; மிருகாதி.

கொள்க. ஆன்மாக்கள் போகம்புசிக்கைநிமித்தம் தூல சூக்
நும, அதிசூக்குமமெனக் கன்மமூவிதமாகப் பொருந்துமாம்.
நக்குமமாய் காணப்படாதிருத்தலால் அரூபமாய் நின்று
யுவாவர்கள் கன்மபலத்துக்கிடாகச் சங்காரத்தைப்பொருந்து
மாம். சங்காரகாலத்துமாயையை யடைந்திருந்து, சிருஷ்டி
காலத்து புத்தியையடைந்து, திதிகாலத்து சீவித்துவருமெ
னப்படும். சந்திரனுக்குப் பூரணகலைபதினாறிற் காரணமாகிய
வொருகலையெப்பொழுது மழியாமனிற்கவே மற்றக்காரிய
லைகளொவ்வோரிடங்களிலே யொடுங்கினின்று பின்புகூடு
றமுறமைபோலக் காரணமாகியமாயை யழியாமனிற்கவே
ாரியமாகிய சூக்குமதேகமாகிய தத்துவங்களொடுங்கிக கூடு
மென்பதாம்.

**தூலத்துக்குக்காரணம் சூக்குமமென்பதுமுதலியன.**

சூக்குமமான விதைகளிலே தூலமானமரங்களுண்டா
வது போல சூக்குமதேகத்திற் றூலதேகமுண்டாமென்றும்,
நக்குமமாகியமாயைகெட்டுத் தூலதேகப்பிரபஞ்சந் தோன்
டாதென்றும், ஓர்மரத்தை வெட்டிப்போட்டளவில் அதுக்
குக்காரணமாகிய அந்தமரத்தின்வேரினின்று மற்றொருமர
முண்டாவதுபோலச் சூக்குமவுடம்பினின்று தூலந்தோன்று
கிற்குமென்றும், தூலதேகத்தைப்போலச் சூக்குமதேகமழி
ாதாகையால் காரணகாரியங்களுக் கழிவின்றியிருக்கவே
ாரியப்பட்டதேகங்களுமிவையிற்றாலுண்டாமென்றும், தூல
தகத்துக்குஜ்மபெரும்பூதமைம்பமையுமென்றும், சூக்குமதே
த்துக்குத் தன்மாத்திரையானியன்றவடிவென்றும், வடிவுக
ளெல்லாஞ் சூக்குமமாகிய மாயையிலேநின்றுங் கன்மத்துக்
டாகவுண்டாமென்றும், உருவத்திலேநின்று முருவந்தோன்
மல் அருவத்திலேநின்று முருவந்தோன்றுமென்றும், நரகா
பவத்துக்குப் புரியட்டகமென்னும் யாதனாசரீரமும், ஸ்வ
க்கானுபவத்துக்குப் பூதசாரமாகியபிரகாசசரீரமு முண்டா
மன்றும், கன்மபலபரிபாகமில்லாதிருந்தால் வேறொரு
யானியையும் பொருந்தாமல் அதீதப்பட்டு அறிவின்றியா
ாசத்தைப்பற்றி அந்தரான்மாவாகப்பாடாணமாகிய கல்லைப்
பாலச் சிறிதுகாலங்கிடந்து பாவபலம் பக்குவம்வந்தால்

கொடியநாகத்தையடைந்து மீளவுங்கன்மத்துக்கிடாகப் பூத பரிணாமமானதேகத்தை யெடாநிற்குமென்றும், பாம்பானது தோலையுரித்துப் போட்டுப் போவதுபோலும், பட்சியானது முட்டையினின்றும்புறப்பட்டுப்போவதுபோலும், பரகாயப் பிரவேசஞ் செய்வோரந்தக்கூட்டைவிட்டு வேறொருசரீரத்தில் பிரவேசிக்கு மாறுபோலுந் தூலதேகத்தைவிட்டுச் சூக்கும தேகத்துடன் போகிறதென்றும், இருவினையாகிய புண்ணிய பாவகன்மத்துக்கிடாக யோனிகளிற் செனிக்குமென்றும், அந்தந்தயோனி அந்தந்தயோனியாகவேசெனிக்குமென்றும், தெய்வயோனி மானிடயோனியும், மானிடயோனி தெய்வ யோனியுமாகாதென்றும், மானிடயோனி தாபரங்களாகா தென்றும், அச்சுகள்மாறுமென்றும் அதாவது அகலிகை கல் லதானளென்பதுபோல அச்சுகளழிந்து போகுமென்றுஞ் சொல்லப்படும்.

அச்சுகள் மாறிப்பிறக்குமென்பதற்குத் திட்டாந்தம்.

பூலோகத்திலே மானிடராயிருந்து மிகுந்த புண்ணியங் களைச் செய்தவர்களந்தச் சரீரமொழிந்தால் தெய்வலோகத் திலே தெய்வசரீரமாயிருந்து அங்குள்ளபோகங்களைப் புசி த்து அதுதொலைந்தவாறே மீளவும் பூலோகத்திலேவந்து மானிடசரீரத்தையெடுக்கையினாலும், மயிர்க்குட்டிப்புழு அச் சுமாறி வண்டாகையினாலும், பச்சைப்புழு அச்சுமாறிவெட்டு வாளியாகையினாலும், அச்சுமாறிப்பிறக்குமென்றே சமயங்க ளெல்லாம் பொருள்கொண்டிருக்கின்றனவென்க.

திருமறைக்காட்டில் விளக்குதூண்டினபலத்தால் எலிமா பலிசக்ரவர்த்தியாய்ப் பிறந்ததென்பதையும், சிலம்பிப்பூச்சு சூரியவமிசத்திற்பிறந்து செங்கட்சோழநாய னாய்ப் பூமி முழுதையு மாண்டு ஒப்பில்லாத ராசாவானதென்பதையும், கௌதமர்பாரியை அகலிகாதேவியைத் தேவேந்திரன் காமுற் றுத்தீண்ட வதுகண்டவர் சாபத்தாலவள் கல்லானளென்ப தையும், மாயன், மச்சியம், கூர்மம், வராகம், நாரசிங்கம், வாம னம், இராமன், பரசுராமன், பலராமன், திரிவிக்கிரமன், கிருஷ் ணன், என்னுந் தசாவதாரமெடுத்தாரென்பதையுங்கொண்டு அச்சுமாறிப் பிறக்குமென்பதை யுறுதிப்படுத்துமென்பதாம்.

உ.-ம் "உடற்செய்தகன்மமிந்த வுடல்வந்தவாறே றென்னில், விடப்படு மூன்னுடம் பின்வினையிந்தவுடல் விளைக்கும்பு தொடர்ச்சியாயொன்றுக்கொன்று தொன்றுதொட்டநாதிவித்தி, னிடத்தினின் மராமரத்தின்வித்தும்வந்தியையுமாபோல்" என்றும், "தன்மமோட தன்மமாகித் தானிருபயனுந் தந்து, நன்மைதீமையினுமின்பத்துன் பினுநாடிக்காண, முன்னமேயான்மாவின்றன்மும் மலத்தொன்றதாகிக், கன்மமுமூலங்காட்டிக் காமியமலமாய்நிற்கும்" என்றும் "இருவினையின்பதுன்பத்திவ்வுயிர் பிறந்திறந்து, வருவது போவதாகுமன்னிய வினைப்பயன்கள்" என்றும் "விதிப்படி சூக்குமத்தேயுருவரும் வினையாலங்கே, வுதித்திடாவுருவமாக வுருவருமரங்கள் வித்திற், கதித்தெழுமாமும் வித்துங்கழியும் பின்னழியுஞ்சூக்க, மதிக்கெழுகலைகள்போல வருவதுபோவதாமே" என்றும், "நார்களாய்ப் பிறப்பர்ஞாலத்தமரராய் நண்ணிடாரே" என்றும், "வெவ்வுருவு நதன்கன்மான் மாற்றுவனிறைவன்றனே" என்றும், "வண்டுகளாகி மாறுமயிர்க்குட்டி மற்றோர்சந்துப், பண்டையவுருவந்தானெ வேட்டுவனுய்ப் பிறக்கும், கண்டுகொள்யோனி யெல்லாங்கன்மத்தான் மாறுமன்றே" என்றும், அகலிகைகல்லதானாரி பலபிறவியானான், பகலவன் குலத்திற்றோன்றிப் பாரெலாமுழுதுமாண்டு, நிகரிலாவரசனுதஞ்சிலம்பி நீடுலகம்போர்றச், சகமதிலெலிதானன்றோ மாவலியாய்த்துத்தானே" என்றும், "உடல்விடா யோனிபற்றியுதிப்பினு முதிக்குமொன்றி, படர்வுறுதுறும்பாவத்தாற் பாடாணம்போற்கிடந்து, கடனதாங்காலஞ்சென்றூற் கடுநரகதனில்வீழ்ந்தாங், கிடருறு முருவங்கன் மத் தளவினிலெடுக்குமன்றே" என்றும், "பூதனுசரீரம்போனுற் புரியட்டகரூபந்தானே, யாதனுசரீரமாகியின்பதுன்பங்களெல்லா, நாதனாணையுய்க்க நரகொடு சுவர்க்கந்துயத்துத், தீதிலாவணுவாயோனி சேர்ந்திடுஞ்சீவனெல்லாம்" என்றும் சி-ஞா-சித்தியாரிலும், "அரவுதன் றோலுரிவு மக்கனவும்வேறு, பரகாயம் போய்வருமப் பண்பும் - பரவிற், குடாகாச வாகாசக் கூத்தாட்டாமென்ப, தடாதுள்ளம்போமாறது" என்று சி-ஞா-போதத்திலும், "புரியட்டகமே புரிந்தங்குண்ண, வுரியவுடல்வினைவிளைக்கும்" என்றும், புண்ணியபாவத்தாலே பூதத்தின்பரிணமத்தா, மண்ணிடைமனிதராக மற்றையவடிவமெல்லாம்" என்றும் காரணாகமம் வெதருமோத்திரத்துமறிக.

## பஞ்சாக்ஷரமகிமை.

பரமேல்வரன் ஆன்மாக்கள் தரிசிக்கத்தக்க பஞ்சாக்கர திருமேனி கொண்டபோது "நமசிவய" மென்னும் பஞ்சாக்ஷரமாகிய ஐந்தெழுத்தையே கொண்டருளி நிருத்தஞ்செய்தனராம். திருவடியிலே நகாரமாகவும், திருவுந்தியிலேமகார

மரகவும், இருந்தோளிலே சிகாரமாகவும், திருமுகத்திலே வகாரமாகவும், திருமுடியிலே யகாரமாகவுங் கொண்டருளினரெனப்படும். நகாரம் திரோதாயக்ஷரம், மகாரம்மலாக்ஷரம், சிகாரம்பதியக்ஷரம், வகாரம்அருளட்சரம், யகாரம்சீவாக்ஷரமென்க. நகாரம்-பிரமா, மகாரம்-விஷ்ணுசிகாரம்-உருத்திரன், வகாரம்-மகேஸ்வரன், யகாரம்-சதாசிவனுமாம். யகாரம்-லிங்கம். வகாரம்-நாளம். சிகாரம்-மேற்பதுமம். மகாரம்-கண்டம். நகாரம்-கீழ்ப்பதுமமுமாம். நகாரம்-சத்தியோசாதம். மகாரம்-வாமம். சிகாரம்-அகோரம். வகாரம்-தற்புருடம். யகாரம்-ஈசானமுகமுமாகத் திருமேனியானதெனப்படும். அருவாரூவம் அதாவது உபயரூபமாகிய சகளநிட்கள சதாசிவமூர்த்திக்கும், உருவமாகிய சகளமூர்த்திகளுக்கும் பஞ்சாக்கரமே திருமேனியானதென்க.

பஞ்சாக்கர தரிசனமென்றது—நகாரம் - பாதம், மகாரம்-வயிறு, சிகாரம் - தோள்கள், வகாரம் - முகம், யகாரம் - திருமுடி யெனப்படும். "நமசிவய" மெனு மைந்தெழுத்தும் நிவ்ருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதமென்னும் பஞ்சகலைகளுக்கும் பீஜமெனப்படும். பஞ்சாக்கரத்தினுள்ளே சிவமும், சத்தியும், முந்திநின்று ஆன்மாவை நடுவே வைத்த முறைமை யதாவது "சிவயநம" வென்றதினாலே சிவன் ஆன்மாக்கள்பாசத்தைநீக்கி யனுக்கிரகஞ்செய்வனென்பது பொருளென்க. நமஸ்கரிக்கிறவன் அடிமையும், நமஸ்காரத்தைக் கொள்ளுகிறவ னாண்டவனுமாகையால் ஆன்மாக்கள் பாசத்தைநீக்கி யனுக்கிரகஞ்செய்கிற சிவனுக்கான்மா அடிமையென்று சொல்லப்படுமாம். "ஊனநடனமொருபா லொரு பாலா - ஞானநடந் தா னடுவேநாடு', என்றிருப்பதை யறிக. ஆன்மாவடிமையும சிவன் ஆண்டவனுமென்கிற முறைமை யறிந்து பூசை யோமத் தியானங்களும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தாலே செய்யக்கடவதென்றும், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுள்ள மரியாதியறிந்து புருவமத்தியிலே சிவன் ஆன்மாவுக்குப் பிராணனாய் நிற்கிற தன்மையுமறிந்து அந்தச்சிவன் நானென்று சோகம் பாவஞ்செய்ய இந்தவான்மாவை யுள்ளடக்கிச் சிவன் பிரகாசியா நிற்பனென்றுஞ் சொல்லப்படும்.

உ - ம். "அஞ்செழுத்தா லுள்ள மானுடைமை கண்டதனை யஞ் செழுத்தா லர்ச்சித் திதயத்தி - லஞ்செழுத்தாற், குண்டலியிற் செய் ேதாம கோதண்டஞ் சாதிக்கு, லண்டனுஞ் சேடனுமாகு" என்று சி-ஞா-போ-தத்தறிக.

பஞ்சாக்ஷரத்தில் "நமசிவய" மென்றது தூலமாம். "சிவயநம"வென்றது சூக்குமமாம். "சிவயவசி"யென்றது— காரணமாம். "வசிவ" எனறது மகாகாரணமாம். சிகாரம் முதலாக யோதில் அருள்நாடுமெனவும், பஞ்சாக்ஷரம் குரு முகத்தா லறியவேண்டுமெனவும் படும். "நம் முதலாக யோதிலருளுடாது நாடுமது சிம் முதலா யோதுநீசென்று" என்றிருப்பதனாலறிக.

பஞ்சாக்ஷரந் திரிபதார்த்தமா யடங்குமென்பது—நம, சிவ, ஆய, வெனப்பிரிக்கில் "நம" என்றது ஜீவாத்மாவை யும், "சிவ" என்றது பரமாத்மாவையும், "ஆய" என்றது ஐக்கியத்தையும் "தத்வமசி" வேத மகாவாக்கியத்தின் வாயி லாக விளக்கிக்காட்டு மெனப்படும். நகாரமகாரங்கள் பாச மாகவும், சிகரவகாரங்கள் பதியாகவும், யகாரம் பசுவாகிய ஆன்மாவாகவுந் திரிபதார்த்தமாக அடங்கற்பாலதென்றறிக வென்பதாம். வேதம் நான்கினும் மெய்ப்பொருள்ாக நிற் பது நமசிவயமென்னும் பஞ்சாக்ஷரமே யாமெனப்படும். பஞ் சாக்ஷரத்தில் தொண்ணூற்றாறு தத்துவமு மடங்கி நிற்கு மாம். "தீங்கான தத்துவங்க டொண்ணூற்றாறுஞ் சிவாயநம வஞ் செழுத்திற் செனித்தவாறே" என்று ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் சொல்லியிருப்புதை யறிக,

உ - ம். வேதநான்கினு மெய்ப்பொருளாவது நாதநாம நமசி வாயவே" என்றும், "நவ்விரண்டு காலதாய் நவின்ற மவ்வும் வாயு தாய், சிவ்விரண்டு தோள்களாய்ச் சிறந்த வவ்வும் வாயதாய், யவ்வு ம்யவ்வுமுடியதா யெழுந்த செம்மல் நேர்மையைச், செம்மை யோர் ந்து நிற்பதே சிவாயமைந் தெழுத்துமே" என்றும், "யகாரமிலிங்க மாம் நாளம் வகாரஞ், சிகாரமேற் பீடந் தெரிக்கின்—மகாரந்தான் கண்டமேயாகுங் கவினாடிப்பீடம், பண்டிகழு நஃகாமையார்" என் றும், நகாரமே சத்தியோசாத முக நாடின், வகாரந் தான் வாமமென மதிக்கச்—சிகாரம், அகோரம் வகாரந் தற்புருடமாகும், யகாரமீசான முகமென்" என்றும், சொல்லப்பட்டிருப்பனையறிக.

### அஷ்டாக்ஷரமாகிய மூலபஞ்சாக்ஷரமாவது.

"ஆம், ஊம், ஓம், சிவாயநம" என்னு மட்சரங்களே மூலபஞ்சாக்ஷரமென்றும், அஷ்டாக்ஷரமென்றுஞ் சொல்லப் படும். ஆம் என்றது - அடி, ஊம்என்றது - நடு, ஓம்என் றது - திருவடி சி என்றது - சிவம், வ என்றது - சத்தி, ய வென்றது சீவனென்னும் ஆத்மா, ந என்றது திரோதாய், ம என்றது மலர்பாதமுமாம். நகாரம் - பிரமம், மகாரம் விஷ்ணு, சிகாரம் - ருத்திரன், வகாரம் - மகேஸ்வரன், யகா ரம் சதாசிவனுமாம். "அஞ்சுமூன்று மெட்டதா யநாதியான மந்திரம்" என்று சிவவாக்கியரும், "ஞாலமதிலெட்டெழுத் துத் தெய்வப்பேரை நயந்தறியாப் பேதையறிவில்லாரோடு" என்று ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகளுங் கூறியிருப்பதையறிக.

### ஆதாரம், நிராதாரம், மீதானமாவன.

"ஓம் நமசிவாய" என்றது ஆதாரமும், "ஓம் சிவாய நம" என்றது நிராதாரமும், "ஓம் ஆம் அவ்வும் சிவாயு" என்றது மீதானமுமாம். ஆதாரமாவது - நடுமூலம். நிரா தாரமாவது - நடுஇருதயம். மீதானமாவது - புருவமத்தி யம். மீதானமாகிய புருவமத்தியில் பேரொளிப்பிரபையே நிராதாரமென்பதாம். ஓம் என்றது உச்சியுமூலமுமொன்று யூடுருவி நிற்குமென்றும், "சிவாய" வென்றது சோதிமயமாய் நிற்குமென்றும், அந்தச்சோதி புருவத்திடை, வெளி, உச்சி, உண்ணுக்குக்குமேலாய் காணவுந் தன்மயமாய் நிற்குமென் றும், அந்தப் பேரொளியே அடிமுடிக்கு நடுவாய், நல்வினை தீவினைக்கு நடுவாய், இடைபிங்கலைகளுக்கு நடுவாய், இரவு பகலுக்கு நடுவாய் விளங்கி அருவுருவில்லா தானந்தமய மாய் நின்ற அவனைக்கண்ட பரமஞானிகளே சாயுச்சியத் தைப் பெறும் பாக்கியவான்களெனப் படுவரென்றுஞ் சொல் லப்படும்,

### பிரணவமகிமை.

பிரணவம் உம்பர்நாயகன் றிருவாக்கி லுதித்ததெனப் படும். அந்தப்பிரணவம், பரப்பிரணவம், அபரப்பிரணமென் றிருவகையாம். பரப்பிரணவமாவது - வாச்சியரூபம் ஒலி

வடிவு சிவம் ஓம் என்பதாம். இது சச்சிதானந்தச் சொரூப மாகிய சிவமே யின்பத்தைப் பெருக்கும் ஆதிக்கியத்தோடு பொருந்தி நிற்பதாம். அபரப்பிரணவமாவது—வாசகரூபம் நாதவடிவு சத்தி என்பதாம். இது மாயாசொரூபமாய், சத்த வடிவாய்ச் சிவதத்துவ வுண்மையாகிய ஆதிக்கியத்தைப்புண் டாக்கி வான்மாக்களுக்கு நன்மைகளையெல்லாந் தருவதாம். எல்லாப்பொருளுந் தோன்றுவதற்கு மூலமாயுள்ள இந்த அபரப்பிரணவத்தினின்றும் இருக்கு முதலிய வேதங்களுந் தோன்றினவாம்.

அகார உகார மகாரமெனு மூன்றட்சரங்களையுங்கூட்டி ஓத ஓங்காரம் பிரணவமானதெனப்படும். விந்து திரோதாய் சத்தியும், நாதம் கிரியாசத்தியுமாம். அகாரம் - பிரமா, உகா ரம் - விஷ்ணு, மகாரம் - ருத்திரன், விந்து - மகேஸ்வரன், நாதம் - சதாசிவனுமாம். இவர்கள் பஞ்சகர்த்தாக்களெ னப்படுவாராம். அகாரம் சூரியப்பிரகாசம்போன்ற மனதை யும், உகாரம் சோமப்பிரகாசம்போன்ற புத்தியையும், மகா ரம் அக்கினிப்பிரகாசம்போன்ற அகங்காரத்தையும், விந்து தீபப்பிரகாசம்போன்ற சித்தத்தையும், நாதம் ஆயிரக்கோடி யாதித்தப்பிரகாசம்போன்ற புருடனையுமாக, அகார, உகார, மகார, விந்து, நாதமென்னுமைந்தக்கரங்களும் நிறைநிறையே யதிட்டித்து நின்று செலுத்துமெனப்படும். கடலின்தானத் திலே மனதும், நீரின்தானத்திலே யான்மாவும், அலையின் தானத்திலே ஆன்மபோதமும், வாயுவின்தானத்திலே கன்ம மும், ஆகாயத்தின் தானத்திலே விஷயமுமாய் நின்றதெனக் கொள்க. அகாரம் - ரேசகம், உகாரம் - பூரகம், மகாரம் - கும்பகமுமாம்.

ஆத்மாக்களை இரட்சிக்கத்தக்க திருவருள்புரிந்தபரமேஸ் வரன் பராபரையான சத்தியின் துடையிலே தம்முடைய பெரு விரலங்குஷ்டங்கொண்டு கிறுகையினாலே பராசத்தி பொறு க்கமாட்டாமல் ஓவென்றனளாம். அப்போது பரமேஸ்வரன் ஆவென்றமைக்க அந்தவெழுத்து அகாரமானதென்றும், அப் போது பராசத்தி அடக்கமாய் உளவென்ன அந்தவெழுத்து உகாரமானதென்றும், அகாரம் சிவமும், உகாரம் சத்தியுமாக

அகர உகாரங்கூடி ஓரெழுத்தானதென்றும், இலக்கத்தில் (அ) எட்டாகிய அகாரமும் இலக்கத்தில் (உ) இரண்டாகிய உகாரமுங்கூடித் தொகைக்குப் (௧0) பத்தானதுபோல யகாரம் சீவனெனதென்றும், சத்தியும் சிவமுங்கூடி ஆத்மாக்களைச் சிநேகம் வருவித்ததென்றும், விந்துவாகிய நகாரந் திரோதாசத்தியானது ஆத்மாக்களைப் பிரபஞ்சத்திலே யிச்சையை வருவித்ததென்றும் நாதமாகிய மகாரம் கிரியாசத்தி ஆத்மாக்களைப் பிரபஞ்சத்திலே மெய்யென் றழுத்தாமல் சிவத்தில் ஆசையை வருவித்ததென்றும், இது சிவத்தோடுகூடி நிற்குமென்றும், யவ்வானசீவன் இந்த உருக்கத்தைச் சத்திபெறுளென் றறியாமல் நின்றது கேவலமான யிருளென்றும், எப்பொழுது பெறுவோமென்ற விசாரம் சகலமான பகலென்றும், இவை யிரண்டிற்கும் இரவு பகலென்று பெயரானதென்றும், இவை ஞானமுறைமைக்குச் சகலாவத்தையென்றும், கேவலாவத்தையென்றும் பெயரானதென்றும், இந்தமுறைமை திருமூலதேவருக்கு ஆதி கபிலமாமுனிவர் திருவள்ளுவநாயனார் வடிவமாகத் திருவாய்மலர்ந்தருளியதென்றுஞ்சொல்லப்படும்.

சகலாவத்தையென்றது — தனுகரணாதிகளோடு முதல்வன் றனது சிற்சத்தியால் கலைமுதலிய கருவிகளைத் தோற்றுவித்து கருவிகளை ஆன்மாக்களுக்குக் கூட்டிக் காரியப்படுத்திப் போகங்களைப் புசிப்பிக்கையாம்.

கேவலமென்றது—சங்காரகாலத்திற் றனதிச்சாஞானக்கிரியைகள் விளங்காமல் மலமேலீட்டினால் மறைப்புண்டு கிடைத்தலாம்.

உ - ம். "அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யாங்கா ரங்கள், செவ்விய விந்து நாதஞ் சித்துமோ டுள்ள மாகு, மொவ்வெனு மெழுத்தா மைந்து முணர்வுதித் தொடுங்கு மாறு, பவ்வமுந் திரையும் போலும் பார்க்கிலிப் பண்புந் தோன்றும்" என்றும், "அயனரி யானுமீசர் சதாசிவ ரதிதெய்வங்கள்" என்றும், சி-ஞா-சி-யிலும், "எட்டிரண்டுங் கூடியே யிலிங்கமான தேவனை, மட்டதா யும் மூளை மதித்து நோக்க வல்லிரேற், கட்டமான பிறவியின் கருக்கடல் கடக்கலாம்" என்றும், "அகாரகாரணத்துளே யனேகனேக ரூபமாய், உகாரகாரணத்துளே உருத்தரித்து நின்றனன், மகாரகாரணத்துளே மயங்கி

நின்றவையகஞ், சிகாரகாரணத்துளே தெளிந்ததே சிவாயமே" என்றும், "அழிவிலாது நின்றதே அகாரமும் உகாரமும், குளிகையான சோதியுங் குலாவிநின்ற தவ்விடம், வெளியதாகு மொன்றிலே விளைந்ததே சிவாயமே" என்றும், "மீன்றதாயு மப்பனு மியங்குகின்ற நாதமுந், தோன்றுமோ ரெழுத்திஞெடு சொல்லவேறு மில்லையே" என்றும் சிவவாக்கியரும், "எட்டுமிரண்டு முருவான லிங்கத்தே" என்று வுண்மைவிளக்கத்திலும், "அகர முதல வெழுத்தெல்லா மாதிபகவன் முதற்றே யுலகு" என்று திருவள்ளுவநாயனரும், "அகார உகார சிகார நடுவாய, வகார யகார வாசியெனவே, நகார மகார மிரண்டுமெறுத்துச், சிகார முதல்வன் சிறந்து நின்ருனே" என்று திருமந்திரத்திலு மறிக.

## ஊமை யெழுத்தாவது.

பரத்துக்கப்பால் சிற்பரம் உகாரம், அவ்வுகாரத்தின்மேலே தற்பரம் அகாரம், அவ்வகாரத்தின்மேலே சிவப்பாழ் சிகாரம். அச்சிவப்பாழுக்குமேலே பரப்பாழ் யகாரம், அந்த யகாரத்தின்மேலே பெரும்பாழாகிய வெளியே ஊமையெழுத்தென்பதாம். ஓங்காரம் ஊமையெழுத்திற் பிறக்குமாம். ஓங்காரத்தில் அகார உகார முதித்துநிற்குமாம். அவ்வெழுத்து நாதமும், உவ்வெழுத்து விந்துவும், ஒவ்வெழுத்து மகாமேருவுமா மென்க. உகாரத்தில் மவ்வும், அகாரத்தில் யவ்வும் வவ்வும், சிகாரத்தில் மவ்வும், மவ்வில் நவ்வுந் தோன்றுமெனப்படும்.

உ - ம். ஓங்கார முதலூமை தனிற்பிறக்கு மொவ்வெழுத்தினீரெழுத்து முதித்து நிற்கும், பாஙகான உவ்வெழுத்தில் மவ்வுந் தோன்றும் பகர்ந்த அவ்வில் யவ்வெழுத்தும் வவ்வுந்தோன்றும், நீங்காத சிவ்வெழுத்தில் மவ்வுந்தோன்றும் நின்ற மவ்வில் நவ்வெழுத்து நேராய்த் தோன்றும்" என்று ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள் வுடலறி விளக்கத்திற் காண்க.

## சுழுமுனையாவது.

அந்த நாதாந்தச்சோதியை மனம்வாக்குக் காயமெனு மூன்று மொருமித்து ப்ரமரந்திரத்திலே நோக்கவும் நோக்குமிடமே சுழுமுனையெனப்படும். இதுவே ஓங்காரமாய், மந்திரகிரியாய், கடவுள்நாடியாய், அக்கினி, ஆதித்தன், சந்திரன் என்னு மூன்றுமொன்ருன விடமாயிருக்குமென்பதாம்.

## ஆதாரமூல அக்ஷரங்களாவன.

சூரியகலையில் சரம் நடக்கும்போது ஆதாரதேவதை யறிய (1) அம், உம், சிம், வம், ஓம் (2) அவ், மவ், ஓம் நம சிவய, (3) உம், அம், சிவ, சிவயநம, (4) சிவாயநம, ஓம், ஐயும், (5) சிவசிவா, அவ், உவ், சம், ஓம், (6) மவ், உவ், நமசிவாயா, என்று உச்சரிக்கப்படவேண்டுமாம்.

சந்திரகலையில் பூதி நடக்கும்போது—(1) ஓம், கிலீம், நமசிவாயா, அவ், ஓம், (2) ஓம், ஐயும், சிவ, அங்க்ஷ, (3) சிவாயநம, அம், உம், ஓம், (4) ஆம், உம், மம், ஈம், ஓம், (5) யம், ரம், அம், உம், மம், ஓம், (6) ஈம், ஓம், அம், உம், மம், என்று உச்சரிக்கப்படவேண்டுமாம்.

ரேசகம், பூரகம், கும்பக மிதுகளிலுள்ள அக்ஷரங்களைப் பிரித்து குருமுகத்தி லறிந்துகொள்க.

## ஓம் சமஸ்த மந்திராதிகளுக்கு முதன்மையென்பது.

ஓம் மென்கிற உத்கிருஷ்டமான ஏகாக்ஷரத்தினால் விளங் கப்படுகிறதெதுவோ அதுவே பிரமமெனப்படும். சமஸ்த் வேதங்களும், சாஸ்திரங்களும், இதிகாசபுராணாதிகளும், சம ஸ்த சப்தங்களும், சமஸ்த மந்திராதிகளும், பிரணவாகாரமா கிய ஓங்காரமே மூலாதாரமாக முதன்மையாய் நின்றொலிக் கின்றனவாம். ஆந்திரம், கர்னாடகம், உடுதி, மஹாராஷடகம், சௌராஷடம், பங்காளி, குஜராத்தி, முதலிய பாஷைகளைக் கற்கத் துவக்கும்போது முதலில் "ஒ நம: சி வா சி தம்" என்னுஞ் சடாக்ஷரத்தைக் கற்றபின் மற்றஅக்ஷரங்களைக் கற் பதும் சகசமாயும், முதலில் கற்குமக்ஷரங்கள் ஓம் நமசிவாய சிதம் என்பதனால் ஓம் முதலாக நின்றொலிக்கின்றதாயு மிருக்கின்றதென்க.

"ஓம் நமோநாராயணாய" என்று வைணவதிருமந்திரத்தி லும், "ஓம் பிரசன்னஞ்சிநேயம் ப்ரப்ா திவ்யகாயம்" என்று மாத்வர்களது திருமந்திரத்திலும், "ஓம்பகவதி பாக்யவதி" என்று சாக்தேயர்களது திருமந்திரத்திலும் "ஓம் கஜமு காய அஜமுகாயநம:" என்று கணாதிபத்தியர்களது திரு மந்திரத்திலும், "ஓம் சரவணபவ ஷண்முகதேவ" என்று

கௌமார்த்தர்களது திருமந்திரத்திலும் ஓம் முதன்மையாக நின்றொலிப்பதாயு மிருக்கின்றதென்க. மோக்ஷநிலையையடைந்துய்ய விரும்புந் தேவதைகளும், ஞானிகளும் சாதனைசெய்வதற்குரிய நற்கருவியாயுநின்றது ஓங்காரப் பிரணவமேயாமென்க. ஸ்ரீ கிருஷ்ணபகவான் வேதங்களுக்கெல்லாம் நானே பிரணவமாயிருக்கிறே னென்றார். "ப்ரணவஸ் ஸர்வ வேதேஷு" என்றும் "மேதயம் பவித்ர மோங்கார ருக ஸாம்யஜுரேவச" என்றும் பகவத்கீதையிலறிக.

உ - ம். ஓங்காரம் பிந்துசையுக்தம் நித்யம் தியாயந்தி யோகிநாம், காமதம் மோக்ஷதம் சைவ ஓங்காராயநமோநமா:" என்று சிவரகசிய மூலபீஜத்திலும், "ஓமென்னும் பதமதனில் வேதமாதி வுற்பவிக்கு மாலம் வித்தி லுதிக்குமாபோல், ஓமென்னும் பதமதனை யுணர்ந்தார் தானே யுணர்ந்தார்கள் வேதாதியுரைகளெல்லாம்" என்று புஜண்டர்நூலிலும், "அலகிய சீர்பிரணவத்தை யுணர்ந்தவரே வீட்டின்பமடையவல்லார்" என்று அகஸ்தியமாமுநிவர் நூலிலும் "ஓங்காரமாய்நின்ற வத்துவிலே யொருவித்து வந்து, பாங்காய் முளைத்த பயனறிந்தாற் பதினாலுலகு, நீங்காம நீங்கி நிலைபெறலாமிந்த நிச்சயந்தான், ஆங்கார மும்மத மற்றோருபதேச மாமனமே" என்று பட்டணத்துஸ்வாமிகள் பாடலிலுங் காண்க.

## ஓர்மொழி யுபதேசமென்பது.

ஞானசாரியாரா லுபதேசிக்கப்படும் ஓர் மொழியென்றது பிரமஸ்வரூபமெனவும், ஒப்பற்ற பிரணவமாகிய மூலமந்திரமெனவும், மோனமாகச் சொல்லாமற் சொன்னதெனவும், வாசியினாற் காட்டும் பேரின்ப வுண்மையெனவும், சின்முத்திரையாற் காட்டு மறுத்தமெனவும், சும்மாயிருத்தலெனவும் படும். இந்த ஒருமொழியாலே வேதாகம சாஸ்திர புராணமுதலியவைகளும், சரியை, கிரியை, யோகபாவனைகளு மொழிந்து போமென்றும். அண்டங்களும் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களு மொடுங்குமென்றும், ஆத்மஸ்வரூபமாகிய தன்னிலையைக் காட்டுமென்றும், அசைவற நிற்குந்தன்மையை யுடையதென்றும், சாயுச்சியபதவியை யடைவிக்குமென்றுங் கூறப்படும்.

உ - ம். "ஓ மென்னு மோங்காரத்துள்ளே யொருமொழி" என்று திருமந்திரத்திலும் "மொழியாலுணர்க்கிற் குறிக்கப்படுமெ

ன்று முதற்வசல்" என்றும் "அழியாவிரதஞ் சிற்றம்பலநாடி யக மசிழ்ந்து, விழியாலெனக் களித்தான் வீழ்த்தே னின்பமே லிட் டதே" என்றும் சிற்றம்பலநாடியிலும், "கருணைவிழியதனால் அரு வினைகளற நோக்கி யாணவமேபோக்கி" என்று மஹாவாக்கியத்தி லும், "மும்மாயைக்கப் பாலா முப்பாழுங்கண்டு நீ சும்மாயிருவெ ன்று சொன்ன னம்மானை" என்று அத்துவிதக் கலிவெண்பாவி லும், "சும்மா யிருக்கவைத்தான் சூத்திரத்தை நானறியேன்" என்று பட்டணத்துஸ்வாமிகள் பாடலிலும, "சொல்லரிய நெறியையொரு சொல்லாலுணர்த்தியே சொரூபானுபூதிகாட்டி" என்றும், "சோதி மவுனியாய்த் தோன்றியவன் சொல்லாதவார்த்தையைச் சொன் னண்டி தோழி" என்றும், "சொன்னச்சொல் லேதென்று சொல் வேன் யென்னைச் சூதாய்த்தனிக்கவே சும்மாயிருத்தி, முன்னிலை ஏது மில்லாதே சுகமுற்றச்செய்தே யென்னைப் பற்றிக்கொண்டாண் டி" என்றும், தாயுமானஸ்வாமிகள் பாடலிலும், "வல்லவன் புகல் வன் வாழவொரு மோனமொழியா, லொல்லைசகண்டு" என்று தத் துவராயஸ்வாமிகளும், "ஓங்காரத்துட் பொருளை வொருமொழியா லுணர்த்திப், பாங்காக வாண்டவர்க்குப் பல்லாண்டு கூறுதுமே" என்று தியாகராயஸ்வாமிகள் நூலிலும் "ஒருமொழியாலே சுருதி யாகமநா லுயர்புராணமுமெலாமொழியும், ஒருமொழியாலே சரிஷய நற்கிரியை யோகபாவனையெலாமொழியும், ஒருமொழியாலே அண் டபூதங்க ளொடுங்கிடுந் தன்னிலை தோன்றும், ஒருமொழி சும்மா யிருத்தலாம்தனு லொப்பிலாச் சிவபதமடைவார்" என்று நிஷ்டானு பூதியிலுங் காண்க.

## பிரணவம் நாலாம் வருணத்தார்க்கா மென்பது.

வைதீகத்தினும், ராமாயணத்தில் கிருதாயுகக்கிரமத்தில் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னு நால்வர்க்குந் தபோமுக்கியஞ் சாற்றுவதும்போல, பிரமாண்டபுராணத்தில் கிருதாயுகத்திற்குப் பிராமணசந்நியாசி முக்கியன், திரேதா யுகத்திற்கு க்ஷத்திரியசந்நியாசி முக்கியன், துவாபரயுகத் திற்கு வைசியசந்நியாசி முக்கியன், கலியுகத்திற்கு சூத்திர சந்நியாசி முக்கியனென் றிருத்தலானும், ப்ரணவப் பூர்வப் ரசாத மறியாதவன் குரு வல்லனென்று கூறுதலானும், ஸ்ரீ மகுடாகமத்தில் "நிர்வாண தீக்ஷிதே சூத்ரே ப்ரவஞ்ச நியோ ஜயேத்" என்றிருத்தலானும், காமிகத்தினு மப்படி யே சொல்லப்பட்டிருப்பதானும், பிராமணர் முதல் பத்து சாதிக்கும் பிரமசரியம், கிரகித்தம், வானப்பிரத்தம், சந்நி

யாசமென்னு நான்காச்சிரம முண்டென்று சிந்திய விசுவ சாதாக்கியத்திற் கூறப்பட்டிருப்பதானும், விசிஷ்ட சமயி முதலாயினோர்க்குப் பிராமணியங் கொடுத்திருத்தலானும், மேல்சைவர், அநாதிசைவர்; ஆதிசைவர், மஹாசைவர், அநு சைவர், அவாந்தரசைவர், பிரபரசைவர், அந்திசைவர்; என்னும் பேதமான சைவருக்குள் அநாதிசைவர், பிரபரசைவர், அந்திசைவர் நீங்கலாக மற்ற சைவர்களுக்கு விசேஷதர்ம மாகிய பஞ்சமகாயக்கியம் கூறுகின்றமையானும், வீரசைவம் மோக்ஷாதிகளனுட்டித்தற்கும், மற்றச் சாமான்னியசைவம், மிசிரசைவம், சுத்தசைவமெனு மூன்றும் மந்தாதிகளனுட்டத்தற்குங் காரணமானதென்று சொல்லப்படுவதானும், சூத்திரர்கள் புலையர்களாகிய விவர்களில் எவர்கள் பகவானை நம்பியிருக்கிறார்களோ அவர்கள் பரமபதம் சேருவார்களென்றும், பிரமபதத்தை யடைவார்களென்றும் பகவத்கீதையில் " மாம் ஹிபார்த்தவ்ய பாஸ்ரித்யயே பிஸ்யு: பாபயோநய: ஸரியோ வைஸ் யாஸதா சூத்ராஸ்தே பியாந்தி பாரங்கிதம்" என்று கூறப்படுதலானும் பிரணவம் நாலாம் வருணத்தாருக்காமென்பது பிரஸித்தமேயா மென்கவென்பதாம்.

## பஞ்சமகாயக்கியமென்பது.

பஞ்சமகாயக்கியமென்பது — ஐம்பெரும் வேள்விகளெனப்படும். அவையாவன: பிரமயக்கியம் அதாவது—வேதமோதுதல். பிதுர்யக்கியம் அதாவது - அநநத்தினலாவது ஜல தருப்பணத்தினலாவது பிதுர்களைக்குறித்து திருப்தி செய்வது. தேவயக்கியம் அதாவது-தேவதைகளைக்குறித்து அக்கியால் வோமஞ்செய்வது. பூதயக்கியம் அதாவது-காக்கையாகிய வாயசபலி முதலானவை வைப்பது. மானுடயக்கியம் அதாவது-அதிதிகளுக்கு சாப்பாடு போடுவது. இந்த வைந்துயக்கியமும் பஞ்சமகா யக்கியமெனப் படுவதாம். இந்த ஐந்துந் தினந்தோறும் கிருகஸ்தனுக்கு கிரமமாக மகரிஷிகளால் விதிக்கப்பட்டிருக்கின்றனவென்க. வேள்வியென்றது—ஆராதனை, ஈகை, ஓமகுண்டம், மகநாள், யாகம் என்பனவாம்.

ஏந்திரம் அல்லது அம்மி, முறம் துடைப்பம், உரல், உலக்கை, தண்ணீர்க்குடமென்னு மைந்தையும் கிருகஸ்தன் உபயோகப்படுத்திக்கொள்ளுவதினாலவனுக்கு ஐவகைக் கொலைபாதங்க ளுண்டாகிறதென்றும், அவைகளைப் போக்குதற்காக மகாரிஷிகளால் மகாயக்கியம் விதிக்கப்பட்டதென்றும், இந்த மகாயக்கியங்களைத் தினந்தோறுந் தன்சக்திக்குத் தக்கபடி யெவன் செய்கிறானோ அவன் கிருகஸ்தாசிரமத்தி லிருந்தபோதிலு மந்த ஐந்து கொலைபாவதோஷங்களை யவனடைகிறதில்லையென்றும், மநுசாஸ்திரம் மூன்றாவதத்தியாயத்திலேம்பெரும் வேள்வி செய்தற்கேது கூறப்பட்டிருக்கிறதென்றுஞ் சொல்லப்படும்.

### வேள்விகளாவன.

கன்மவேள்வி, தபவேள்வி, தியானவேள்வி, ஜபவேள்வி, ஞானவேள்விகளெனவைந்தாம். இவற்றில் கன்மவேள்வியாவது—வெடிய ஐந்துநாழிகைக் கெழுந்திருந்து அந்த வருணாச்சிரமத்துக்குரிய கிரியைகளை ஏற்றக்குறைச்சலறப் பண்ணுகையாம். தபவேள்வியாவது—சந்திராயணம் அஷ்டாங்கியாதிசாப்பிடாமை விரதங்களினாலே தேகத்தைத் தபிப்பிக்கிறதாம். ஜபவேள்வியாவது—அந்தந்த வருணாச்சிரமாநுகுணமான மந்திரத்தை வாசகமாக ரகஸ்யமாக மானசமாகத் தான் ஜபிப்பதாம். தியானவேள்வியாவது — இருதயாதிஸ்தானங்களிலே மூர்த்திகளைப் பலகாலும் தியானிப்பதாம். இந்நான்கும் போகத்தை யூட்டுவனவாம்.

ஞானவேள்வியாவது—ஞானநூலதனை யோதல், அதனைப் பிறர்க் கோதுவித்தல். அந்நூற்பொருளை தமது மதிநுட்பத்தால் பிறர்க்குக் கேட்பித்தல். அந்நூற்பொருளைத் தான் நன்றாகக் கேட்டல், குறைவில்லாத வப்பொருளைச் சிந்தித்தலென ஐவகையாகு மெனப்படும். ஞானவேள்வி வீடுபேற்றத்தைத் தருவதாம். கன்மம், தபசு, ஜபம் தியானமாகிய நான்கினையுமநுட்டித்தால் பெறும்பலன் யாதெனில்? அவைகளின் வழிநின்றநுட்டித்தவர்களுக்குப் போகத்தைக் கொடுக்குமாம். போகம்புசித்துத் தொலைந்தவாறே மற்றொரு சரீரமெடுத்தற்குக் காரணமாம். இவையிற்

ருலே மோட்சமுண்டாகாதாம். இத்தன்மையுடையகாதலி ஞலே மோட்சத்தையடையக் கருதின ஞானவான்கள் விசி ட்டமாகிய மேலான ஞானபூசனையே யனவரதமுஞ்செய்வார் கள் என்றதென்க. விசிட்டமென்ருல் மேலானது.

கன்மம், தபசு, ஜபம் தியானமாகிய நான்கும் ஒன்றுக் கொன்று மேற்பட்டிருக்குமாம். அஃதெங்ஙனமெனில்? கன்மத்தைப்பற்ற தவம் பதின்மடங்குபல மதிகமென்றும், அத்தவத்தைப்பற்ற ஜபம் நூறுமடங்குபல மதிகமென்றும், ஜபத்தைப்பற்ற தியானம் நூறுமடங்குபல மதிகமென்றும், அதனைப்பற்ற ஞானயாகமானது சாதனப்பிரயாசமற்பமாய் மகத்தான யளவற்ற பலத்தைக் கொடுப்பதாயிருக்குமாம்.

உ - ம். "ஞானநூறதனையோத லோதுவித்தனற் பொருளைக் கேட்பித்தருன் கேட்டனன்று, வீனமிலாதிப் பொருளதனைச சிந் தித்தலெந்துமிறைவ னடியடைவிக்குமெழின் ஞானபூசை, யூனமி லாக் கன்மங்கடபஞ் செபங் கடியான மொன்றுக்கொன்று யுருமவை யூட்டுவது போகம், மானமையான் மேலான ஞானத்தா லரனையர்ச் சிப்பர் வீடெய்த வறிந்தோரெல்லாம்" என்று சி - ஞா - சி.

புண்ணியபாவ கன்மங்களாவன.

புண்ணியமென்றது - தர்மம், அது ஞானதிக்கு உபலக்ஷ ணம். பாவமென்றது - அதர்மம், அது அஞ்ஞானதிக்கு உபலக்ஷணம். உபலக்ஷணமென்பது - ஞாபகமாம்.

தர்மமாவது - தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரிய மெனு நான்குவிருத்திகளையுமுடையதாம். சாத்வீககுணதிக் யத்தாலே யதாவது சாத்வீககுணமிகுதியினலே தர்மம், ஞானம், வைராக்கியமெனு மூன்றும், ராஜசகுணதிக்யத்தா லே சாகப்பிரவர்த்தியான ஐஸ்வரியமுமுண்டாயினவாம். தா மதகுணமிகுதியினலே அதர்மம், அஞ்ஞானம், அவைராக் கியம், அநைஸ்வரியமெனு நான்கையும் விருத்தியாகவுடை யதென்க. இவையிற்றின்பலன்களாவன :— தர்மத்தினலே ஸ்வர்க்கமும், ஞானத்தினலே பதமுத்தியும், வைராக்கியத் தினலே பிரகிருதிலயமும், ஐஸ்வரியத்தினலே யதேஷ்டசித் தியுமாம். அதர்மத்தினலே பசுபக்ஷியாதிகள் சநநமும்,

அஞ்ஞானத்தினாலே நரகப்பிராப்தியும், அவைராக்கியத்தினாலே பந்தமும், அநைஸ்வரியத்தினாலே அபீஷ்டவிக்னமுமுண்டாகுமாம். இவற்றுள் பேததருமம் இயம நியமமெனவிருவிதமாம். இயமமாவது - அஹிம்சை, சத்தியம், ஆஸ்தேயம், பிரமசரியம், தயை, ஆர்ஜவம், க்ஷமை, திரிதி, மிதாசாரம், சவுசமெனப்பத்தாம். நியமமாவது - தபசு, சந்தோஷம், ஆஸ்திக்யம், தானம், ஈஸ்வரபூஜை, சித்தாந்தசிரவணம், லச்சை, பக்தி, செபம், விரதமெனப்பத்தாம். இயமநியமவகைகளின்விரிவு முன்னியற்றிய உண்மைப்பொருள்விளக்கமென்னு நூலிற் கண்டுகொள்க.

## புண்ணியகன்மங்களாவன.

ஒழுக்கம் அதாவது குலதர்மம்வழுவாமை. இது எல்லார்க்குஞ் சிறப்பினைத்தருவதாம். இன்பத்தை யுண்டாக்குவதற்கே காரணமாயிருத்தலினால் உயிரைப்பார்க்கினுஞ்சிறந்ததெனப்படும். “ஒழுக்கம் விழுப்பந்தாலானொழுக்கமுயிரினுமோம்பப்படும்” என்றார் திருவள்ளுவநாயனார். அன்பு அதாவது மாதா பிதா குரு தேவதாபக்தி யென்பனவாம். அருள்-அதாவது எல்லாரிடத்தும்வைத்தகிருபை. ஆசாரம்-அதாவது வேதாகமங்களிற்கூறியவற்றை யநுட்டித்தல். உபசாரம் - அதாவது பெரியோரிடத் தனக்கியன்ற யாதானுமோருபசாரஞ்செய்தல் · உறவு - அதாவது பெரியோரிடத்தில்வைத்தமித்திரபாவம். சீலம் - அதாவது ஒருநெறிப்பட்ட நல்லறிவு. “ஞானமுஞ்சீலமு நல்லறிவாகும்” என்றிருப்பதாலறிக. வழுக்கிலாத்தவம் அதாவது சாந்திராயணமுதலிய நியமவிரதம். தானம் அதாவது சற்பாத்திரத்திற் றன்றேடிய பொருளைச்செலுத்துதல். இது உத்தமாதிபேதத்தான் மூவிதமாம். அவையாவன :— பெரியோரிருக்குமிடந்தேடிப்போய்த் தனக்கியன்றதைக்கொடுத்தல் உத்தமமும், சற்பாத்திரத்தை தன்வாய்தலிலழைப்பித்துக்கொடுத்தல் மத்திமமும், தன்னைவந்துகிட்டி கேட்டிருக்கையினும் இன்று நாளையென்று கண்ணழித்துப் பின்புகொடுக்கை யதமமுமாம். வந்தித்தல் அதாவது பெரியோர்முதலாயினாரைத் தோத்திரஞ்செய்தல். வணக்கம் அதாவது தான்வணங்குதற்குரியாரை

வணக்கஞ்செய்தல். வாய்மை அதாவது ஒருக்காலுந்தவறு தல்சொல்லாது வுண்மைசொல்லுதல். அழுக்கிலாத்துறவு - அதாவது சர்வசங்காரபரித்யாகம். அடக்கம் அதாவது குலங் கல்வி நிறைவாயிருந்தாலும் கர்வமில்லாதிருத்தல். ஒருவன் அடக்கமானது தேவருலகத்திற்செலுத்துமாம். அடங்கா மையானது நரகத்திற்செலுத்துமாம். "அடக்கம் அமரரு ளுய்க்கு, மடங்காமை யாரிருளுய்த்துவிடும்" என்றார் திரு வள்ளுவநாயனார். அறிவோடர்ச்சித்தல் அதாவது அவரவர் சாத்திர சூத்திரங்களின் ஓதியபடி யவரவர்கொண்டதேவதை யைப்பூசித்தல். ஆதி யதாவது அக்கினிகாரியம், கபிலபூஜை, ஆலயசேவை முதலாயின. இந்தப்பதினாறும் இவைப்போல் வனவும் புண்ணியகன்மங்களென்பனவாம்.

பாவகன்மங்களென்பது - புண்ணியகன்மங்களுக்குமா றாய் வருவனவெல்லாம் பாவகன்மங்களெனப்படும்.

புண்ணியபாவமெனகிற விரண்டுவிஷயத்தாலும் அஞ்ஞா னமே பொருந்தியிருக்கப்பட்ட மலங்களாகிய அழுக்கை அதாவது கருமங்களாகிய வியாதிகளை ஈஸ்வரன்போக்குவ னும். தேகத்துக்குக்காரணமாகிய கருமத்தைப்போக்குகை யால் வைத்தியநாதனென்னும் பெயர் சிவனுக்குண்டான தென்க வேதாகமங்களி லனுக்கிரகம்பண்ணினபடியே நட ந்தவான்மாக்கள் ஐஸ்வரியத்துடனே பொருந்துந்தலங்கள் இந்திரலோகாதிகளெனப்படும். நரகமாவது - துன்பம் பாவ பலனும். ஸ்வர்க்காதிபோகம் புண்ணியபலமெனப்படும். புண் ணியபாவம் துவந்தமாயினர்க்கு மத்தியலோகமாம்.

உ - ம். "ஒழுக்கமன்பருளாசார முபசார முறவுசீலம், வழுக் கிலாத்தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை, யழுக்கிலாத் துறவடக்க மறிவோ டர்ச்சித்தலாதி, யிழுக்கிலா வறங்களாணு லிரங் குவன் பணியறங்கள்" என்றும், "அருளினு லுரைத்தநூலின் வழி வாராததன் மஞ் செய்யி, னிருளுலா நிறையத் துன்பத்திட்டிரும்பாவந் தீர்ப்பன், பொருளுலாஞ் சுவர்க்கமாதி போகத்தாற் புணியுந்தீர்ப் பன், மருளுலா மலங்கடீர்க்கு மருந்திவை வைத்தியநாதன்" என்றும். "அன்னிலு மின்பதுன்ப மருத்திடே வினையறுப்பன்" என்றும். சி - ஞா - சி - யிற்காண்க.

**கன்மயாகாதிகளாலடையும்பயனுவது.**

கோதானம், பூதானம், முதலாக வுண்டான தானங்கள், அக்கினி ஷ்டோமாதியான யக்கியங்கள், கங்கைமுதலான தீர்த்தங்களாடல், பிரமச்சரியாதி யாச்சிரமநுட்டித்தல், பஞ்சாக்கினி மத்தியிலிருக்கை, பிராய்ச்சித்தங்கள், விரதங்கள், அடையோகங்களாகிய விவையிற்றுக்களை பண்ணினபேர் துக்கமில்லாமற சுகமே யநுபவிக்குந தலமாகையினாலே சுவர்க்கமென்னும் பெயராயுள்ள தேவலோகத்தையடைந்து சுகத்தைப்புசித்துக் கன்மத்துக்கீடான தேகத்தை யெடுப்பார்களெனப்படும். கருமயோகிகளுக்குத் தான, சப, தீர்த்த, யாத்திரை, தேவதாபக்தி யாதிசற்கருமங்களினாலே சித்தசுத்தியுண்டாய் ஞானஞ் சித்திக்குமென்க.

**நின்மலஞானமில்லாதார்க்கு சநந நீங்காதென்பது.**

புண்ணியபூமிகளிலே சஞ்சரித்தும், வனத்திலே சென்று கந்தமூலாதிகளைப் புசித்தும், மலையிலுள்ள குகைகளிலிருந்து தபசுபண்ணியும், யோகாப்பியாசத்தினாலே பசி தண்ணீர் தாக முதலியவற்றிற குணவுகளொழிந்தும், நெடுங்காலம் மரணமில்லாமலிருந்தும், நின்மலஞானமாகிய யாவும் ஈஸ்வரச் செயலென்றறியாதவர்களுக்கு சநநமரண நீங்காவாம். யாவும் ஈஸ்வரச் செயலென்றறிந்தவர்களுக்கு இந்திரியவியாபாரத்துடன் கூடியிருந்தாலும் சநநம் நீங்குமாம. சீவன்முத்தனெவ்விடத் தெவ்வினைகளைச் செய்யினும், ஞானபலத்தினாலே யவைகளவனுக்குப் பலமாகப் பொருந்தாதென்க. அக்கினித்தம்பனஞ் செய்யவல்லோன் அக்கினியை யெடுப்பினும் அணைப்பினுமவனுக்குச் சுடாது. மந்திர அவுஷத சித்தனுக்கு கடித்தவிஷமும் குடித்தவிஷமுந் தாக்காதாகுமாம். பிராரத்த கன்மம்புசிக்கையில் மாயை ஆணவம்கூடிநின்றே புசிப்பதானபடியினாலே சிவஞானியாவதெப்படி யென்னில்? அநாதியேதொன்று தொட்டுவரப்பட்ட கன்மம், மாயை, யாணவமென்னு மலங்களுக்கெல்லாஞ் சத்திகெட்டு வாதனையினாலே தேகமுள்ளளவும் விஷயங்களிலே யுழலுதலைச் செய்விக்குமாம். பிராரத்தகன்மம் அற்றபின் தேகத்தோடே வாதனையு நசிக்குமென்க. வாதனையினால் பண்ணுங் கிரியை பலத்

றைத்தீர்க்கொடாதென்பதாம். ஆன்மா, சரீரத்தைவிட்டு முத்தியையடையும்போது பாசமுத்தமகாகிய கன்மம், மாயை, யாணவமாகிய [illegible] தன்சக்தியினது வலிகெட்டு நிற்கவே தடைபடாமல் முத்தியையடைகின்றனவெனக் கொள்க.

உ-ம் "நாடுகளிற் புகுந்துழன்று காடுகளிற் சரித்து நாகமுழைபுக்கிருந்து நாகமுகமுறவிர்ந்தும், நீடுபலகாலங்கணித்தனுயிருந்து நின்றும் ஞானத்தையில்லார் நிகழ்த்திடுவர் பிறப்பி, லேடுதருமலர்க்குழலார் முலைத்தலைக்கையிடைக்கே யேறி விழியின்படுகடைக்கே கிடந்துமமேரஞானம், கூடுமவர் கூடரிய வீடுங் கூட்டிக்குஞ் சிவனுடனே புணர்ந்திட்டேயிருப்பர்" என்றும், "அங்கித்தம் பனைவல்லார்க்கு [illegible] சாதுமேனாட்டுமந்திரமுடையார்க் கருவிடங்கடேறா. மேலவனுக்கு [illegible] காமமல்லாஞ் செய்சாலுஞானிக் கருவினைகள் சேரா [illegible] முஞ்செய்வினையிருந்து, தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினையவிர்ந்த சக்கரமுஞ் சுற்றுதச் சுழலுமாம்போன், மங்கிப்போய் வாதனையாலுழக்கிக் கெல்லாமலவகளும்பின் காயமொடு மாயுமன்றே" என்றும் சி - ஞா - சி - யிலறிக.

### வைராக்கிய பேதங்களாவன.

சகசவைராக்கியம், தேகவைராக்கியம், ஐஸ்வரியவைராக்கியம், தானியவைராக்கியம், பிரபஞ்சவைராக்கியம், சங்கவைராக்கியம், ஸ்திரீவைராக்கியம், புத்திரவைராக்கியம், பிரதிக்கியவைராக்கியமதாவது காணத்துக்குப்போய்த் தன்னுண்டதில் வருவது. மேற்காதிசம்பவங்களிலும் வரும் வைராக்கியம், ஆக வைராக்கியங்கள் பத்தென்க. நிமித்தகாமாய் வருகிற வைராக்கியமுத்தமமாம், மற்றவை மத்திமமுமாம். சகசவைராக்கியம் - தேகபீடையாலும், தேகவைராக்கியம் – தேகதோஷத்தாலும், சங்கவைராக்கியம்—புத்ரமித்ராதிகளைப் பிரிதலாலும் வருவதாம். ஏனையவெளிப்படை.

### ஐஸ்வரியபேதங்களு மவற்றின் பயனுமாவன.

ஐஸ்வரியபேதங்களாவன: அணிமா, மகிமா, லகிமா, கிரிமா, ஈசத்துவம், வசித்வம், பிராபதி, பிராகாமியம், என எட்டு விதமென்க. இஃது தேகசித்திஐஸ்வரியம், அந்தக் கரணசித்திஐஸ்வரியமென் றிருவிதமாம். தேகசித்தி ஐஸ்வரியமாவது— அணிமா, லகிமா, மகிமாவெனு மூன்றும். அணி

உ - ம். "முனிவர் சித்திகள் விநோதமாத்திரம் தருமுத்தியைத் தராவே" என்றும், "ஆகையாலந்தச் சித்திகள் பிராரத்தமாகுமென் றறிவாயே" என்றும், கைவல்லிய நவநீதத்திலும், "சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க டோறுநிலை நிற்கவீறு, சித்தி செய் துஞ் ஞான மலது கை கூடுமோ" என்று தாயுமானஸ்வாமிகள் சொல்லியிருப்பதையுமறிக

## வினையாவது.

வினையென்பது ஆன்மாக்கள்செய்யுந்தொழிலெனப்படும். செய்பவன் ஆன்மா, செயப்படுபொருளிருவினையாம. "வினையேசெயபவன் செயப்படுபொருளே" யென்னு மிலக்கணத்தாலறிக. இருவினையாவது — நல்வினை தீவினைகளாம். உலகு, உடல், கரணம், காலம், உறுபலம், நியதி, செய்தி, எனுமேழுங் காரகங்களென்க. வினை முதற்காரணமாகிய உயிர் இந்தஏழுகாரகங்களையுந்தனக்குத்துணையாகக்கொண்டு வினைகளையிட்டலு, நுகர்தலுமுடைத்தென்பது எல்லார்க்குமொப்பமுடிந்தமையேயாம். கன்மஞ்சடமாகையாலே தானுகச்சென்று ஆன்மாவைப் பொருந்தமாட்டாதென்றும், பாசசம்பந்தியாகிய ஆன்மாத்தானுகவே கூட்டிக்கொள்ள மாட்டாதென்றும், இவையிற்றைக்கூட்டி ஈசுரன்காரியப்படுத்துவனென்றுஞ் சொல்லப்படும். உலகு—புவனம், உடல்—தூலசரீரம், கரணம்—சூக்குமசரீரம், காலம் — காலதத்துவம், உறுபலம் - திரவியமுதலியனவுஞ் சுக துக்கங்களும், நியதி-நியதிதத்துவம், செய்தி-மனவாக்குக்காயங்களினது தொழிலாகிய தூலகன்மமுமாமென்க.

உ - ம். "உலகுடல் கரணங் கால முறுபல நியதி செய்தி, பலமிவைகொண்டு கன்மம் பண்ணுவ துண்பதானு, னிலவிடாவிவை தான்சென்று வினைந்துயிர்நிருத்திக்கொள்ளா, தலகிலா வறிவினானை யணைத்திடு மருளினாலே" என்று சி-ஞா-சி.

## கருவிலமைபபாவது.

முன் சநநத்திற்செய்த புண்ணியபாவ மிந்தசநநத்திற் பொருந்துவ தெப்படியென்னில்? பேறு-ஒன்றுண்டாகிறது. அதாவது தனக்குயோக்கிய போக்கியப்பொருளைப் பொருந்துதல். இழவு - போகிறது. அதாவது காலாந்தரத்திலதைப் பிரிதல். இன்பம்-சுகம். பிணி-துக்கம். மூப்பு-நரைதிரை. சாக்

காடு-மரணம். ஆகியவிவ்வாறும் முன்னேதானே சூக்கும மாயாகருவினுளமைந்துக் கிடந்தவையன்றி அப்போதப்போ துளவாவனவல்லவாம். பின்னரவை தூலமாய்வந்து கூடு தலவற்றை யநுபவித்தற்குத் துணையாகிய முயர்ச்சியாமெ ன்க. அநுபவத்திற்குத் துணையாகவெழுந் தவ்வளவினொழி யாது மற்றோருடம் பிறப்புமாம். அவ்வறுவகைக்கும் வித் தாய் நிலைபெறுமாம். முற்சநநத்திற் செய்தகருமங்களிந்த தேகத்திலே யநுபவிக்கிற சுகதுக்கங்களுக் கேதுவாமென் றும், இந்ததேகத்திலே செய்கிறபுண்ணியபாவங்களினாலே மேல் தேகாதிகளைப்பொருந்துமென்றுஞ் சொல்லப்படும். இந்த வுடலிலேசெய்கிறகன்ம முன்புள்ளதாகில் மேலைக்குக் கன்மமுண்டாகிறபடி யெப்படியென்னில்? முன்சநநத்தின் சுகதுக்கங்களைப்புசிக்கிற வவதாரத்திலேயுண்டாம் பிரியாப் பிரியங்களென்றதென்க.

இந்தப் பூமியிலுண்டான விளைவுகளெல்லா மிந்தவருடத் துக்குப்புசிப்புமாய் வருகிறவருடத்துக்கு விதையுமாமாற் போல ஆன்மாக்கள்செய்யப்பட்ட கன்மமிந்தச் சநநத்துக் குப்பிராரத்தமாய் வருகிறசநநத்துக்கு ஆகாமியமுமாய்வரு மென்க. சிறிது சஞ்சிதமாய்க்கட்டுப்பட்டுச் சிறிதுகாலமிரு ந்து மேல்வருஞ்சநநங்களிற் புசித்தற்குப் பாகமாயிருக்கு மாம். எடுத்ததேகத்திற் செய்யுமிதம் அகிதந்தானேயாகா மியமாயேறிச் சநநங்கடோறுஞ் சரீரமெடுத்தற்குக் காரண மாகிவருவதாமென்க.

உ - ம். "பேறிழ வின்பமொடு பிணிமூப்புச் சாக்காடென்னு, மாறுமுன் கருவிற்பட்ட தவ்விதி யநுபவத்தா, லேறிடு முன்பு செய்த கன்மமிங்கி வற்றிற்கேது, தேறுநீ யினிச்செய்கன்ம மேலு டற் சேருமன்றே" என்றும், "மேலைக்குவித்துமாகி விளைந்தவை யுணவுமாகி, ஞாலத்து வருமாபோல நாஞ்செயும் வினைகளெல்லா, மேலைத்தான் பலமாய்ச்செய்யு மிதமகிதங்கட் கெல்லா, மூலத்ததாகி யென்றும் வந்திடு முறைமையோடே" என்றும் சி-ஞா-சி.

## இதம் அகிதமாவன.

இதம் அகிதமெனுமிரண்டுஞ் சநநத்திற்குக்காரணமாகிய கன்மமாம். புண்ணியமே இதமெனவும், துன்பத்திற்குக் காரணமாகியபாவமே அகிதமெனவும்படும். இதமாவது

மனம் வாக்குக் காயமென்பவைகளினாலே ஆன்மாக்களுக்கு நன்மைபண்ணுதலாம். அகிதமாவது - நன்மைசெய்யாமற் றீமைசெய்வதாம். மனத்தினாற்செய்தல் - பிரியம், கோபம் முதலியனவாம். வாக்கினாற்செய்தல் - துதி, நிந்தைமுதலியனவாம். காயத்தினாற்செய்தல்-அடித்தல், அணைத்தல் முதலியனவாம். ஆன்மாவுக்கு நன்மைப்பகுதியுண்டாக்கத்தக்க வுறுதியான காரியங்களையறிந்துசெய்தல் இதமெனவும், ஆன்மாவுக்கு நன்மைப்பகுதியல்லாத காரியங்களையறிந்து ஒன்றையுஞ் செய்யாதிருத்தல் அகிதமெனவும் படும். உயிர்கள் வீடுபேறெய்தற்பொருட்டு வைத்தகருணையினால் இதாகிதங்களால் புண்ணியபாவங்களைத் தினையு முதலவனென்றுக்கொண்டு இதத்துக்குத்தக்க சுகத்தையும் அகிதத்துக்குத்தக்க துக்கத்தையுங் கொடாநிற்பனென்க. அகிதஞ்செய்தாரைக் கண்டித்தல் நல்வழிப்படுத்தற்பொருட்டேயாகலின் அதுவுங் கருணையேயாமென்க.

உ-ம். "இதமகிதங் களென்ப திகன் மனவாக்கு காயத்தி முயிர்க் குறுதிசெய்ய லகிதமற்றது செய்யாமை, யிதமகிதங்களெல்லா மிறைவனே யேற்றுக்கொண்டிங், கிதமகிதத்தா லின்பதுன்பங்களீவனன்றே" என்ற சி-ஞா-சி.

### சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியமென்னும்வினைகளாவன.

சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியமாகியவினைகள் மூன்றெனப்படும். இவற்றில் சஞ்சிதமாவது-சாநங்கமோடநாதி யேதொடர்ந்துதொடர்ந்து ஆறத்துவாக்களாகிய மந்திர, பத, வன்ன, புவன, தத்துவ, கலைகளிற்கட்டுப்பட்டு அளவிறந்து கிடக்கும் நல்வினை தீவினைகளாம். கைக்கூடாத அவாக்களனைத்து மடைக்கப்படுமவையென்க. பிராரத்தமாவது-அந்த சஞ்சிதத்திலே பரிபக்குவத்தைக் குறித்தெழுந்து தனு, கரண, புவன, போகங்களையுண்டாக்கிப் புசிப்பிப்பதாம். பிராரத்தம்-இச்சை, அநிச்சை, பரேச்சையெனமூவகையாம். இச்சையாவது - இராசாவின்மனைவியைத் தீண்டலால் வருஞ்சுகமுந்துக்கமுமாம். அநிச்சையாவது - இடிமுதலியவற்றாலிருபயனையுமுறுவதாம். பரேச்சையாவது-ஒருவனொருகாரியஞ் செய்வதனா லவனையாக்கினை யபராதமென்றிராசகாஞ்சொல்ல

அதற்கொருவன் வினைமுதலியவற்றா லுறுமிருபயனுமென்ப
தாம். இந்தப் பிராரத்தமே சுபத்தம், மந்தம், தீவிரமென
மூவகைத்தாம். சுபத்தம்—சிவதன்மத்தொரு பட்டவரையும்.
மந்தம் — சிவஞானிகளையும் வாதியாதென்க. தீவிரம்—சிவ
ஞானிகளைமிகவும் வாதியாதாம்

ஆகாமியமாவது—பிராரத்துக் கிசையவெடுத்த தேகத்
தில் அதன் பலத்தைப் புசிப்பிக்கையில் விருப்பு, வெறுப்பு,
நிந்தைகளாலுண்டாய கன்மபலத்தால் வரும புண்ணியபாவ
ங்களாம். இந்த ஆகாமியம், மதி, விதியென் றிருவிதமாம்.
மதியாவது — தானிச்சித்தவண்ணம் வேண்டுமெனலென்ற
தெனவும், விதியாவது— அவ்வண்ணங் கைகூடலென்றதென
வும் படும். மதி, பந்தகன்மம், விர்திகன்மமென் றிருவகைத்
தாம். பந்தகன்மம்—பொருளல்லாவற்றைப் பொருளென்னும்
ஆவலாம். இது பிறவிக்கேதுவாம். விர்திகன்மம்—பொரு
ளல்லவற்றைப் பொருளலவெனச் சோதனை, நியாயம், பொரு
த்தமென்னு மூவிதத்தால் ஐயந்திரிபின்றிக் கண்டு உள்ள
தையுள்ளதாகக் கோடலாம். இது முத்திக்கேதுவாம். பந்த
கன்மமாய் நின்றது அஞ்ஞானமும், விர்த்திகன்மமாக நின்
றது ஞானமுமாம். இங்கே ஞானமென்றது—பரஞானமாம்.
விதி, ஊழ், பிராரத்தமென்பன ஒருபொருட் கிளவி.

சஞ்சிதம், ஆகாமியமென மீண்டும் முன்மை பின்னு
மாகிய வினைத்தொடர்பாம். வினைப்பயனென்பது பிராரத்த
வினையின் பயனாம். ஆசையென்றது—கெடாதுவரும் பிறப்
புக்கு விதையாமென்க. பிறப்பாவது துன்பத்தைத் தரத்
தக்கதென்றறிந்தவன் அதனைப் பெருமைக்குரிய காரணத்
தை விரும்பவேண்டுமென்பதாம். அவாவென்றது எனக்
கிது வேண்டுமென்னும் விருப்பமாம். ஆசைபற்றவா—பிற
வியற்றவரென்க. ஆசை, அவா, இச்சை, விருப்பமென்பன
ஒருபொருட்கிளவி. "ஆசையுமன்று மறுமின்னா றுற்றபின்,
ஈசனிருந்த விடமெளிதாமே" என்று திருமந்திரம்.

சஞ்சிதவினைகளனைத்தையும் ஞானக்கினியான தெரித்து
வெண்ணீராக்கி விடுமாம். ஆகாமியந் தினைத்துணையேனுங்
கிட்டாமல் விட்டோடிப் போகுமாம். பிராரத்தவினையை

வனுபவித்தே தீரவேண்டுமாம். பிராரத்த மனுபவிக்கும் போது தன்னையறியாமற்செய்த கன்மமானது, இனிவரும் பிறவியிற்றொடர்ந்து வாராமலழிந்து போவதற்கு வகை யாதென்னில்? அறிவிலாகிய சிறியவர் மெய்ஞ்ஞானியரைத் தமது புன்னடைவழிச்சென்றிலரெனவைது அவரறியாது செய்தபாவத்தைப் பறித்தனுபவிப்பாராம். அறியத்தகுந்திறத்தையுடையோர் இவர்மெய்ஞ்ஞானியரென்றுணர்ந்து மெய்யன்புகொண்டு பூசித்தவர்செய் நல்லறங்களைக் கைக்கொண்டனுபவிப்பாராம்.

உ-ம். "பஞ்சினையூழித்தீப் போற் பல சன்மவிவிதவித்தாஞ், சஞ்சிதமெல்லா ஞானத்தழல்சுட்டு வெண்ணீறாக்கும், கிஞ்சிலாகாமியஞ்சான்கிட்டாமல் விட்டுப்போகும், விஞ்சியபிராரத்தத்தின் வினையநுபவித்தறத்தீரும்" என்றும், பொருமையாற் பிராரத்தத்தைப் புசிக்கு நாட்செய்த கன்மம், மறுமையிற் றொடர்ந்திடாமல் மாண்டுபோம் அதேயதென்னில், சிறியவரிகழ்ந்து ஞானிசெய்த பாவத்தைக் கொள்வ, ரறிபவரறிந்து பூசித்தரமெலாம் பரித்துண்பாரே" என்றும். கைவல்லியநவநீதம்

திருட்டம் அதிருட்டம் திருட்டாதிருட்டமாவன.

திருட்டமாவது—இம்மையிற்செய்த கன்மமிம்மையிற்பலிக்குமதென்க. அதிருட்டமாவது - இம்மையிற்செய்த கன்மமறுமையிற்சுவர்க்க நரகங்களையநுபவிக்கையாம். திருட்டாதிருட்டமாவது - இம்மையிலே அசுவமேதயாகஞ் செய்தவனிம்மையிற்றானே சுகத்தையடைந்து மறுமையினரகத்தின்கண்விழுவதாம். "குறித்தொருவர் செய்த தீவினை கொலைகள்சூழ்ந்தகளவெலாஞ், செறித்தொருவரைச்செய்த தீவினையிம்மையே வருந்திண்ணமே" என்றிருப்பதையறிக. செய்தவினையநசிக்க சூக்குமரூபமாக வுண்டாகையால் அதிருட்டமென்றும், அசுத்தமாயாபோகத்துக் கேதுவாகையால் மலமென்றும் பெயராய்நிற்குமென்றும், ஆதியாத்மீகம், ஆதிபௌதிகம், ஆதிதைவீகமென்னுந் தாபதிரயத்துக் கேதுவாகவுநிற்குமென்றுஞ்சொல்லப்படும்.

தாபத்திரியங்களாவன.

ஆதியாத்மீகம், ஆதிபௌதிகம், ஆதிதைவீக மென தாபத்திரியங்கள் மூன்றென்க. ஆதியாத்மீகவாவது - சரீர

மென்றும், மாநசமெனறுமிருவகைத்தாம். சரீரம்- சரீரத்தி லுண்டானது. சரீரம்-குல்மம், வாதம், அதிசாரம், ஜ்வரம், சூலைபித்தி யாதிகளாம். மநுஷ்யராலே மிருகங்களினலே, பிசாசங்களினலே, பசுக்களினலே, பட்சிகளினலே, சோர ராலே, ராட்சசராலேவருந்துக்கமாம். மாநசம்-சோகம்,ஆசை, அவமானம், ஈரிஷை, பொறாமை, மாச்சர்யம், இவைகளா லுண்டாகுந்துக்கமாம். ஆதிபௌதிகமாவது - குளிர் வுஷ் ணம், காற்று, மழை, மின், இடி இத்தியாதிகளால்வருந்துக்க மாம். ஆதிதைவிகமாவது-கர்ப்பம், ஜந்மம், நரை, திரை, அஞ் ஞானம், மரணம், நரகம், இவைகளால்வருந்துக்கமென்க.

ஈஷணைகளாவன.

அர்த்தேஷணை, புத்திரேஷணை, லோகேஷணைஎனமூன் றென்க. அர்த்தேஷணையாவது-ஆணவமென்கிற மலத்தால் அர்த்தக்ஷேத்ராதிகளிற் செலலுமோகமாம். புத்திரேஷணை யாவது - காமிகமென்கிற மலத்தால் புத்திரசம்சாராதிகளிற் செல்லுமோகமாம். லோகேஷணையாவது - மாயையென்கிற மலத்தால் தேவகுருபக்திகளைப்பண்ணுமல் அஞ்ஞானத்தால் கெட்டவிஷயங்களில் விழுந்து சம்சாரத்தையடைகையாம். ஈஷணையென்னும்வடமொழி ஈடணை ஏடணையென மருவி யற்றென்க. மோகம்—ஆசை, காமம்.

ராகத்துவேஷாதிகளாவன.

ராகம்-ஆசை, துவேஷம் - கோபம், லோபம் - லுபத்தம், மோகம்-தரியாமை, மதம் - களிப்பு, மாச்சர்யம் - பொறாமை, அகங்காரம் - என்னொடொப்பாரரென்கை, டம்பம் - கர்வம். ஆகஎட்டும் ராகத்துவேஷாதிகளாம்.

சப்ததாதுக்களும் சடூர்மிகளுமாவன.

இரதம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல், எனுமேழுஞ் சப்ததாதுக்களென்க. சடூர்மிகள்-பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, கிழத்தனம், மரணம், இவைகள் சடூர்மிகளாமென்க.

பஞ்சகோசங்களாவன.

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயமெனு மைந்துங் கோசங்களாம். அன்னமயம் -

தாதுக்களாலெடுத்தது. தூலசரீரம் நசியாமலிருப்பதற்காதாரமாம். பிராணமயம் - அன்னசாரத்தினால் பிராணனும்புறமுங் கூடியது. சூட்சுமசரீரம் நிலைப்பதற்காதாரமாம். மனோமயம்- அன்னசாரத்தினு லடங்கிய பலத்தினால்வந்து தோன்றியது. சூட்சுமசரீரம் நிலைப்பதற்காதாரமாம். விஞ்ஞானமயம்-மனத்தின்கண்டோன்றுவது. ஆனந்தமயம் - வித்தையல்லது கல்வியிற்றோன்றும் ஞானமாம். காரணசரீரம் நிலைப்பதற் காதாரமாம். காரணசரீரமாவது—மாயை, அஞ்ஞானம், அவித்தையென்பனவாம். கோசம - ஆண்குறி, மதிலுறுப்பு.

## தேகமாவது.

தேகமாவது — மண்ணும் தண்ணீருங்கூடி சுவரானது போல தோல் மாங்கிஷம் மண்ணும், சுக்கிலசுரோணித முதலியன தண்ணீராகவும் கருவி காரணங்களுடன் கூடி வுண்டானது தேகமெனப்படும். தேகத்துக்காதாரம பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமெனும் பஞ்சபூதங்களாம். பூதங்கள், பூதகணங்கள், சதுரக்கங்கள், உறுப்புகள், ஆதாரம், கரணங்கள், தொழில்களாகிய விவரமும் தேகசுபாவமெனக. தேகம் அவரவர்கையால எட்டுஜாணை ஆதாரமாகத் தொண்ணூற்றாறு விரற்கிடை பிரமாணமுடைய, நாலுஜாண் பிரமாணம் பருமனுடைய, மெய், வாய், கண், மூக்கு, செவி, யெனு மைந்துறுப்புகளும், செவி-௨, கண்-௨, நாசி-௨, வாய்-௧, ஜலமிரங்குந் தானமாகிய குய்யம்-௧, மலம்பிரியுந்தானமாகிய குதம் - ௧, ஆக ஒன்பதுவாயில்களையுமுடையதாய், தோல், மயிர், நரம்பு, எலும்பு, தசை நிணம், குடல், கொடி, குண்டிக்காய், இரத்தம், சீழ், அமரி, பிராணவாயு, முதலியனவும், பஞ்சகோசமுமடங்கியதாயு மிருக்குமென்க. தூல, சூக்கும, காரணதேகங்களாகவும், ஒவ்வொன்றாக தூல, சூக்கும, காரணமாகவும், மகாகாரண தேகமாகவு மிருக்குமென்க. மகாகாரணத்துக்குத் தேகமில்லையாம்.

## தேகதத்துவங்களாவன.

அகஸ்தியமாமுனிவர், ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள், தாயுமானஸ்வாமிகள், இன்னமநேகம் பெரியோர்களுமியற்றிய நூல்களிலும், வேதாந்த சித்தாந்தக் கட்டளைகளிலும் சரீர

தத்துவாதிகளைப் பெருக்கித் தொண்ணூற்றாறு கருவிகளாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

**சித்தாந்தத்தத்துவத் தொண்ணூற்றாறவன.**

சுத்ததத்துவம்-ரு, வித்தியாதத்துவம்-எ, ஞானேந்திரியம்-ரு, கன்மேந்திரியம்-ரு, தன்மாத்திரையாகிய ஞானேந்திரிய விஷயம்-ரு, கன்மேந்திரியவிஷயம்-ரு, பூதங்கள்-ரு, பூதகாரியங்கள் மூன்றுக்கைந்தாக-உரு, வாயுக்கள்-க0, நாடிகள்-க0, வாக்குகள் ச, அகங்காரங்கள்-ங, அந்தக்கரணங்கள்-ச, குணங்கள் ங, ஆக தொண்ணூற்றாறு தத்துவங்களெனப்படும். கருவிகளெனவும்படும்.

**வேதாந்தத்தத்துவங்கள் தொண்ணூற்றாறவன.**

பூதங்கள்-ரு, பொறியாகிய ஞானேந்திரியங்கள்-ரு, புலன்களாகிய தன்மாத்திரைகள் - ரு, கன்மேந்திரியங்கள் - ரு, கன்மேந்திரியவிஷயங்கள்-ரு, அந்தக்கரணங்கள்-ச, அறிவு-க, நாடி-க0, வாயு க0, சயங்கள்-ரு, கோசங்கள்-ரு, ஆதாரம்-சு, மண்டலம்-ங, மலம்-ங, தோஷம் ங, ஏடணை-ங, குணங்கள்-ங, இராகாதிகள் அ, வினை-உ, அவஸ்தை-ரு, ஆகமொத்தம் தொண்ணூற்றாறென்க.

**ஆன்மதத்துவ நிரூபத்தி யானவன.**

வேதாந்த சித்தாந்த தத்துவங்கள் தொண்ணூற்றாறில் ஞானேந்திரியம் ரு, கன்மேந்திரியம் ரு, தன்மாத்திரை-ரு, பூதங்கள் - ரு, அந்தக்கரணங்கள் - ச, ஆக தத்துவங்களிருபத்து நான்கும் ஆன்மதத்துவங்களாக வேதாந்த சித்தாந்த மார்க்கங்களிலெடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

**சரீர ஆதார அதிதேவதைகளாவன.**

சரீரத்தில் ஆதாரவுருக்கதாரமான வலதுசாம், இடதுசாம், நாபி, கண், மூக்கு, செவி, உச்சி, யென்னுமேழிடங்களில் வலதுசாரத்துக் கதிதேவதை சூரியனும், இடதுசாரத்துக் கதிதேவதை சந்திரனும், உடபுக்கதிதேவதை மகேஸ்வானும், நாபிக்கதிதேவதை விஷ்ணுவும், கணகளுக்கதிதேவதை ருத்திரனும், முகத்திற்கதிதேவதை பிரமனும், காதுகளுக்கதிதேவதை சிவனும், உச்சிக்கதிதேவதை பரமசிவனுமாமென்க.

## தத்துவஸ்வரூபங்களாவன.

மண், தண்ணீர், நெருப்பு, காற்றென்னு நாலுபூதங்களும் ரூபங்களாம். ஆகாசதத்துவங்களெல்லாம் அரூவமாம். அரூவாரூவம் உபயரூபங்களாம். அரூவமாகிய சிவம், சத்தி, நாதம், விந்துவும், உருவமாகிய ஈஸ்வரன் முதலாயினவெல்லாமுந் தத்துவமெனப் பெயர்பெறுமாம். அரூவாரூவம் சதாசிவமூர்த்தியென்க. ஆன்மவர்க்கங்களும் பாசங்களுமாக வினைவெயெல்லா மழியாமலுண்மையான வத்துவாயிருக்கையால் தத்துசத்தஞ் சொல்லப்பெறுமாம். சுத்ததத்துவங்களுக்கும் ஈசானுதி மந்திரங்களுக்குந் தத்துவசத்தம் பொருந்துமென்க. தத்துவவபிமானி தேவதைகளுக்குந் தத்துவ நாமங்களேயாம். "தத்துவரூபமாகுந் தருமருவுருவமெல்லாந், தத்துவசத்தஞ் சாருஞ் சகலமுந் தத்துவங்காண்" என்றிருப்பதாலறிக மரணமடைகிற மனிதனை யபேக்ஷித்து தேவர்களென்றாற்போல தாத்விகமாகிய சரீராதிகளைப்போல வுடனே நாசவத்தின்றி பிரளயகாலபரியந்தமு நிற்பதாகையால் தாத்விகத்தை யபேக்ஷித்து தத்துவமெனப் பெயராயினதென்க. பிரபஞ்சத்திலுள்ள ரூபாரூபங்களெல்லாந் தத்துவங்களினுடைய ஸ்வரூபங்களேயாமென்க வென்பதாம்.

## சுக்கிலசுரோணிதங்களாவன.

அன்னத்தில்ரசமும், ரசத்தில்வுதிரமும், வுதிரத்தில்மாமசமும், மாம்சத்தில்மேதையும், மேதையில் அஸ்தியாகிய எலும்பும், அந்தஅத்தியில் மச்சையும், மச்சையில்சுக்கிலமும், சுக்கிலத்தில் சுரோணிதமுமாகத் தோன்றுமென்க. அஸ்தி, நரம்பு, மச்சைபென்பன பிதாவின்கூறும். உதிர முதலியன மாதாவின்கூறும். சுக்கிலமாவது - வெண்மை. சுரோணிதமாவது - சிகப்பு, இரக்தமாம் "கூறுனவுதிரமெல்லாஞ் சத்தியின்கூறும, கூடிநின்றவெலும்பெல்லாம் ருத்திரன்கூறும்" என்றதனுலறிக.

அஸ்தியாவது-எலும்பென்னும்அஸ்தி,வெண்ணிறமுள்ளதாயும், உறுதியானசவ்வினுல் மூடப்பட்டதாயும், அதிகபலத்தைத்தரத்தக்கதாயும், ஒருவிதபச்சை மழுப்பினதாயுமிருக்கு

மென்க. கங்காளம் முழுவெலும்பெனப்படும். அஸ்தி, எலு
ம்பு, ஓர்மரம், யாவை என்பன ஒருபொருட்கிளவி. கழுத்து,
கை, கால்முதலியயிடங்களில் முழுவெலும்பு ஐந்நூற்றிரு
பதெனப்படும்.

தோலாவது-சரீரம்பெறக்கூடிய வெல்லாமரியாதைகளுக்
கும் காரணமானதாம். வெளித்தோல், உள்தோல் என்றிரு
வகைத்தாம். மத்தியிலு மநேகவடுக்குகளு முள்ளனவாம்.
வெளித்தோலானது உஷ்ணம், பனி, காற்று முதலியவைகள்
படுதலால் வரட்சியாய்ப் பெலனுயிருக்கின்றதாம். உள்தோ
லானது தசையைப்பொருந்தி மிக மெல்லியதாயும், வெண்
மையாயுமிருக்கின்றதாம். தைலாதிகள் தோலின்மேல்தேய்
க்க உள்ளிலிரங்குகின்றது. நாடி, நாளம், சிறியரக்தக்குழ
ல்களாகிய விவைகளாந்த உள்தோலைப்பற்றி நிற்றலால் தேக
த்தி லெந்தயிடத்திற்குத்தினு மிரக்தம் வெளிகாண்கிற
தென்க. மேல்தோலைக் கொண்டே மயிர், நிகங்கள்முளைக்
கின்றன. சாரங்களைத் தோலானது கிரகிப்பதால் பலவர்ன
ங்களோடு மேனிவிளக்கி வயதுக்குத்தக்க அழகு மாறுகின்
றதாம். ரோமத்துவாரங்கள் தோலில் மூணரைகோடியெ
ன்றதெனப்படும். ரோமமாவது - மயிர். நாளம் - இரக்தப்
புறை, மாம்சவடுக்குகளாம்.

## தேகஉள்ளுறுப்புகளாவன.

சயங்களாவன :—அமர்வாயசம், பகிர்வாயசம், சலவாய
சம், மலவாயசம், சுக்கிலவாயசமெனச்சயங்களைந்தாம். அமர்
வாயசமாவது - உண்ட அன்னசாரம் அமருமிடம். பகிர்வா
யசமாவது - அன்னமுநீரு மமருமிடம். சலவாயசம் - சலஞ்
சேருமிடம். மலவாயசம் - மலக்குழி. சுக்கிலவாயசம் - சுக்
கிலம்பிரியுமிடம்.

இரக்தாசயமென்றது — இரக்தவுற்பத்தித் தானமாம்.
இரக்தவுறுப்பானது கோழிமுட்டையைப்போன்ற வுருண்ட
வடிவாய் சற்றுநீண்டு இரண்டுறுப்புகளாயிரக்த சவ்வாற்
சூழப்பட்ட கபாடங்களமைந்த யிரண்டறைகளடங்கியவை
யென்க. இரக்தவோட்டமாவது - இரக்தம் வலதுசுவாசப்

பையுக்கும், இடதுசுவாசப்பையுக்கும் நாடிகள் துவாரா சென்று சிறியநரம்புகளோடு மோடியோடிச்சம்பந்தப்பட்டுச் சரீரமெங்கும் பின்னலாயிருக்கு மெல்லியசிறுநரம்புகுழைக ளிற்பரவி வுடலைச்சோபிக்குமென்க. சரீரஞ்சுகஸ்திதியிலிரு க்குமளவும் இரத்தமானது பரவிநிற்குமாம். பிரதிகூலமான அப்பியாசத்தாலும், அசுத்தகாற்று முதலியவைகளாலும் இரத்தவோட்டம் பட்டுநிற்கையில் இரத்தநிறமுதலியது மாறி சரீரத்துக் கானியாகுமென்க.

இரப்பையாவது— ரப்பரைப்போன்ற மெல்லிய மூன்று சவ்வுகளாலமைந்து அடிவயத்துக்குமேலே நெஞ்சுக்குழிக் குக் கீழே சற்றிடப்பாகத்தைச் சார்ந்தாற்போல சலபையை குண்டிக்காய் முதலியவைகட்குள்ளேயா யோடியிருப்ப தாம்.

இரைக்குழலாவது — ஒரடிநீளமுள்ள கடுத்த சவ்வின் குழையாம். இதன்வழியாகவே வுண்ணுமுணவுகளுட் செல்லுகின்றதென்க.

உமிநீர்கோளமாவது — நாவுக்கடியிலும், இருதாடைக ளுக்குள்ளும் காதுக்கடுத்த உட்பக்கத்திலும், பக்கத்துக் கிரண்டாயிருக்குமாம். அதிலுமிநீர் சுரப்புண்டாகின்றதாம்.

மிடராவது— அடிநாவிலிருந்துற்பத்தியாய் இரைக்குழல் மட்டுமோடி நிற்குமோர் குழலாம். சவ்வினிலைகளாம்.

இரசாயனியென்றது—சிறுகுடலுள் பக்கத்திலிருந்தெழு மிகச்சிறியகுழல்களாம். துவாரமுள்ள நரம்புகளாம். மணிக் குடலுக்குட்சென்று இரசதாரையிற் பொருந்துமாம்.

குடலென்றது—மலாந்தரம், மலவாயசமென்னு மிரண் டையு மொட்டியிருப்பதாம். சிறுகுடல் பெருகுடலென் றிரு வகையாம். குடல், குழலெனவும் படும். அவளிகையென் றது— குடலுக்குமுன்னே தொங்கிநிற்கு நாலுமடிப்புள்ள வோர் சவ்வாம்.

இரசதாரையாவது—இடதுகாரை யெலும்புக்குப்பின்னா விருக்கும்நாளத்திற்குள் இரசத்தைச் செலுத்துமாம்.

ஈரலென்றது—கருப்பு சிகப்பு கலந்தநிறமுள்ள தடித்த வோர்ருருவமாம். இது வலபக்கம் விலாவிற்குள் வலது சுவாசப்பைக்குக் கீழிருப்பதாம். இதில் பித்தநீருண்டாகிறதென்க. பிளிகையென்றும் பெயராம்.

பிளிகையென்றது—வட்டவடிவாய்ச் சற்று கனமுடையதாய் சப்பையான கருநிறமான வுறுப்பாம். பித்தநீர் குழையாகிய நுணைக்குக்கியின்வழியாகப் பித்தநீர்சென்றால் சரீரத்துக் கபாயமில்லையென்றறிதென்க.

குண்டிக்காயென்றது—இரண்டு கனமான வுறுப்புகளாம். இரத்தப்பையை நிறைகோல் குண்டிகளைப்போல விழுத்திரத்தத்தை சுத்தியாக்கின்றனவாம். குழல்கள்கிளர்ப்பி சலப்பையை நாடிப்போய் அக்குழல்கள் வழியாய் மூத்திரமானது சொட்டுச்சொட்டென்றிறங்கி சலப்பையை நிரப்புகின்றதென்க.

ஜீரணஉறுப்புகளாவன.

உண்ணும்பதார்த்த மெல்லப்பட்டு நீருடன்கலந்து விழுங்க அது தொண்டைவழியாய் இரைப்பையிற்சென்று சிதைந்து திரவமாம். அப்போது கிழுண்டாகு நீருடன்கலந்து பால்நிறமாகவும் பலாகவுமாகி சிறுகுடலுக்குச் செல்லுமாம். அச்சிறுகுடல்களின் ரசத்தை நக்கிநக்கி சாற்றுகளை பெருகுடலுக்குச் செலுத்துமாம். அப்போது பிராணவாயுவானது மோதி இரக்தத்தையும், மலத்தையும்வேறுவேறாய்ப் பிரிக்குமாம். இரக்த மேலுக்கேறி குழல்களிற்சென்று வுடம்பிற் பரவுமென்க.

**வாத, பித்த, சிலேத்மமென்னுந் தாதுத்திரியங்களாவன.**

சத்துரூபமாகமாறின அன்னரசமானது ஈரலிற்சென்று மீண்டும் பாகம்பண்ணும்போது மேலேநுரைத்தெழுங் கல்மிஷத்திற்குப் பித்தமென்றும், அடியிற்படிந்திருக்கும் வண்டலுக்கு வாதமென்றும், மத்தியபாகமாய்நிற்பதற்குக் கபமென்றும், உத்தமபாகமாய் நடுவிற்றெளிந்திருக்குஞ் செந்நீருக்கு இரக்தமென்றும் பெயராம். இந்நான்கில் ரக்தமே பிரதானமென்க. இது வாயுவின் ஸ்வாபமுடையதாம்; சூடுங்

கொழுமையுமுள்ளதாயும்; சர்வத்தையும் போஷிக்கத்தக்கதாயும், சிவநிலைக்குக் காரணமானதாயுமிருக்குமென்க. பித்தம் தேயுவின் ஸ்வரூபம். குணம் - சூடும் வரட்சியுமானதாம். சிலேத்மம் அப்புவின் ஸ்வரூபமாம். குணம் - குளிர்ச்சியும் கொழுமையுமுடையதாயும், வியாதிக்கிடமானதாயுமிருக்குமென்க. வாதம் - பிருதிவியின் ஸ்வரூபமாம். குணம் - வண்டல். வியாதிகளையுண்டுபண்ணுவதென்க. சுக்கிலத்துடன் சுரோணிதஞ்சேரும்போது வாத பித்த சிலேத்துமங்களிலெது அதிகரிக்கிறதோ அதுவே வாததேகம், பித்ததேகம், சிலேத்துமதேகமெனப்படுவதாம். தேகத்தில் அபானமுதல் உந்திவரையில் வாதநிலையாம். உந்திக்குமேல் மார்புவரையில் பித்தநிலையாம். மார்புமுதலுச்சிவரையில் சிலேத்துமநிலையாம். மனிதர்க்கு 40 வயதுவரையில் வாதகாலமாம். 40 முதலெண்பதுவரையில் பித்தகாலமாம். 80 - க்குமேல் நூறுவரையில் சிலேத்துமகாலமாம்.

**நாடிகளாவன.**

மானிடதேகத்தில் உந்திச்சுழியிலிருந்தெழுந்து கீழ்மேலாய், பேய்பீர்க்கங்காய்க்கூடுபோல, ஆக்கையெல்லாம் பற்றி நிற்குநாடி எழுபத்தீராயிரமெனப்படும். எல்லாவற்றையுஞ்சேர்த்து நாபிப்பிரதேசத்தில் நாலுவர்ணமாகப்பந்தித்திருப்பதாம். இதற்குநாபிச்சக்கர மென்றுபெயராம், இடைகலை பிங்கலை, சுழுமுனை, அலம்புடை, காந்தாரி, அத்தி, சிஹ்குவை, சங்கினி, இயல், புருடன், குகு, வென்னும்பத்தும்பிரதான நாடிகளாம. இடைகலைநாடியானது - வலதுகாற்பெருவிரலிலிருந்து இடதுநாசிவரையிலும், பிங்கலைநாடியானது - இடதுகாற்பெருவிரலிலிருந்து வலதுநாசிவரையிலும் கத்தரிக்கோல் மாறலாகவோடி நிற்குமாம். சுழுமுனைநாடி, மூலாதாரத்திலிருந்து ஆக்ஞைவரையிலோடி யுச்சியிலச் சுருவாணியாக நிற்குமாம். காந்தாரிநாடி, நாபியிற்றொடங்கி யேழுநாடியாய்க் கண்டத்துறுமாம். அத்தி சிஹ்குவை யெனுமிரண்டும் பத்துநாடிகளையுற்றுக் கண்ணிநிற்குமாம். குகுவென்னுநாடி நாபியையுறைந்து குய்யத்தைப்பற்றிநிற்குமாம். சங்கினிநாடி, உபத்தத்தைப்பற்றி நிற்குமாம். அலம்புடை, இடதுகாதள

வாயுஞ், புருடன் வலதுகண்ணனளவாயுநிற்குமாம். ரூபங்க ளைப்பண்ணுவது காந்தாரிநாடியாம். அத்தி - சிஂகுவைநாடி யாம். சப்தந்தைக்கிரகிப்பது புருஷா வலம்பியென்னும் புருடநாடியாம். தேவத்தியானராகப் பிரமாதங்களைப்பண் ணுவது சுக்கிலநாடியாம். அன்னத்தை ஆக்ருஷிக்குவிப் பது விஸ்வநாடியாம். அமிர்தகிரணர்பண்ணுவிப்பது சங் கினிநாடியாம். லிங்கதியால் தாதுமோட்சதத்தைப் பண்ணு வது பயஸ்விநாடியாம். லிங்கத்தைப்பற்றிச் சிறுநீரைவிடு வது வருணநாடியாம். மலவிமோசனஞ்செய்வது ஆலுஷதி நாடியாம். விசங்கினிநாடி வலஆகாரமாய் நாபிபபிரதேச த்திலிருக்கின்றதென்க. சுக்ஷூமநாநாடிக்குப் பிரமநாடியென் றும்பெயராம். இந்தச்சுழும்நாநாடிக்கு வாமபாகத்திலிருக் கிற இடநாடிவழியாய் வாயுபிரவேசித்து சந்திரமண்டலத் திற்படிந்து இடதுமூக்கால் வெளிப்படுமாம். சுழுமநாநாடி க்கு தக்ஷணபாரிசத்திலிருக்கிற பிங்களாநாடிவழியாய் வாயு பிரவேசித்து சூரியமண்டலத்திற் படிந்து வலதுமூக்கால் வெளிப்பட்டுபோகுமாம். நாளொன்றுக்கியங்கும்பிராணவாயு வாகிய சுவாசம்இருபத்தோராயிரத்தறுநூறில் பனிரெண்டு விரலங்குலப் பிராணம்புறப்பட்டு நாலுவிரலங்குலங்கழிந்து போய் எட்டங்குலமுடம் பூடுருவி சப்ததாதுக்களை வளர்க்கு மென்க. இடாநாடி பிங்களாநாடியென்றது-இடைகலை, பிங் கலையென்பதாம்.

நாடியென்றது-நரம்பு, ஆண்மயிர், உட்டுளை, மூக்குயென் பதாம். "சுஷும்நா" யென்னும் வடமொழி சுழும்னையென் றும், சுழிமுனையென்றும் வழங்கப்படுவதாம். வீணைக்குத் தந்தியைப்போல மூலாதாரந்தொடங்கி நிற்குநாடிக்கு வீணை த்தண்டியென்று பெயராமென்க.

## நாடிநடையும் பரீட்சிக்கும்விதமுமாவன.

இருதயம் விரியவுஞ்சுருங்கவுமாக யிருப்பதால் அதனு டன்சேர்ந்த நாடிநரம்புகளுக்கும் விரிந்துசுருங்குந் தன்மை யுண்டாயிருக்கின்றதாம். இந்தச் செய்கையையே நாடிநடை யெனப்படுமாம். நாடிநடை இருதயத்துக்கொத்திருக்குமெ

ன்க. நாடிநடை கைகளிலும், கன்னச்சுழிகளிலும், கணுக்காலினுட்புறத்திலும் பரிட்சிக்கப்படுமென்க. கையில் மணிக்கட்டுவரையில் நாடிபெருநரம்பின் ரக்தக்குழாய் சிறுத்திருப்பதால் வாதபித்தசிலேத்தும நாடிகளை யெளிதிலறியப்படுமாம். மற்றயிடங்களில் ரக்தக்குழாங்கள் பருத்திருப்பதாலெளிதிலறியக்கூடாதாம். கைநாடி பரிட்சையே சகலத்துக்கு முத்தமமானதெனப்படும். புருஷருக்கு வலதுகையிலும் பெண்களுக்கு இடதுகையிலும் நாடிபரிட்சிப்பது கிரமமாம். நாடிபரிட்சையில் முதல் விரற்கீழ் வாதநாடியாகவும், நடுவிரற்கீழ் பித்தநாடியாகவும், கடைவிரற்கீழ் சிலேத்மநாடியாகவும், அறியவேண்டுமாம். புருடருக்கு வாதநாடி வலதுகையில் குயில்போலும், அன்னம்போலும், கோழிபோலும், மயில்போலும், பித்தநாடி ஆமைபோலும், அட்டைபோலும், சிலேத்மநாடிபாம்புபோலும் நடக்குமாம். பெண்களுக்கு வாதநாடி இடதுகையில் சர்ப்பம்போலும், பித்தநாடி தவளைபோலும், சிலேத்மநாடி அன்னம்போலும் நடக்குமாம். நாடி புழுப்போல் நெளிந்தாலும், சூடுகொண்டாலும், பஞ்சுபோல மெதுவாயிருந்தாலும், அன்னம்போல் நடந்தாலும் பிணிநீங்குமாம். வாத, பித்த, சிலேத்ம மெனு மூன்றுந் தோஷங்களெனப்படும்.

உ - ம். "பீடாரு நாடிகள் பேர்பேசு மிடகலையும், வாடாத பிங்கலையும் வண்சுழுனை - நாடார, சிகுவை புருடனொடு காந்தாரியத்திகுகு, தகுமலம் புடைசங் கினி" என்று சுவாநுபவமாலையிலும் "ஆகிய வாத நாடி அன்னம்போற் குயிலைப் போலும், ஏகிய பித்த நாடி யெழிலாமை அட்டை போலும், போகிய சிலேத்தும நாடி பொல்லாத பாம்பு போலும், பாகுடன் முனிவர் தாமும் பாடினர் நாடி தானே" என்று ஆத்ம ரக்ஷாமிர்த வைத்திய சாரசங்கிரகத்திலுங் காண்க.

**வாயுக்களாவன.**

மானிடதேகத்தில் வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயனென வாயுக்கள் பத்தாம். ஆகாயத்தினம்சம்வியானவாயுவும், வாயுவினம்சம் பிராணவாயுவும், அக்கினியினம்சம் அபானவாயுவும், அப்புவினம்சம் சமானவாயுவும்,

பிருதிவினம்சம் உதானவாயுவுமாகப் பஞ்சவாயுக்களெனப் படும். நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சய னென்னும் வாயுக்களைந்தும் பிராணவாயுவின் தொழில்க ளெனப்படும். பிராணவாயு லலாடத்திற்றோன்றி, சித்திரநாடி யில் விழுந்து, நாபித்தானத்தில் முட்டி, இடைபிங்கலைகளி லோடிக் கபாலத்தைச்சுற்றி நாசியிற் பனிரெண்டங்குலம் புறப்பட்டு நாலங்குலங்கழன்று, எட்டங்குலமுட்புகுமாம். நாளொன்றுக்கு இருபத்தோராயிரத்தறுநூறு சுவாசம்நியங்கு கின்றதென்க. பிராணவாயு சர்வாங்கமும் வியாபிக்குமாம். அபானன்வுண்ட அன்னபானாதிகளைச் சீரணிப்பிக்குமாம், உதானன் அன்னபானாதிகளைக் கடையுமாம், சமானனன் வுண்ட அன்னரசங்களைக் கிரகிக்குமாம் நாகன் விக்கலுங் கக்கலுமுண்டாக்குமாம், கூர்மன் கண்ணினின் றிமைப்பக்கு மாம். கிரிகரன் புருவமத்தியத்தினின்று தும்மலும் அழுகை யுஞ் செய்யுமாம். தேவதத்தன் வோடுவித்தல் உலாவுதல் உயித்தியம்பண்ணுவதாகிய வினைகளைச்செய்யுமாம். தன ஞ்சயன் பிராணன் சரீரத்தைவிட்டுப் பிரிந்தாலுந் தான் பிரி யாமல்நின்று வுடம்பை வீங்கப்பண்ணி மூன்றுநாட்கப்பால் கபாலத்தைப் பிளந்தோடுமாம்.

உ - ம். "தசவாயு வின்பெயரைச சாற்றக்கேள் பிராணன், நிசமா ரபானனேர் வியானன்—சமான,னத்தலைய நாக னுதா னன் கிரிக ரன்கூறேவ, தத்தன் தனஞ்சய னிதாம்" என்று சுவானுபவ மாலையிலறிக.

### தேகத்தில் மும்மண்டலங்களாவன.

அக்கினிமண்டலம், சூரியமண்டலம், சந்திரமண்டல மென மூன்று. அக்கிமண்டலத்துக்குத் தானம் பிருதிவியும் அப்புவுங் கூடினவிடம். சூரியமண்டலத்துக்குத் தானம் இருதயம். சந்திரமண்டலதானம் சிரசிநடுவாம்.

### தேகத்தில் ஆறதாரமாவது.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்கினையென ஆதாரம்ஆறு.

### நாலுவகைத்தோற்றமாவது.

அண்டசம் - முட்டையிற்றோன்றுவது. சுவேதசம் - வியர்வையிற்றோன்றுவது. உற்பீசம் - நிலமுதலியவற்றிற் றோன்றுவது. சராயுசம் - பையிற்றோன்றுவதுஆக தோற்றம்நாலு.

### எழுவகைப்பிறவியாவது.

தேவர், மக்கள், புள், விலங்கு, பக்ஷி, நிலத்திலூர்வன, ஜலத்திலூர்வன, தாவரமெனப் பிறவிகளேழு.

யோனிபேதங்கள்—எண்பத்துநான்கு நூறாயிரமாம்.

### மூவகைச்சாதியாவது.

உத்தமம், மத்திமம், அதமமெனச் சாதிகள்மூவிதம். உத்தமசாதியாவது—இகலோக பரலோகபுத்தியாகிய விருவகையுங் கொடுக்கின்ற மானிடசரீரமாம். மத்திமசாதியாவது—பரலோகபுத்தியை மறைத்து இகலோகபுத்தியை மாத்திரம் கொடுக்கின்ற பசுபக்ஷிமுதலாயின. அதமசாதியாவது-இரண்டு லோகபுத்தியையு மறைத்திருக்கின்ற மரம், கொடி, செடிமுதலியன. ஆகாசபூதங்களாயிருக்கின்ற பிதுர்லோகம், தேவலோகம், யட்சர்வ கந்தர்வசித்தலோகங்களிலும் நட்சத்திரங்களாகத் தோற்றுகின்ற சந்திரன்முதலான பிதுர்க்கள், சூரியன்முதலான தேவதைகள் கந்தர்வசித்தரென்னப்பட்டவர்களும் உத்தமசாதியென்றும், காமதேனு அயிராவதம் அன்னம் கருடன்முதலானவை மத்திமசாதியென்றும், கற்பகவிருட்சம் பாரிசாதம்முதலானவை அதமசாதியென்றுஞ் சொல்லப்படும்.

உ - ம். "அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோ, டெண்டரு நாலெண்பத்து, நான்குநூறாயிரத்தா, லுண்டுபல்யோனியெல்லா மொழிந்துமாநுடத்துதித்தல்" என்று சி - ஞா-சி-யிலும், "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக், கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச், செல்லா நின்றவித் தாவர சங்கமத்து, ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்" என்று திருவாசகத்திலுங் காண்க.

### மானிட சென்மச்சிறப்பு வயதளவுமுதலியன.

மானிடஜென்மத்தையுண்டாக்கினது பரமேஸ்வரனை மனதினாலே நினைக்கவும், வாக்கினாலே தோத்திரஞ்செய்யவும், கைகளால் பூசைசெய்யவும், கால்களாற் பிரதக்ஷணஞ்செய்யவும், சிரசினாலே வணங்கவும், செவியினாலே யவருடையபுகழைக் கேழ்க்கவும், கண்களினாலே யவருடைய திருமேனியைத் தரிசிக்கவுமாம்.

மனிதர்களுக்கு வயதளவு நூறெனப்படும். 120 யென்றுஞ் சொல்லப்படும். 10 வயதளவு மிளமையும், 20 வரையில் வாலிபமும், 40 வரையில் யவ்வனமும், 50 வரையில் கௌமாரகமுமாம். 60-வது வயதில் அப்புதேயுவையும், 70-ல் தேயுவாயுவையும், 80-ல் வாயுஆகாசத்தையும் 90-ல் ஆகாசம் ஆத்மாவையும், நெருக்குமாம். நூறுவதுவயதில் ஆத்மாவந்தவழியை நோக்குமாம். இடையில் வியாதிமுதலியவற்றால் மரணமும் சம்பவிக்குமென்க.

உ – ம். "வேதநூல் பிராய நூறு மனிதராம் புகுவ ரேனும், பாதியு முறங்கிப் போகு நின்றதிற் பதினை யாண்டு, பேதைபா லகன தாகும் பிணிபசி மூப்புத் துன்பம், ஆதலால் பிறவி வேண்டே னரங்கமா நகரு ளானே" என்று தொண்டரடிப்பொடியாழ்வார் சாற்று.

### காலப்பிரமாணங்களாவன.

நிமிஷம் 15 கொண்டது காஷ்டை, காஷ்டை 30 கொண்டது கலை, கலை 30 கொண்டது முகுர்த்தம், முகுர்த்தம் 30 கொண்டது திவசம், திவசம் 30 கொண்டது பக்ஷம், பக்ஷமிரண்டு கொண்டது மாசம், மாசம்பனிரெண்டுகொண்டது வருடம், மநுடவருடம் 360 கொண்டது ஒருதேவவருடம், தேவவருடம் 12000 கொண்டது சதுர்யுகம். சதுர்யுகமென்றது கிருதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகமென நான்கெனப்படும்.

வருடங்களறுபதாவன —பிரபவ, விபவ, சுக்கில, பிரமோதூத, பிரசோற்பத்தி, ஆங்கிரச, ஸ்ரீமுக, பவ, யுவ, தாது, ஈஸ்வர, வெகுதானிய, பிரமாதி, விக்ரம, விஷு, சித்திரபானு, சுபானு, தாரண, பார்த்திப, விய, சர்வசித்து, சர்வதாரி,

விரோதி, விக்ருதி, கர, நந்தன, விஜய, சய, மன்மத, துன்முகி, ஏவிளம்பி, விளம்பி, விகாரி, சார்வரி, பிலவ, சுபக்கிருது, சோபக்கிருது, குரோதி, விசுவாவசு, பராபவ, பிலவங்க, கீலக, சவுமிய, சாதாரண, விரோதிக்ருது, பரிதாபி, பிரமாதீச்ச, ஆனந்த, ராட்சச, நள, பிங்கள, காளயுக்தி, சித்தாத்ரி, ரௌத்திரி, துன்மதி, துந்துபி, ருத்ரோற்காரி, ரத்தாட்சி, குரோதன, அட்சய, எனவருடங்கள் அறுபது.

மாசங்களாவன — சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, அற்பிசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனியென மாசங்கள் பனிரெண்டு.

வாரங்களாவன —நாயர், திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி, யென ஏழு. தைமுதல்ஆனிவரையில் உத்திராயணகாலமும், ஆடிமுதல் மார்கழிவரையில் தக்ஷணயன காலமுமாமெனப்படும.

திதிகளாவன—பிரதமை, துதியை, திரிதியை, சவுத்தி, பஞ்சமி, சஷ்டி—சப்தமி, அஷ்டமி, நவமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி, சதுர்த்தி, பௌர்ணமி, எனப்பதினைந்து. கிருஷ்ணபக்ஷமதிதிகள் பதினைந்தும், சுக்கிலபக்ஷமதிதிகள் பதினைந்துமாகவிரண்டுங்கூடிய மாதமொன்றுபிதுர்களுக் கோரிராபபகலென்க. கிருஷ்ணபக்ஷம் இருட்டுகாலம், சுக்கிலபக்ஷம் வெளிச்சம அதாவது நிலவுகாலம்.

நக்ஷத்திரங்களாவன—அசுவனி, பரணி, கிருத்திகை, ரோகணி, மிருகசீரிஷம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம, அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, எனநட்சத்திரங்களிருபத்தேழு. இவற்றுள் உளர்த்தமுகநட்சத்திரம் ஒன்பது, திரிமுகநட்சத்திரம் ஒன்பது, அதோமுகநட்சத்திரம் ஒன்பதெனப்படும்.

பஞ்சபக்ஷிகளாவன —வல்லூர், ஆந்தை, காகம், கோழி, மயிலென்னும் பட்சிகளைந்து. இவற்றில் அசுவனிமுதல் மிருகசீரிஷம்வரையில் வல்லூர்பக்ஷியும், திருவாதிரைமுதல் பூரம்

வரையில் ஆந்தையும், உத்திரமுதல்விசாகம்வரையில் காக முமு, அநுஷமுதல் உத்திராடம்வரையில் கோழியும், திருவோணமுதல் ரேவதிவரையில்மயிலும் பிறந்தார்நட்சத்திரங்களெனப்படும்.

## நவக்கிரகங்களுமவைகளின் திசாவருடங்களும்.

சூரியன், சந்திரன், அங்காரகன், ராகு, குரு, சுக்கிரன், சனி, புதன், கேது, எனு மொன்பதும் நவக்கிரகங்களாம். சூரியதிசாவருடம் 6, சந்திரதிசாவருடம் 10, அங்காரகதிசா வருடம் 7, ராகுதிசாவருடம் 18, குருதிசாவருடம் 16, சனி திசாவருடம் 19, புததிசாவருடம் 17, கேதுதிசாவருடம் 7, சுக்கிரமகாதிசாவருடம் 20.

## இராசிகளாவன.

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனமெனராசிகள் 12-ம் லக்கினங்கள் 12 யெனவும், இராசிகளென்றது சந்திரலக்கினமெனவும், மாதங்கள் 12-க்கும் 12 ராசிகளெனவும்படும். ரிஷபம், சிங்கம், விருச்சிகம், கும்பமெனுநான்கும் ஸ்திரராசிகளாம். இவை நன்மைகளைத்தருவதாம். மேஷம், கடகம், துலாம், மகரமெனுநான்கும் சரராசிகளாம். இவை மத்திமமாம். மிதுனம் தனுசு, கன்னி, மீனமெனுநான்கும் உபயராசிகளாம். இவைஉத்தமராசிகளெனப்படும்.

## பதவிகளாவன.

ஸாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியமெனப்பதவிகள் நாலெனப்படும். இந்நான்கும்வடமொழி. ஸ யென்றது-அவனெனப்படும். லோகம்மென்றதுவுலகம். ஸாலோகமென்றால் அவனதுலோகம், ஸாமீபமென்றால் அவனதுசாமீபம், சாரூபமென்றால் அவனதுரூபம், சாயுச்சியமென்றால் அவனைப்போலமான் மழு காள கண்டமுமாயிருக்கு மென்றதென்க. பதமுத்தியென்றது காலாந்தரத்திலேபுநருற்பவம் அதாவதுமறுபிறப்பென்க. சாலோக சாமீப சாரூபமென்னும் பதமுத்திகள் அநித்தியமாகையால் அசத்தியமென்க. சாயுச்சியம்நித்தியமாகையால் அதுசத்தியமென்றதென்க. சரியை, கிரியை,

யோகமெனு மூன்றையுமநுட்டித்தவர் முறையே சாலோக சாமீப சாரூபபதவிகளையும்,ஞானத்தையநுட்டித்தவர் சாயுச்சியத்தையுமடைவர்களென்றதெனக. சாயுச்சியமேபரமமான முத்தியாமென்க.

ஞானமென்னும்பதத்துக்கருத்தம்- ஞானமென்னும்பதம் ஞாதேகஜ்ஞீகரணவியுத்பத்தியாலேயுண்டாயிற்றென்க. இது வடமொழி. இந்தஞானம்பரஞானம், அபரஞானமென்றிரு விதமாம். பரஞானமென்றது பதிஞானமாம். அபரஞான மென்றது வாச்சியஞானமாம். பதிஞானமாகியபரஞானம் பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமமாகிய இம்மூன்றினுலுமறியப்படாதபடியினுலே பரஞானமெனக் கூறியதென்க. சர்வஞ்ஞோத்திரம், சிவதருமோத்தரம் யோகசம், சிந்தியம், மிருகேந்திரமென்னு நூல்களில்விரிவறிக.

## ஞானவகைகளாவன.

விகற்பஞானம், நிருவிகற்பஞானம், திரிபுடி ஞானம், சாத்திரஞானம், பாவனைஞானம், விந்துஞானம், சிவஞானமென ஞானவகைகளாம். இவற்றுள் விகற்பஞானமாவது—சிற்சத்தியைத்தரிசித்ததனுற் சிவனைவெறறக்காண்கையாம். நிருவிகற்பஞானமாவது — காண்பானுகியதன்னையும், காணப்படுபொருளாகிய சிவனையும், காட்சியாகிய சிவஞானத்தையும் பகுத்தறியு முறைமையின்றிச் சிவமாகிநிற்பது நிர்விகற்ப ஞானமாம். திரிபுடிஞானமாவது—காண்பானுகிய ஞாதுருவும், காணப்படுபொருளாகிய ஞானமும் காட்சியாகியஞேயமும் சங்கற்பித்தறிதலாம். அதாவது ஆன்மபோதத்தைச் சுட்டியறிகிறஞானமென்க. சாத்திரஞானமாவது -- கேட்டலின்கணுள்ளதாம். பாவனைஞானமாவது--சிந்தித்துத்தெளிதலின் கணுள்ளதாகியபேதஞானமாம். விந்துஞானமாவது— வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமையென்னுநால்வாக்குகளைப்பற்றி நிகழுஞானமாம். சிவஞானமென்னுந் திருஞானமாவது — அநுபூதியல்லாமல் யெல்லாத்துக்குமப்பாற்பட்டு வாக்கு மனோகோசரமாயிருக்கிற தெனப்படும். சீவன் முத்தரானவர்கள் விகற்பமாகிய பதார்த்தஞானங்களைவிட்டு

நிர்விகற்பஞானமாக வெல்லாஞ் சிவமாகவே காண்டு நிற்ப ரென்றறிந்திடுக.

## ஞானமே முத்திக்குச் சிறந்தகாரணமென்பது.

இருக்குவேதத்தில் பிராமணத்திலும், உருத்திரசங்கிதையிலும், இரண்டாம்வேதமாகிய யசுரில் ஆரணத்திலும், பிரகதாரணியத்திலும், மூன்றாம்வேதமாகிய சாமத்தில் சாந்தோக்கியத்திலாருவைதிலும், அதர்வணமாகிய நான்காம் வேதத்தில் ஈஸ்வரசாட்சாத்காரத்திலேயும், சைவபுராணத்தில் சூதசங்கிதையிலும், சுப்ரபேதத்தும், சிவதருமோத்தரத்தும், பதினெண்புராணங்களிருவத்தெட்டு திவ்யாகமங்களிலும் ஞானத்தினாலேயே முத்தியென்று கூறப்படுகின்றனவாம். ஞானமல்லாதனவெல்லாம் அஞ்ஞானமாதலின் அவ்வஞ்ஞானப் பகுதிகளால் பந்தமுறுதலின்றி வீடுபேறடைதல் கூடாதெனவும், கருமமனைத்தும் ஞானவாயிலாக வீடுபேற்றிற்குக் காரணமாவதல்லது நேரே காரணமன்றெனவும், மெஞ்ஞானமுடையோர்க்கே முத்தியாமெனவும் படும்.

உ - ம். "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம் நல்லவாகமஞ்சொல்ல வல்லவாமென்னூ, மூனத்தா ரென்கடவ ரஞ்ஞானத்தா லாவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞானத்தா, ஞானத்தாலது போவ தவர்கதிர்முன் னிருள்போ லஞ்ஞான மறபந்த மறுமுத்தியாகும்" என்று சி - ஞா - சியிலும் "இருணீங்கி யின்பம் பயக்கு மறணீங்கி, மாசறு காட்சி யவர்க்கு" என்று திரு. வ. நா. குறளிலுங்காண்க.

## ஞானத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானமென்பது.

ஞானத்திற்சரியையாவது—தத்துவங்களை நியதிகளைந்து தன்னை யருளாலறிந்து முடிவில்நிற்பதாம். ஞானத்தில் கிரியையாவது—அருள்வடிவாயிருப்பதாம். ஞானத்தில் யோகமாவது—அருள்வடிவாயிருந்து தற்போதஞ் சிறிதுந் தோன்றுதொழிந்து ஞானத்தைப்பெறுவதாம். ஞானத்தில் ஞானமாவது—பரைநீக்கத்திற் றோன்றும் ஞானானந்தத்தி லதீதப்படுவதாம். ஞானத்துக்கங்கம் சரியை, கிரியை, யோகமென்றும், அவைகளுக்குப் பதமுத்தியென்றும், ஞானத்தினாலேயே மோட்சமென்றுஞ் சொல்லப்படும்.

உ-ம். "ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு, ஞானத்தின் ஞானமே நானென்ன தென்னாமல், ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி, ஞானக்கிரியையே நன்முத்தி நாடலே" என்று திருமந்திரம்.

## ஞானநிலை யுயர்வுங் கன்மநிலை யிழிவும்.

கன்மத்தாற் பெறும்பலம் அற்பம். அடையுந்துயரமோ பெரிதாம். ஒளியினையுடைய மாணிக்கத்தைக் கைக்கொண்டார்க்கு மகிழ்ச்சியேயன்றித் துயருண்டோ? அதுபோலத் தெளிவினையுடைய ஞானயோகஞ் சித்தித்தார்க்கு இன்பமே யன்றித் துன்பமுண்டோ? புல்லியநிறத்தையுடைய வம்மிக் கல் முதலியவற்றைச் சுமந்தார்க்கு விலையாலெய்தும் பொருளோ அற்பம், அதனைச் சுமக்குந் துயரமோ மிகப்பெரிது, அதுபோல பூசை, செபம், தியானமெனப் பரந்த கன்மநிலையில் நிற்பார்க்குப் பெறும்பலம் அற்பம் அடையுந் துயரமோ பெரிதாம். "தெளிய யோகசித்தர்க்குஞ் சிறப்பேயலது செல்லுண்டோ, புளியசிலையைப் பொறுத்தார்க்குப் பொருளோ சிறிதுதுயர் பெரிது, நெளிவுபெரிது பலஞ்சிறிது நிறைந்த கருமநிலையார்க்கே" என்று சிவதருமோத்தரம்.

## உண்மையறியுஞ்சத்தி யுணர்விக்கேயன்றித் தொழிலுக்கின்றென்பது.

மாறுவேடங்கொண்டவர்களை யறிபவர் நுட்பினால் மறைந்திருப்பவைகளான அவர்களுடைய குணங்களையும், அடையாளங்களையும், நடைகளையும், ஆராய்ந் தவரிவரென் றறியாமல் வோடியும், குதித்தும், தலைகீழாகநின்றும், உயர்ந்த கம்பத்தேறி ஆடியுமாகிய விவ்வாறான பலதொழிலாகிய கன்மங்களைச்செய்தாலும் அவர்களது யெதார்த்தவடிவந் தெரியமாட்டாதாம். வீட்டிற்குள்வைத்த வஸ்துக்களை வைத்தவிடந் தெரியாது மறந்தவன் வருடம் நூறு தூக்கித்தாலும் முன்வைத்தவிடத்தை ஞாபகஞ்செய்து அறிந்தபின்னந்தவஸ்து கிட்டுமேயல்லது வேறொன்றால் வெளிப்படாதாம். இருட்டிலுள்ளபொருளை எறிகின்ற விளக்கினாலும் கண்களினாலும் காணல்வேண்டும். பிரத்யட்ச சூரியனைப் பார்க்க நேத்திரமொன்றே போதுமாம். பரந்தவுலகத்தைப்

பார்க்க விருத்தியும் பலமும் வேண்டுமாம் உண்மையான
பிரமவஸ்துவாகிய ஆன்மாவைத் தரிசித்தற்கு விசாரரூபமான
விருத்திஞானமொன்றுமே போதுமென்றதென்க. பிரமம் அக
முகமனத்திற்கறியப்படும். பகிர்முகமனத்திற் கறியப்படாதெ
னப்படும். பிரமஸ்வரூபத்தைத் தெரிவிக்கும் இலட்சணத்
தால் சுருதிசொல்லும் பிரஞ்ஞானமும் விசாரணையினால் வரு
மேயல்லாமல் வேதசாஸ்திரங்களைப் படித்தாலும், அன்ன
தானம், தவம், மந்திரம், ஆசாரம், வேள்வியாகிய வினைகளி
லெந்தகருமத்தைசெய்தாலும் ஆத்மாவாகிய தன்னைத் தெரி
ந்துகொள்வது இக்கருமங்களால் வரமாட்டாதென்கவென்ப
தாம். ஞானத்தையறிவிக்குஞ் சத்தி விசாரத்துக்கேயன்றி
கன்மத்துக்கில்லையாம். கன்மசம்பந்தமான அஞ்ஞானத்தைக்
கெடுப்பது விசாரரூபமான ஞானமேயாம். பழுதான அஞ்
ஞானத்தைப் புண்ணியகன்மங்களானவை நட்பாக்குமாம்.
சத்கருமத்தால் ஞானமுதிக்குமே விசாரணை யாதுக்கென்
னில்? தந்தம வருணாச்சிரமங்கட்குரிய சத்கருமத்தைப் பலா
பேட்சையின்றி ஈஸ்வரப்பிரீதி செய்யில் அந்தக்கரணத்தி
லுள்ள வசுத்தம் நீங்கும், சித்தசுத்திவரும். அம்மனம் பின்பு
சிறப்பட விசாரஞ்செய்து ஞானத்தைப் பொருந்தானிற்குமாம்.
அஞ்ஞானத்துக்குச் சொரூபஞானம் உறவும், விருத்திஞானம்
பகையுமாம. விசாரத்தாலுண்டாகு மந்த விருத்திஞானமா
னது சொரூபஞானத்தி லுறவாகிநின்று அஞ்ஞானத்தைக்
கெடுத்துத் தானும் அந்த வஞ்ஞானத்தோடொக்க நசிக்கு
மாம். விசாரணையாவதேதென்னில்? மனமுதலிய இந்தத்
தேகத்திலிருக்கிற ரிந்த நானியாவன்? சித்தென்பதியாது?
சித்துஞ்சடமுமாகிய விரண்டுமொன்றாய்க் கூடப்பெற்ற பந்
தம் யாது? அதனை விடப்பெற்றமுத்தி யாது? யென விசா
ரித்தல் விசாரணையாமென்க.

உ - ம். "வேட மாறிய பேர்களை யறிய வென்ற பாடத்தில்,
கூட மாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியாமல், ஒடி
யுங்குதித்துந் தலை கீழ்நின்று முயர்ந்த கம்பத்தேறி, ஆடி யும்பல
கன்மங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே" என்றும், "மனைக்
குள்வைத்த பண்டங்களை மறந்தவன் வருடநூ றழுதாலும், நினைத்

துணர்ந்தபின் கிட்டும்" என்றும், "எறிகின்ற விளக்காற் கண்ணு விருட்பொருள் காணல்வேண்டும், புரிகின்ற விருந்தியொன்றே போதுமெய்ப் பொருள்காண் போர்க்கே" என்றும், "இன்னவா ரந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத்தால் வேதம், சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமின்றிச் சுருதிநூல் படித்தாலும், அன்னதானங்க டவங்கண் மந்திரங்க ளாசாரங்கள் யாகங்கள், என்ன செய்யினுந் தன்னைத்தானறிகின்ற நிலைகளால் வாராதே" என்றும், கைவ - நி - நீ - ற்காண்க.

## ஞானயோகம் கன்மயோகமிரண்டு மோட்சஏதுக்களென்பது.

கருமமில்லாமல் ஞானநிஷ்டையுள்ளவனுக்குச் சரீரதாரண முண்டாகாதாம். ஆத்மாவின் பூர்வகர்ம பந்தநிவர்த்தியின்பொருட்டுக் கருமத்தைச் செய்வதென்க. எவனு மெந்த காலத்திலாகிலும் க்ஷணமாத்திரங் கருமங்களைச் செய்யாம லிருக்கவில்லை. பிரகிருதிகுணங்களால் தன்ஸ்வாதீனமில்லாமலே கருமங்களைச் செய்விக்கப்படுகிறானும். எவன்கருமேந்திரியங்களையடக்கி மனத்தோடுவிஷயங்களை ஸ்மரித்துக் கொண்டிருக்கின்றானோ அவன்பொய்யான ஆசாரமுடையவனென்று சொல்லப்படுவனும். மனதையும் இந்திரியங்களையும் வென்று தன்ஆத்மாவும், சகலபிராணிகளின்ஆத்மாவும் ஒரே ரூபமாகநினைப்பவன் கருமங்களைச்செய்தாலும் அகங்காராதிகளவனைப்பற்றமாட்டாவாம். தத்துவஞானியாகிய யோகிபார்த்தாலும், கேட்டாலும், தீண்டினாலும், மோர்ந்தாலும், புசித்தாலும், நடந்தாலும், தூங்கினாலும், மூச்சுவிட்டாலும், பேசினாலும், விட்டாலும், கிரகித்தாலும், கண்திறந்தாலும் மூடினாலும், அந்தந்தஇந்திரியங்கள் தம்தம்காரியங்களிற்பிரவர்த்திக்கின்றனவென்று மாத்திரம் நிச்சயித்துக்கொண்டே தானொன்றையுஞ் செய்யவில்லையென்று நினைப்பானென்றும், கர்மங்களைப் பிரமத்தில்வைத்து பலாபேக்ஷையில்லாமலெவன் செய்கிறானோ அவனைத் தாமரைநீர்போலப பாபங்கள்பற்ற மாட்டாதென்றுஞ் சொல்லப்படும் "பகவத்கீதை மூன்றுமத்தியாயம், 4-முதல் 10-வரையிலும், 5-ம் அத்தியாயம் 6-முதல் 11 வரையிலும் ஸ்லோகங்களில்காண்க.

### ஞானமாகிய அறிவே சத்தியம், உடலாகியவுலகம் அசத்தியமென்பது.

வேதமுடிவும், கீதை, உபநிடதங்களும், உலகுமிதனைத அறிவே சத்தியமெனக் கூறுகின்றனவாம். சமஸ்தபிரபஞ் சங்களும் கட்டையிற் கள்ளன், பழுதையிற்பாம்பு, கானலிற் சலம், கிளிஞ்சலில் வெள்ளியும்போலவும், மலடிபுத்திரன், முயர்க்கொம்புபோலவும், சொப்பனப்பிரபஞ்சம்போலவும் பொய்யேயாம். ஞானமொன்றுமே மெய்யென்றறிதெனப்படும். அறிவு—பாவம்-மெய். அபாவம-பொய்யெனவறிக. "ஞான மெய் மகனை யுன்னை நம்மாணை மறந்திடாயே" என்றும், "னமாந்தரிபுமானி பிரபஞ்சமெல்லாம் பொய்யே" என்றும் கைவ-ந-நிதத்திற்காண்க. சித்தின்முயல்வார்சித்தும், சடத் தின் முயல்வார்சடமுமாகுவாராம். சித்து—அறிவு, சடம்— தேகம். சகசசமாதியின்றுகலின் உலகந்தோன்றுமாம். தன் னெறிக்கண்ணிற்கில் அம்திருக்கினுந்தோன்றுதாம். அயர்ந் தால் தோன்றுமாம். வுலகைச்சின்மாத்திரமாகக் கரைக்கிற் றேன்றினுந்தோன்றுவிடினு மிடையூறில்லையாம்.

### சமாதியாவது.

சரீரவாதனைகளில் வுணர்வற்று ஸ்தம்பமாய்ப் பிரமஸவ ரூபத்திற்கலந்து தேகத்தையசைவற நிறுத்திச்சின்மயத்தில் நீடூழிகாலம் நின்றுவிடுதல் சமாதியெனப்படும். சொரூப சமாதி, சகசசமாதியென்றிருவகைத்தாம். இவற்றில்சொரூப சமாதியாவது—அகத்தில்தேகமுதல் ஆன்மாயிறுதியாகநின்ற தத்துவங்களை நியதிகளைந்துச் சேருவதாம். வஸ்துவையணு வுக்கணுவாகத் தரிசித்தலென்க. இந்தச்சொரூபசமாதி அகச் சமாதியெனவும்படும். சகசசமாதியாவது— தேகத்துப்புறம் பில் வுடலாதிபிரமமிறுதியாகநின்ற வியாபகவியாப்பியங் களைநியதிகளைந்துச் சேருவதாம். வஸ்துவைமகத்துக்குமகத் தாகத்தரிசித்தலென்க. சகசசமாதி புறச்சமாதி யெனவும் படும். சொரூபசமாதியி லேதேனுந்தடைகளால் நிட்டை கலைந்தாலப்போதே சங்கற்பந்தோன்றும், திரிபுடியும் இச்சா ஞானக்கிரியையு முண்டாகுமாம். சங்கற்பந்தோன்றுவது ஞெப்தியாதலாலதனை யங்ஙனே சிற்பிரகாசமாக விளக்கில்

அனைத்துமங்ஙனமாமென்க திரிபுடியும் சிற்பிரகாசமாயேக மாய்விளங்குமாட. கேவலகும்பகத்தில்நிற்றல், பிரமமந்திரத்தையுச்சரித்தல், முபபதுநாழிகைவரையிலுஞ் சுவாசபந்தனஞ் செய்திருத்தலுமாமென்க.

## பழக்கவாசனைவிருத்திகளடக்குமுபாயம்.

அறிவென்னுமுண்மையில் அந்தர்முக திருஷ்டியாயிடைவிடாத அப்பியாசத்தால் மனமானது தன்வசமாகவிருந்து சைதன்னியஸ்வரூபமானால், வெறுக்கபபட்ட தேகத்திலிருந்தாலும் பிரமானந்தச்சாகரஸ்வரூபராவராம். சாககிராதியவத்தைகளுதிக்கின்ற விருத்திகளைத் தள்ளில் பரிபூரணமாயிருந்து நிரதிசயானந்தத்தை யடையலாமென்றதென்க. ஞானவாசனும் புத்திமுதலிய விடயங்களனைத்தையுந் தனைவலாக விருக்கப்பெற்று காரணமாகத்தபு த்தவொப்பற்ற அவித்தைகளையுநீக்கினால் பழக்கவாசனை விருத்திகளியாவுமொடுங்குமாம். "நிசத்திலுள்விழிப்பார்வையாய் நிரந்தரப்பழக்கத்தால், வசத்திலுன்மனம் நின்றுசின்மாத்திரவடிவமாகிடின்" என்றும், "போதமாமிராசன்றானும்ப புந்தியைப் புலன்களாகத், தாதராயிருக்கப்பெற்றாற் சகலமுமடங்குந்தானே" என்றும், "கருத்ததற்கில்லையென்னிற் காரணசரீரமாகிப், பெருத்ததோராவித்தை தன்னைப் பிடிங்கிடிலடங்குந்தானே" என்றும் கைவ. ந. நிதத்திற்காண்க.

## கேட்டல்சிந்தித்தல்தெளிதல்நிட்டையென்பது.

கேட்டலாவது — ஞானோபதேசங்களைக் கேட்டலாம். சிந்தித்தலாவது—உண்மையிப்படியென்றுவாராய்ந்தறிவதாம். தெளிதலாவது — உண்மைப்பொருளை யறிவிற்றெளிவதாம். நிட்டையாவது — தெளிந்தமேலான ஞானத்துடன்கலந்து நிட்டைபுரிதலாம். சமாதியாவது—மனமானது விஷயாகாரங்களைப் பற்றாமலிருக்கவும், இன்பத்தைப்பெறும்படி நினையாமநினைத்துப்பிரகாசிக்கின்ற ஒப்பற்றநிலையில் சதாகாலமும் சாக்ஷித்தன்மையைநீங்காமல் பொருந்தியிருத்தலாம். அங்காசனத்திலிருந்து நிட்டைசெய்தலே சதாநிட்டையென்றதென்க. மான்தோல், புலித்தோல், சித்ராசனம், வெள்ளைவஸ்தி

ரம், தருப்பைஆகியவைந்திலொன்றை அழுத்தமான பூமியில் விரித்து அங்காசனஞ்செய்து ஞானசாதனிட்டை டவேண்டுமாம். பத்திரம், வீரம், குக்குடம் அருமையென்பதுமம், கோமுகம் ஆகியவைந்தும் அங்காசனமாம். இவை ஞானசாதனத்துக்குரியவைகளென்க. ஞானபூமிகளேழுஞ்சமாதியடைதற்குச் சாதனங்களாம். சகலசமயங்களுக்கும் ஞானபூமிகளேழுமேலானதாம். 17-வது பக்கத்திலிருப்பதையுங்காண்க. நிட்டைகூடாதவர் பதமுத்தியையடைந்து பூமியின்கண்ணே நல்லகுலங்களிலேவந்துதோன்றி யாசாரியனுலே ஞானநிட்டையைக்கூடி பரமேஸ்வரனுடைய சீர்பாதத்தைப்பொருந்தாநிற்பாராம். நிட்டைகூடினவர் சாயுச்சியத்தை யடைவராம்.

சிவயோகமாவது— வாயுவடக்குதல் ஞானநிட்டையல்லவாம். மனத்தினுடைய விருத்தியடங்கிநிற்றலே ஞானநிட்டையாம். மனமடங்கிடில் வாயுவடங்கிடுமாம். அப்படி கருத்தடங்கினதே சிவயோகமெனப்படுவதாம், "நிட்டையாதல் கருத்தடங்கநிற்றலே சிவயோகம்" என்றும் "மனமடங்கிடில் வாயு வடங்கிடும், மனமனமங்குண்டு வாயுவுமங்குண்டு" என்றும் நிட்டானபூதி திருமந்திரமிவைகளிலும். "கேட்ட முன் சிந்தித்த றெளிதநிட்டை கிளர்த்தலென வீரிரண்டாங்கிளக்கின் ஞானம்" என்று சி-ஞா-சியிலும் "அலையுமனதை யகத்தடக்குமவனே ஞானயதிசூரன்" என்று நி - அ - பூதியிலும். நினைவொன்றும் நினையாமல்நிற்கினகமென்பார் நிற்குமிடமேயருளாநிட்டை யருளொட்டும்" என்றும், "மரணமுண்டென்பது சதாநிட்டர்நினைவதில்லை" என்றும், தாயுமானஸ்வாமிகள் பாடலிலும், "திடமாகச் சுவானு பூதி சிவோகமென் றிருந்திடாயே" என்று கை-ந-நிலுமறிக.

### ஞானத்துக்குத்தடைகளும்நீக்கமுமாவன.

ஞானத்திறகுத்தடைகள், அஞ்ஞானம், சந்தேகம், விபரீதங்களெனப்படும். சிரவணத்தால் அஞ்ஞானத்தையும், மனனத்தினுல்சந்தேகத்தையும், சுவானுபவமாகத் தெளிதலினுல் விபரீதத்தையும் போக்கவேண்டுமாம். தடைகளேபந்தமும்,

தெளிதிலேமுத்தியுமாம். "தடைகளைதெளி லஞ்ஞானஞ்சந் தேகம் விபரீதங்கள்" என்றும், "திடமுடனமெகடுப்பாய் கேட்டல்சிந்தித்ததெளிதலாலே" என்றுங்கைவ-ந-நீதத்தறிக.

மோட்சமுண்டென்கிற எந்தமார்க்கத்துக்கும் உபக்கிர மத்திற்பந்தமும், உபசங்காரத்தில் முத்தியுமென்பது சித்தாந் தமே. உபக்கிரமமாவது — தத்துவங்களின்பாகுபாடுகள். இதுவேபந்தமாம். உபசங்காரமாவது — தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரிகிறது. இதுவேமுத்தியாம்.

## கன்மகாண்டம் பூர்வபக்ஷமென்பது.

வேதங்கூறும் பிரபலசுருதி வாக்கியமென்னும் ஞான காண்டம், அற்பசுருதி வாக்கியமென்னும் கன்மகாண்டமா கிய விவ்விரண்டில் கன்மகாண்டவிதி, கட்டுக்கடங்காரைக் கட்டுக்கடங்கக் கன்மம்புரிய பூர்வபக்ஷமாக நியமித்ததென் றும், கன்மங்களு மதிஞுலுண்டாகும் போகவின்பங்களா கியவனைத்தும் பின்பு துன்பமாகவருதலைக்கண்டு அவற்றை விடுத்து பரமசுகத்தைத் தேடவேண்டுமென்பதே வேதசம் மதமாமென்றும், போகபாக்கியப்பயனுன கன்மத்தை வேதம் விலக்கினதேயன்றி விதித்ததன்றென்றும், போகத்தைப்புசிக் கின்ற சீவர்களுக்குநேர்ந்த பதார்த்தங்களை அருந்தலும், நேரிட்டபெண்களைப் பொருந்தலும் சுபாவமேயாமென்றுஞ் சொல்லப்படும். காக்கையே கருத்திடு, அக்கினியே சுடு, வே ம்பே கசந்திடு, காற்றே சலியென்று வொருவரும் நியமிக்க வேண்டுவதில்லையே? அதுபோலவேதங்களுஞ் சுபாவங்களை நியமிக்குமோ? மதுவையும், மாம்சத்தையுமுண்ண இச்சித் தால் யாகங்கள்செய்யென்றும், காமவேட்கையுண்டானல் விவாகஞ்செய்த மனைவியோடு புணர்கவென்றுஞ்சொன்னல் இக்காமி மற்றவைகளனைத்தையுந் தீண்டாது நீக்கவேண்டு மென்பதே வேதத்தினுடைய சம்மதமும் அபிப்பிராயமுமா மென்றதெனப்படும். வேதத்தின் கருத்தறியாது மறுத்தல் பிழையாமென்க. மது மாம்சங்களைப்புசியென்ற வேதமா னது பின்பு ஆக்ராணஞ்செய்தாற் போதுமென்றதென்பதை யும், மனைவியின் புணர்ச்சியின்பம் மகப்பேருண்டாம் பொரு

ட்டென்ற தென்பதையுமறிக. பூர்வபக்ஷமென்றது களைதற்பாலது. சித்தாந்தபக்ஷமென்றது நிலைத்தற்பாலது.

**விவாகங்களெட்டுவிதமென்றது.**

பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னு நாலுசாதியாருக்கும் பிராமம், தெய்வம், ஆருஷம், பிராஜாபத்தியம், ஆசுரம், காந்தர்வம், இராட்சசம், பைசாசமென விவாகங்களெட்டுவிதமெனப்படும். பிராமணனுக்குப் பிராமமுதல் காந்தர்வம் வரையிலும், க்ஷத்திரியனுக்கு ஆசுரமுதல் பைசாசம் வரையிலும், வைசியனுக்கும் சூத்திரனுக்கும் ஆசுரம், காந்தர்வம், பைசாசமெனு மூன்றும் விவாகங்களெனப்படும். புத்திரன் புத்தென்னு நரகத்தினின்று மீட்பனும். சத்புத்திரனால் ஸ்வர்க்கமுண்டாகுமாம். தர்மசாஸ்திரம் 20, 21, 23, ஸ்லோகங்களிலறிக.

கெற்பக்கோளிலக்கணம், மலட்டுக்குணங்கள், அவுழதங்கள், ஜீவோற்பத்தி முதலியவைகள் ஆத்மரக்ஷாமிர்த வைத்திய சாரசங்கிரகமுதலிய சாஸ்திரங்களிற்காணலாம்.

**பயன்றருங்கடவுள் பரமேஸ்வரனென்பது.**

பசு, பாப்பார், தந்தை, முதலாயினரை இம்மைக்கண் வழிப்பட்டார்க்கு அஃதறிந்து மறுமைக்கண் பயன்தருங்கடவுள் வேறென்பது யெல்லார்க்கு மொப்பமுடிந்தமையே. ஆன்மாக்கள் தங்கள் தங்கள் கருத்துக்கிசைந்த தெய்வங்களை வழிப்பட அந்தந்தத் தெய்வங்களுக்குச் சுகதுக்கவேதனையும், சநநமரணமு முண்டாயிருக்கையினாலே பக்குவான்மாக்களையறிந்து சநநமரணங்களைப் போக்கமாட்டாதென்றும், இங்ஙனஞ் சொல்லப்பட்ட குற்றங்களெல்லாந் தனக்கில்லாத பரமேஸ்வரன் பக்குவான்மாக்களைத் தானேயறிந்து அனுக்கிரகஞ்செய்யா நிற்பரென்றும், ஜநநமரணக் கடலைவிட்டுக் கரையேற்றுகையின்பொருட்டு ஸ்வர்க்கநரகமாகிற அவுழ்தத்தாலே கருமங்களாகிய வியாதிகளை நீக்குவரென்றுங் கூறப்படும்.

உ — ம். "யாதொரு தெய்வங்கொண்டீரத் தெய்வமாகி யங்கே, மாதொரு பாகனார்தாம் வருவா மற்றத்தெய்வங்கள், வேதனைப்படு

மிறக்குமேல் வினைகளையுஞ்செய்யு, மாதலா லிவையிலா தானமிர் தருள் செய்வனன்றே" என்று சி - ஞா - சி.

### அபுத்தி பூர்வபாவப் பிராயச்சித்தாதிகளாவன.

அபுத்திபூர்வமாக வருணச்சிரம தருமத்திலே நடக்கிற பேர்க்குப் பாபம் வந்தால் குருவினலே பிராய்ச்சித்தாதி யநுஷ்டானத்தாலே சுத்தியாம். துர்ஆன்மாக்களாயிருக் கிறபேர்கள் பண்ணினபாவத்திற்கு ராஜதண்டத்திலே சுத்தி யாம். ராஜாவினலே யறியப்படாத பாபத்துக்கு யமதண் டத்தினலே சுத்தியாம். இப்படி மூன்றுவிதமாக ஆதியிலே கர்த்தா பூமியின்கணருளிய வேதநீதியாமென்க. அரசன் வுலகிற்குயிர்போன்றவனும், அனைவரையு மாளத்தக்க வீரிய முள்ளவனும், தேவர்களின் அம்சம் பொருந்தினவனுமாம். இராசதண்டனைப்பட்டார்க்கு நரகவாதனையில்லையாம். நரகத் திலுந் தண்டிக்கிற முறைமையும் ராஜதண்டனைப்போலாகுமா மென்றதெனப்படும்.

இந்திரன், சூரியன், வாயு, எமன், வருணன், சந்திரன், அக்நி, இவர்களின் நடையை யநுசரித்து அரசன் நடக்க வேண்டுமென்க. நாலுயுகங்களும் அரசன் நடையினலேயே யுண்டாகின்றன. அரசனே யுகமென்று சொல்லப்படுகிறன். இந்திரன் மழையையுண்டுபண்ணி சநங்களைச் சந்தோஷிக் கிறதுபோல அரசன் தன் இராச்சியத்திலிருக்கிற பிரஜைக ளுக்கு அபீஷ்டத்தை யுண்டுபண்ணுவனும். வருணன் பாபஞ்செய்த பிரஜைகளைப் பாசங்களால் யோசனையின்றிக் கட்டுகிறதுபோல அரசன் பாபிகளைத் தயையில்லாமல் தண் டிப்பனும்.

உ - ம். "விண்ணுளார் நரர் மற்றயர் விலங்குமோ, பண்ணும் பாவபலத்தைக் கொடுப்பவ, திண்ணமே யமன் றேசிகன் றீர்த்திடும், பண்ணிற் பாவவிதஞ் சிவபத்தரும்" என்றும், "பிணக்கந் தன்னை யும் பெற்றவர் தம்மிடைக், கணக்கி லாரையுங் கள்வர்க டம்மையும், வணக்குவான் மன்னன் மற்றயர் தங்களை, யிணக்கு வானரகத்துளி யமனே" என்றும் காரணகமம் வாய் வசங்கீதை யிவைகளிலும், "தன்னுயிரா மென வுலகிற் றங்கிய, மன்னியி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்" என்று இராமாயணத்திலும், மனுதர்மசாத்திரம் 307, 308 ஸ்லோகங்களிலு மறிக.

### ஞானசாரியரை வழிப்படுவதும் அவரால் செய்யப்படுந் தீக்ஷையுமாவன.

ஞானசாரியனே பரமபிரம சொரூபமென்றும், பரமமான சிவனென்றும், மேலான பரஞானமிவனேயென்றும், அவனுக்குண்டாயச் சிறப்பியாதொன்றுளதோ அவையெல்லாமிவனுக்கே யென்றும் குருவெனத்தேறி ஞானசாரியனை நாடோறும் வழிப்படவே அருவமாகிநின்ற சிவன் ஆன்மாக்கண்மேல் வைத்த காருண்ணியத்தாலே தமதுள்ளிருந்துந் தெரியாது தாம் தேடுந் தேட்டமாகிய பேரானந்தந் தானே திரண்ட ஞானசாரியராய்த் தமது திருமேனியை அங்ஙனந் தேடுபவர் கண்ணுற் காணும்படி புறம்பாகக் காட்டி யாசாரியமூர்த்தியாகத் தோன்றிச் சீடனைப்பார்த்தும், பரிசித்தும், சிந்தித்துந் தன்வண்ணமாக்குவனும். பரிசதீட்சையினலே மாயையையும், மானததீக்ஷையினலே கன்மத்தையும், சட்சுதீக்ஷ யதாவது திருநோக்கத்தாலே யாணவமலத்தையும் போக்குவனும். அத்தம் வைத்தல் பரிசதீக்ஷையும், சிந்தித்தல் மானததீக்ஷையுமாம்.

### பாசநீங்கச்செயயுந் தீக்ஷை பலபிரகாரமென்பது.

ஆன்மாக்களுக்குப் பாசத்தை நீக்கச்செய்யுந் தீக்ஷை பலபிரகாரமாயிருக்குமெனப்படும். எல்லாதீக்ஷகளும் சமயர், விசேடம், நிருவாணம், அபிஷேகமென நான்கனுளடங்காநிற்குமாம். சாத்திரதீக்ஷ, யோகதீக்ஷ, அவுத்திரிதீக்ஷயும் இன்னும் பலவேறுபட்டனவுமாம். சாத்திரதீக்ஷயாவது—முடிவற்ற சாத்திரங்களையெல்லாஞ் சங்கிரகித்து, பதி, பசு, பாசமார்க்கத்தினுடைய லட்சணங்களையும், சிவசீவர்களுடைய ஐக்கியத்தையுஞ் சதசத் சம்பிரதாயமாகப் போதிப்பதாம். யோகதீக்ஷயாவது—நிராதார சிவயோகத்தை யப்பியசம்பண்ணுவிப்பதாம். அவுத்திரிதீக்ஷயாவது—ஓம சம்பந்தமாகப் பண்ணுவதாம். சட்சு, பரிசம், மானதம், வாசகம், சாத்திரம், யோகமென்னுந் தீக்ஷகளாறும் அவுத்திரிதீக்ஷக்கங்கமெனப்படும். இந்த அவுத்திரிதீக்ஷயே நிர்பீசம், சபீசம், ஞானவதி, கிரியாவதி, அத்துவாசுத்தி யென்பனவுமாம்.

நிர்பீசமாவது—மூன்றுவயதுக்குமேல் பதினறுவயதளவாகிய பாலர்க்கும், கன்மமநுஷ்டிக்கமாட்டாதறிவில்லாதவர்க்கும், எழுவதுவயதுக்கு மேற்பட்ட விருத்தருக்கும், ஸ்திரீகளுக்கும், போகத்திலே மிகவிருப்பமுள்ள விராசாக்களுக்கும், வியாதியினல் வருத்தமுறுபவர்க்குஞ் செய்யுந் தீக்ஷையாம்.

சபீசமாவது—வேதாகமசாஸ்திரங்களோதியுணர்ந்து அந்தச் சாஸ்திரஞ்சொன்ன முறைமையிலே நிற்கிற வுள்ளத்தவர்களுக்குஞ் செய்வதாம்.

சமயாசாரத்துடன்கூடி யநுட்டித்தல் சபீசமும், உயர்பீசம் நிர்பீசமுமாம். சமயவிசேடமெனு மிரண்டு மொரேவொன்றென்க.

ஞானவதியாவது—குண்டமண்டலம், அங்கி, நெய், சுருக்குச்சுருவு முதலியவனைத்தும் மனத்தாற் கற்பித்துக்கொண்டு விதிப்படி யகத்தே யாகுதிமுதலிய கிரியைகளைச் செய்வதாம். ஞானவதி, சத்தி, சாம்பவியென் றிருவிதமாம்.

சத்தியாவது — யோகதீக்ஷையாம். சாம்பவி — ஞானதீக்ஷையாம்.

கிரியாவதியாவது—குண்டமண்டலம், அங்கி, நெய், சுருக்குச்சுருவு முதலியவனைத்தும், புறத்தே நிலவக்கொண்டு புறம்பே அக்கிரியைகளைச்செய்வதாம்.

அத்துவாசுத்தியாவது—ஞானவதி கிரியாவதியென்னுந் தீக்கையிலொன்றும். கன்மங்களையெல்லாம் நசிப்பித்தலாம். ஆன்மாக்களைப்பாகதியடைவிப்பைக்குக் காரணமானதென்க.

நிருவாணதீக்ஷையாவது — இது சத்தியநிருவாணம், அசத்தியநிருவாணமென் றிருவகையாம். சத்தியநிருவாணமாவது—தீக்ஷைசெய்தவுடனே சரீரத்தைக் கமனமாக்குகிறதாம். அதாவது உடனே சுகமடைவதாம். இது முத்தியை விரும்பினர்க்கு நயிஷ்டிகதீக்ஷையென்று நாட்டப்படுந் தீக்

கையாம். அசத்தியநிருவாணமாவது—தீக்ஷைசெய்தபின்பு சரீரஞ் சிலநாளிருந்து தேகாந்தத்திலே முத்தியைக் கொடுக்கிறதாம். நிருவாணதீக்ஷை—உலோகதன்மணி, சிவதன்மணியென் றிருவிதமாம். உலோகதன்மணியாவது—கிருகஸ்தனுக்குப் பௌதிகாசாரியர் சிகாசேதமின்றிப் பண்ணுந் தீக்கையாம். இது பரமுத்தியைக் கொடுப்பதாம். சிவதன்மணியாவது—நைஷ்டிகாசாரியர் நைஷ்டிகனுக்குச் சிகாச்சேதத்துடன் செய்யுந் தீக்கையாம். சித்தியை விரும்பினர்க்குச் செய்வது பௌதிகமாம். நைஷ்டிகாசாரியர் பௌதிகனுக்கு உலோகதன்மணி தீக்ஷையுஞ் செய்யலாமென்க. பௌதிகன் நைஷ்டிகனுக்குத் தீக்ஷைபண்ணலாகாதெனப்படும்.

உ - ம். "பலவிதமாசான் பாசமோசனந்தான் பண்ணும்படி நயனத்தருள் பரிச வாசக மானதமு, மலகில் சாத்திரம் யோக மவுத்திராதி யநேக முளவவற்றி னவுத்திரி யிரண்டாமறியி, னிலகு ஞானங் கிரியையென ஞானமனத்தா லியற்றுவது கிரியை யெழிற்குண்ட மண்டலாதி, நிலவுவித்துச் செய்தல் கிரியாவதி தானின்னு நிர்ப்பீசம் சபீசமெனை விரண்டாய் நிகழும்" என்றும், "பாலரொடு வாலீசர் பனிமொழியார் பல போகத்தவர் வியாதிபட்டவர்க்குப் பண்ணுவதுஞ், சீலமது நிர்பீசமென்றும்," ஓதியுணர்ந் தொழுக்க நெறி யிழுக்கா நல்ல உத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவை தம்மை, நீதியினு னித்திய நைமித்திக காமிகத்தினிறுத்தி நிரம்பதிகாரைநிகழ்த்துவதுஞ்செய்து, சாதகாசாரியருமரக்கி வீடுதருவிக்கு முலோக சிவதருமணி யென்றிரண்டா, மாதலினு னதிகாரையாஞ் சமய விசேட நிருவாண மபிடேக மிவற்றடங்குமன்றே" என்றும்சி-ஞா-சி.

### மகாபூசையென்றது.

பரமேஸ்வரனை இருதயத்திலே தியானிப்பதே அவனுக்கு நிறைந்த மகாபூசையாம். அப்படி பக்தியுள்ளவர்கள் பாபங்களைச் செய்தார்களேயாயினும் அது புண்ணியமாமென்றும், பக்திசெய்யாதவர்கள், புண்ணியஞ் செய்தார்களேயாயினு மது பாவமாமென்றுங் கூறப்படும்.

உ - ம். "நீபரன்றன்னை நெஞ்சினினைவையே நிறைந்தபூசை" என்றும், "அரனடிக்கன்புசெய்யும் பாவமு மறமதாகும், அரனடிக்கன்பிலாதார் புண்ணிய பாவமாகும்" என்றும் சி - ஞா - சி.

### பஞ்சகலாசோதனையாவது.

நிவ்ருத்தி, பிரதிட்டை, வித்தியா, சாந்தி, சாந்தியாதீத மென்னும் பஞ்சகலைகளில் நிவ்ருத்தி கலைக்கெல்லை மூலா தாரந் தொடங்கி வுந்திக்கு மேலெண் விரலளவாம். இதற்கு ஆதித்தமண்டலம், மாயாமலமாம். பிரதிட்டா கலைக்கெல்லை இருதயந்தொடங்கி கண்டத்தளவாம். இதற்கு ஆதித்தமண் டலம் கன்மமலமாம். வித்தியாகலைக்கெல்லை கண்டத்துக்கு மேல் வாயினிருபக்கமாகிய தாலு மூலத்தளவாம். இதற காதித்த மண்டலம் மாயேயமலமாம். சாந்திகலைக்கெல்லை தாலுமூலத்துக்குமேல் நாலங்குலம் புருவமத்தியத்தளவாம். இதற்காதித்த மண்டலமும் சோமமண்டலமுமாம். திரோ தாய்மலமாம். சாந்தியாதீத கலைக்கெல்லை புருவமத்தியத் துக்குமேல் மூன்றங்குல அளவாம். சோமமண்டலம அனுக் கிரகமாம். மந்திர, பத, வன்ன, புவன, தத்துவ, கலைக ளென்னும் அத்துவாக்களாறும் முதல்வனுக்குத் தேகமெனப் படுவதாம் 56 57, பக்கங்களிலிருப்பதையுங் காண்க.

### தத்துவஞானமாவது.

தத்துவஞானமென்றது மெய்ஞ்ஞானமாகிய உண்மை ஞானமாம். வேதாகமமுதலிய சாஸ்திரவிசாரணையினால் திரி பதார்த்த நிச்சயமுணர்ந்துத் தன்னைத்தானறிகலே தத்துவ ஞானமாம். தத்துவஞானமே பெரிதென்றுங் கர்த்தா தத் துவாதீதனென்றும, ஆன்மாக்களுக்குச் சர்வவியாபகமாகப் பொருந்தி நிற்பது தத்துவங்களேயென்றும், பஞ்சகோசங் களாயிருக்கிற சரீரத்துட னெவ்வளவு கூடியிருந்தா னவ் வளவு மறைப்பேயென்றும், சரீரமும் சரீரியாகிய வான்மாவு மித்தன்மையுள்ளதென்று தெரிந்துகொள்ள பிரயத்தினப்படு கிறவர்களுக்கே சூரிய சந்நிதானத்திருள்போல அஞ்ஞான நீங்கி ஞானக்கிரியைகள் பிரகாசிக்குமென்றும், பந்தநீங்கி முத்தியடைவர்களென்றும், சநநமரணத்திலிருந்து விடுபடுகி றார்களென்றுஞ் சொல்லப்படும்.

தத்துவரூபமாவது—மண்முதல் நாததத்துவமீறாகிய தத் துவங்களையுந், தனுகரண புவனபோகங்களுஞ், செயலும்

பிரேரகமாய்நின்றதையுந் தனக்கு வேறாகக் காண்பதுவே தத்துவரூபமாம்.

தத்துவதரிசனமாவது—தத்துவங்கள் சடப்பொருளென்று தன்னறிவிலே காணப்படுவதே தத்துவதரிசனமாம். தத்துவசுத்தியாவது— தத்துவங்கள் தன்னைத் தாக்காமல் தன்னறிவிலே கண்டு நீங்கி யசைவற யன்னியனு யெங்கு நிறைவாய் நித்தியமா யறிவாயுள்ள முறைமையையறிந்து நிற்பதுவே தத்துவசுத்தியாம்.

### தத்துவஞானியினிலக்கணம்.

ஆன்மாக்களுக்குச் சர்வவியாபகமாகப் பொருந்திநிற்குந் தத்துவங்களினுண்மையை நன்றாகவுணர்ந்தவைகளின் சுவாபங்களையுமவைகணிற்கும் வியாத்தி வியாபகங்களையும் பகுத்தறிந்து அவைகணீங்கு முறைமையில் அவைகளை நீக்கியவற்றிற்கு மேலாயதொன்றனை ஐயந்திரி பின்றியுணரப் பெற்றவனே தத்துவஞானியாவனும். வியாத்தி - சமநிறைவு, வியாபகம் - நிறைவு. கடல்வியாபகமும், நீருமுப்புங் கலந்திருத்தல் வியாத்தியுமென்றதென்க. வியாத்திவியாப்பியமாமென்க.

உ – ம். "தனுகரண புவனபோகந் தற்பரம் பந்தம் வீடென், றனுவினே டெல்லாமாகி யடைந்திடுந் தத்துவங்க, ளினிதறிந் திவை நிவர்த்தி முதற்கலை யிடத்தே நீக்கி, நனிபர வுணர்ந்தோனந்தத் தத்துவஞானியாவன்" என்று சி - ஞா - சியிலும், "தத்துவத்தை நித்தநித்தம் பற்றிப் பார்த்துத் தன்னையின்னு னென்றறிந்தே பந்தநீங்கி, யத்துவிதந் தானுகி நிற்பாயாகி லழியாத வீட்டின்பம் பெருகுந்தானே" என்று பரமானந்தத் தீபத்திலும், "இன்னது தேகந்தேகி யிவனெனை வுணர்வன்யாவன், அன்னவன் தன்னைத் தானெனன் றறிந்தவ னுருமென்றே" என்று கைவல்லியநவநீதத்திலும், "தேகாதி பொய்யெனவே தேர்ந்த வுபசாந்தருக்கு, மோகாதியுண்டோ மொழியாய் பராபரமே" என்று தாயுமானஸ்வாமிகள் பாடலிலும், "ஜராமரண மோட்சாய மாமா ஸ்ரியயத்யவந்தியே, தேப்பிரம தத்விதுஃக்ருதமத் யாத்மம் கர்மசாக்கிலம்" என்று பகவத்கீதையிலுங்காண்க.

## வைணவவேதாந்தமார்க்கம்.

சிதசித் விசிஷ்ட பிரமமொன்றுமே தத்துவமென்றும், அந்தப்பிரமம் ஸ்ரீமன் நாராயணனேயென்றும், பக்தி பிர

பக்திகளால் பிரசந்நனுய், கிருபையோடுகூடி அப்ராக்ருத லோகமாகிய பரமபதத்தில் பிராட்டிமார்களுடையவும், நித்ய முக்தர்களுடையவும், நிரந்தரானுபவ கைங்கரியங்களுக்கு விஷயமாயிருக்கிற அந்த ஸ்ரீமன் நாராயணனே உபாயமென்றும், பரமப்ராப்யமென்றும், பிரமசூத்திரம் வியாசசூத்திரமென்று வழங்கப்படுவதாகிய, வேதவியாசபகவானுல் செய்யப்பட்ட, மீமாஞ்ஸைஎன்னும் நூலிலும், வேதாந்த சித்தாந்தங்களிலும், பகவதகீதை, ஸ்மிருதி, இதிகாசபுராணங்களிலுங் கூறப்பட்டிருக்கின்றன.

பிரமமாவது—ஸ்வரூபகுண விபூதிசேஷ்டிதங்களால் சமாநாதிகரகிதமாய், சர்வகாரணமாய், சர்வரக்ஷகமாய், சர்வசரீரியாய், சர்வ சப்தவாச்சியமாய், சர்வகர்மசமாராத்யமாய், சர்வவித்யாவேத்யமாய், சர்வபலப் பிரதமமாயிருக்கும் சர்வநியாம்யகமான ஈஸ்வரனென்க. நாராயணனென்பதற்குச் சப்தார்த்தம் அடியிற்கண்க.

"நாராயணன்" என்பதற்குச் சப்தார்த்தம் சேதனவர்க்கத்துக்குப் பிராப்பியபூதனென்க. "நாரா" என்னும் பதம் சீவாத்ம சமூகமெனவும், அயநமென்னும் பதம், மனிதர்கள் கூட்டத்திற்கு ஆதாரமான ஸ்தானமாயிருக்கும் பிரமமெனப் பொருள் படுமெனவும் படும்.

### பெரிய திருமந்திரம் பிரணவலக்ஷணம்.

"ஓம் நமோநாராயணய" என்னும் பெரிய திருமந்திரமாகிய அஷ்டாக்ஷரம் "ஓம்" என்றும், நம, என்றும், "நாராயணய" என்றும் மூன்றுபதங்களாகப் பிரிந்திலங்குவதோடு சேஷத்வம், பாரதந்திரம், கைங்கரியமென்னும் மூன்றர்த்தங்களைக் கைக்கொண்டிருக்கின்றனவாம். ஓம் என்னும் பிரணவம் சமஸ்தபதமாய் அகண்டாகாரமாயும், வியக்தபதமாய் சகண்டமாயுமிருக்கிற ஆகாரங்களையுடையதாம்.

சகண்ட பிரணவத்திலுள்ள அகார, உகார, மகார, நாதமெனு நான்கில் சுழுத்தியவத்தையையுடைய சீவர்களுக்கு தத்பதஸ்தராய், மகாரவாச்சியராயிருக்கிறவர் சங்கிருஷ்ணரென்றும், ஸ்வப்னவஸ்தையையுடைய சீவர்களுக்கு தத்பதஸ்

தராய் உகாராவாச்சியராயிருக்கிறவர் பிரத்யும்னரென்றும், சாக்கிராவஸ்தையையுடைய சீவர்களுக்கு தத்பதஸ்தராய் அமாத்திரையென்னு நாதத்துக்கு வாச்சியராயிருக்கிறவர் அநிருத்தரென்றும், சாக்கிர சொப்பன சுழுத்தியவத்தைகளில்லாதவராய் துரியாவஸ்தையுடைய சீவர்களுக்கு தத்பதஸ்தராய் அமாத்திரையென்று சொல்லப்படும் நாதத்துக்கு வாச்சியராயிருக்கிறவர் வியூக வாசுதேவரென்றும், துரியாதீதராய் சமஸ்தபதமாகிய அகண்ட பிரணவத்துக்கு வாச்சியமாயிருக்கிறவர் பாவாசுதேவரென்றும், அந்தப் பாவாசுதேவரை உபாசிப்பவர் பாமபதத்தை யடைவர்களென்றுஞ் சொல்லப்படும்.

அகாரம், சித்சொரூபரான பரமாத்மாவுக்கும், உகாரம்சித்சொரூபரான கிருபைக்கும் வாசகமாம். மகாரம், தாசனுன சீவாத்மாவுக்கு அறிகுறியாம். "அகாராஸ் சித்சொரூப ஸ்யவிஷ்ணோர் வாசக இஷ்யதே, மகார ஸ்து தயோர்த்தாபி இதிப் பிரணவலட்சணம்" என்று பிரணவாகாரமான ஓங்கார லக்ஷணம் கூறுகின்றனவாம்.

விசிஷ்டமாவது—சிதசித் பிரமமொன்றுமே தத்துவமென்பதாம். இது சித்துக்களோடு கூடிக்கொண்டிருக்கிறதாம். அத்வைதமாவது—சிதசித்துக்களைவிட்டு இரண்டாய் வேறுகப் பிரிந்திருக்கையாம். இது சித்து, அசித்து, பிரமம் என்னு மூன்றுதத்துவங்களாம். மூன்றும பிரகாரப் பிரகாரிக ஐக்கியத்தாலே ஒன்றென்னலாய் ஸ்வரூபபேதத்தாலே மூன்றுயிருக்கின்றனவென்று சொல்லப்படும். அத்வைதம்-சீவாத்வைதம், பரமாத்வைதமென் றிருவகையாம். சீவாத்வைதமாவது—பிரகார அத்வைதமாம். பரமாத்வைதமாவது—பிரகாரி அத்வைதமாம். பிரகாரமாவது சரீரமாம. பிரகாரியாவது - சரீரியாம். சித்தாவது--ஞானத்துக்கிருபபிடமான சேதனர்களான ஆத்மாக்களாம். அசித்தாவது — ஞானத்துக்கிருப்பிட மின்றிக்கே யிருக்கும் அசேதனமான பிரகிருதியாம். மாயையெனப்படும். அமலசொரூபனுன ஆத்மாவுக்கு சத்வ, ரசஸ், தமசென்னுங் குணுஸ்ரியமான அசித் சம்பந்தத்தாலே அவித்தையாதி கர்மவாசனுருசிகள் வுண்டாயினவாம்.

அவித்தையாவது—அஞ்ஞானம. அது ஞானானுதயம், அந்யதாஞானம், விபரீதஞானரூபங்களாலநேகவிதமாயுமிருக்கின்றதென்க.

கர்மமாவது—கரணத்திரயத்தாலே பண்ணப்பட்டதாய் புண்ணிய பாபாத்மகமான கிரியாவிசேஷமாம். வாசனையாவது—முன்புசெய்துப் போந்தவற்றிலே மீளவு மூளுகைக் குறுப்பான ஸமஸ்காரமாம். ருசியாவது—ரசாந்தரத்தாலு மீட்கவொண்ணாதபடி ஒன்றிலே செல்லும் விருப்பமாம். ஆத்மாவினுடைய கர்த்திருத்வம் ஈஸ்வராதீனமென்க. ஆன்மாக்கள் அவ்வேவாபதார்த்தங்களிலுண்டான ஞானேச்சா பிரயத்னங்களை யுடையவர்களாய்க் கொண்டு பிரவர்த்தியா நிற்பர்களாம். பரமாத்மா ஆத்மாக்களுடைய பூர்வவாசனரூபமான விதி நிஷேதபிரவர்த்தியிலே அநுமதியையும், அநாதரத்தையு முடையவராய்க் கொண்டு, விஹிதங்களிலே அநுக்கிரகத்தையும், நிஷித்தங்களிலே நிக்ரகத்தையும், புண்ணியத்துக்குப் பலமான சுகத்தையும், பாபத்துக்குப் பலமான துக்கத்தையும் ஆத்மாக்களுக்குக் கொடாநிற்குமென்க.

## சாயுச்சியமே மோக்ஷமென்றது.

சாலோ, சாமீப, சாருப்பிய, சாயுச்சியமென்னும், பதவிகளில் சரியை, கிரியை, யோகமெனு மூன்றை யநுஷ்டிக்கிறவர்கள் சாலோக, சாமீப, சாரூப்பியப் பதவிகளை யடைவர்களாம். சாயுச்சியமே மோட்சமாம். அதற்குள்ளே சாலோகாதிகளெல்லா மந்தர்பூதமாகையா லங்கொருவர்க்கும் வைஷம்யமில்லையாம். பரமபதத்திலே சென்றால் வரும் சாயுச்சியமே மோட்சமென்றதெனப்படும்.

## யஞ்ஞான தபோதியாதிகளால் பிரயோஜனமில்லையென்பது.

அஷ்டாங்கயோகங்க ளோடே கூடின யஞ்ஞ, தான, தபோ தியான, சந்தியாவந்தன, பஞ்சமகாயக்கிய, அக்னிஹோத்ர, தீர்த்த யாத்திராதியும், சாஸ்திராப்பியாச சமாராதன, தர்ப்பணாதி ரூப கர்மயோகத்தையுஞ்செய்து அல்பஸ்திரத்வங்களான போகங்களையடைவது பிரயோஜனமில்லையென்

பணைதயும், சொஸ்வரூபம, பரஸ்வரூபங்களை யறியவொட்டா மல் மறைபபது மாயையாகையா லதற்குடன்படாமல் நாம் தேகமன்று, தேகாநுபந்திகளான தாரா புத்திராதிகளு நம் முடையதன்று, பகவத்சேஷபூதராய் பாதந்திரா யிருப்ப வர்களென்பதையுமறிந்து, முத்தனென்கிற திருநாமத்தை யடைந்து சாயுச்சியத்தைப் பெற்று சதானந்தனு யிருக்கும் படியான மஹாபலத்தைப் பெறுவதே நலமெனப்படும்.

### தத்துவஞானம் பிறந்துச் சீவிக்கும்போதறிய வேண்டிய விஷயங்களாவன.

தத்துவஞானம் பிறந்துச் சீவிக்கும்போதறிய வேண்டிய விஷயங்கள் சொஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம, உபாயஸ்வரூபம, விரோதிஸ்வரூபங்களைந்தெனப்படும். சொஸ்வரூபம - ஆத்மஸ்வரூபமாம். இது நித்யர், முக்கர், பக்தர், கேவலர், முமூட்சுக்களெனவைந்தாம். பரஸ்வரூபம்- பரத்துவம், வியூகம், விபவம, அந்தர்யாமித்வம், அச்சாவதாரம் மெனவைந்தாம். புருஷார்த்தஸ்வரூபம் - புருஷார்த்தம், அர்த்தம், காமம, ஆதமாநுபவம், பகவாதா னுபவ மென வைந்தாம. உபாயஸ்வரூபம் - கர்மம், கியாநம், பக்தி, பிரபக்தி, ஆசாரியாபிமான மெனவைந்தாம் விரோதிஸ்வரூபம்- சுகஸ்வரூபவிரோதி, பரஸ்வரூபவிரோதி, புருஷார்த்தஸ்வரூபவிரோதி, உபாயஸ்வரூபவிரோதி, பிராப்யவிரோதியென ஐந்தாம்.

ஆன்மதத்துவ மிருபத்திமூனு. யிருபத்தைந்தாந் தத்துவம் ஆன்மா, யிருபத்தாறாந் தத்துவம் ஈஸ்வரனும். தத்துவ தோறறமுதலிய 31, 32-வது பக்கங்களிலிருப்பதையுஞ் சேர்த்துக்கொள்க.

## வேதாந்தமார்க்கம்.

வேதாந்த மார்க்கபந்த முக்திவிவகாரங்களாவன.

ஆன்மதரிசனத்தை வேதாந்தநூல்கள் அத்தியாரோபம் அபவாதமென்னு மிரண்டு யுக்திகளைக்கொண்டு பந்தமோட்சங்களின் பாகுபாடுகளுடன் அறிவிக்குமாம். அத்தியாரோபமாவது—பழுதையிற் பாம்பும், கட்டையிற் கள்வனும், கான

விற் சல்றும், கிளிஞ்சலில் வெள்ளியுந் தோன்றுவதுபோல கற்பிதமாகப பிரமத்தினிடத்தில் செக சீவ பரந் தோன்றிய தெனப்படுட.

அபவாதமாவது—கற்பிதமாகப் பிரமத்தினிடத்திற் றோன் றிய அந்த செக, சீவ, பரத்தைத் தனது ரூபமாக வின்றி லொன்றுண்டான பிரகாரம் முறையாக வடக்கிச் சுத்தபிர மத்தைத் தரிசிப்பதென்பதாம். தத்துவங்களின் பாகுபா டாகிய அத்தியாரோபமே பந்தமாம். இது தன்னை யுபாதித் திரயத்தி லொன்ருகக் காண்பதாம். தத்துவங்களின் வொன் றற்கொன்றுள்ள பேதந்தெரிகிறதே முத்தியாம் இது தன்னை ஞானபிரகாசமாகக் காண்டலாம்.

### பிரமகைவல்லியமடையு மார்க்கம்.

வேதமுடிவாகிய வுபநிடதத்தில் பிரமகைவல்லிய சமாதி யிலிருந் தடைவதற்கு மேலானமார்க்கம மாயாரூபம், மாயா தரிசனம், மாயாசுத்தியென்றும், சீவரூபம், சீவதரிசனம், சீவசுத்தி யென்றும், பிரமரூபம், பிரமதரிசனமென்றும், தேக கைவல்லியம், விதேககைவல்லியமென்றும, பத்துகாரியங்க ளாகச் சொல்லப்படும்.

மாயாரூபமாவது —சர்வபிரபஞ்சங்களுமுண்டாய் விளங்கி ரம்மியமாய் நாமரூபமாய் விளங்குதலைக் காண்கை.

மாயாதரிசனமாவது—அந்த நாமரூபமாகிய விரண்டும் மாயையெனக் காண்கை.

மாயாசுத்தியாவது —அதனுடைய அதிட்டானத்தைக் காண்கை. அதிட்டனமாவது - ஞப்தி, அறிவு.

சீவரூபமாவது—மாயாரூபத்தைக் காண்க வோரறிவுண் டெனக் காண்கை. சீவதரிசனமாவது—அவ்வறிவு தானெ னக் காண்கை. சீவசுத்தியாவது—அவ்வறிவின் அதிட்டா னத்தைக் காண்கை.

பிரமரூபமாவது—மாயாரூபத்துக்கும், சீவரூபத்துக்கும் அதிட்டானம் பிரமமெனக் காண்கை. பிரமதரிசனமாவது— மாயையுஞ் சீவனும் பிரமமாகத்தானே காண்கை.

தேககைவல்லியமாவது—பிரபூமாகத் தானே காண்கிற போதமுநீங்கி ஆனந்தமயமாய் நிற்கையாம்.

விதேககைவல்லியமாவது — பிரமானந்தாதீத்த்தையடைகையாம்.

இந்த தசகாரியமும் அநுபவப்பட்டு பிரம கைவல்லியமடையில் பந்தமுத்தி விவகாரஞ் சொப்பனம்போலக் கண்டு மேல்சநநத்துக்கு வித்தாகிய ஆசையும் பயமுமொழியுமாம். தான் சர்வானந்தத்திற்கும் அதிட்டான்மாகிய பிரமானந்த மயமாகையால் ஆசையும், தற்சொரூபமாகிய பிரமாநந்தத் தைத்தவிர பிரத்யக்கு வேறொன்றுமில்லாததாகையால் பயமுமொழியுமாம்.

**சத்தி, மாயை, தத்துவங்கள் தோற்றமுதலியன.**

சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தமென்னு மிலக்கணங்களையுடைய சுயம்பிரகாசமாகிய பரவஸ்து வின்கணின்று, பின்னைசத்தியும், அந்த பின்னைசத்தியினின்று மாயையுந் தோன்றுமாம். அந்தமாயை ஊர்த்தமாயை அதோமாயையென் றிருவகைத்தாம். அதில் ஊர்த்தமாயையினின்றும், பாதத்துவமும், பாதத்துவத்தினின்றும் வியோமமும், அந்த வியோமத்தினின்று காலபாமும், தோன்றுமாம். அதோ மாயையினின்று புருடனும் அந்தப் புருடனில் மூலப்பிரகிருதியும், அந்த மூலப்பிரகிருதியினின்று புத்தியும், அந்தப் புத்தியினின்று அகங்காரமும், சத்துவ ரசஸ் தமசென்னு முக்குணங்களும் வுண்டாய் அந்த முக்குணங்களில் ஒவ்வொன்றும் சத்துவ ரசஸ் தம சாக மும்மூன்று பொன்பதுகுணங்களாய் விரியா நிற்குமாம். சத்துவத்தில் சத்துவம் பிரதானமான போது அதிற் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை ரக்ஷிக்கையினலே விஷ்ணுவென்றும், சத்துவத்தில் ரஜஸ்பிரதானமான போது அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை சிருஷ்டிக்கையினலே பிரமாவென்றும், சத்துவத்தில் தமசு பிரதான மானபோது அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் செகத்தை உபசம் மரிக்கையினலே உருத்திரனென்றும், பெயராய்நிற்பாாம்.

இப்சசில் சத்துவம் பிரதானமானபோது அதில் பிரதிபிம் பித்தசிதாபாசன் தத்துவநிஷ்டனென்றும், இரச்சில் இரசஸ் பிரதானமானபோது அதிற் பிரதிவிம்பித்த சிதாபாசன் கர்ம நிஷ்டாபரனென்றும், இரசசில் தமஸ் பிரதானமானபோது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் சோம்பல் நித்திரை மயக்க மாகிய வினைகளையுடையவனென்றுஞ் சொல்லப்படும். தமோ குணத்தில் ஆவரணம் விட்சேபமெனு மிரண்டுசத்திகளும், அபஞ்சீகிருத பஞ்சதன்மாத்திரைகளான சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கெந்த, மெனு மைந்தும், சூட்சுமசரீரங்களும், பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய மெனுமைந்தும், தூலசரீரப்பிரபஞ்சங்களுந் தோன்றினவாம். தன்மாத்திரைகளுக்கு அபஞ்சீ கிருத பூதங்களென்றும், சூக்குமபூதங்களென்றும், முக்குணங்களென்றும் பெயராம்.

## பஞ்சீகரணமென்பது.

ஒரு பூதஸ்வரூபத்தை யிரண்டுபங்காக்கி, ஒருபாதி யந்த பூதமாகவேயிருக்க நின்றபாதி ஒவ்வொன்றை நான்குநான் காகச்செய்து அந்த நான்கிலும் அந்நியோந்நியம் வியாபித் திருப்பதாம. அபஞ்சீகிருதபூதமாகிய தன்மாத்திரைகளான சத்த, ஸ்பரிச, ரூப. ரச, கந்தமெனு மைந்தையு மிரண்டு கூறாக்கி யதாவது பத்துபங்குசெய்து அவற்றிலொருகூற்றில் ஒவ்வொன்றை நன்னான்காக்கித் தன்னப்சமல்லாத நான் கொடுநான்கையுங்கூட்ட தூலபூதங்களான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமெனு மைந்துமுண்டாயினவாம். தூல பூதங்களினின்றும் தூலசரீரங்களும், அண்டமும், புவன மும், போகங்களுந் தோன்றினவாம். "தாக்கு மிவ்வுயிர்க் குத் தூலதனுவும் போகமுமுண்டாக்க, காக்கு மிவ்வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான்றனே" என்று கைவல்லியநவ நீதத்தறிக.

## ஆவரணசத்தி விட்சேபசத்தியென்பது.

ஆவரணசத்தியாவது — ஆவரணம் அஞ்ஞானமெனுமிரண்டும் அசுத்த மாயாசம்பந்தமாம். ஆவரணமெனினும் பஞ் சகோசமெனினுமொக்கும். இருளைப்போல்மறைப்பது.

ஆவரணமாவது—மறைப்பு. இது சீவர்களுக்குச் சரீரத்திரயமாகிய சிதாபாசன், சாட்சி, சைதன்னியமென்னு மூன்றின் ஒன்றற்கொன்றுள்ள பேதந்தெரியவொட்டாமல் மறைத்து, தத்துவங்களை யொருமைப்பாடாகச் சீவர்கள் நானென்றபிமானிக்கச்செய்வதென்ற தென்க. முத்தியிற் சேர்க்கவொட்டாமல் ஆவரணம் கெடுக்குமாம். "கொழுத்தவாவரணமுத்தி கூடாமற் கெடுத்ததேதே" என்று கைவ-ந-நீ-ம்.

விட்சேபசத்தியாவது விட்சேபம், பரோட்சஞானமெனு மிரண்டும், சுத்த மாயாசம்பந்தமாம். விட்சேபம் சநநத்துக் காரணமானாலும், சிரவணாதி முயர்ச்சிகளால் வீடடைபவர்களுக்கு மிகவுஞ் சகாயமாம். விட்சேபம் - அறிவு, அறிதற்குதவியாம். இது பிறவி முதற்றுணைக் காரணமாயிருந்து முன்னர் விடயஞானத்தை விளக்கி, பின்னர் ஞானசாதனமாயிருந்து சொரூபஞானத்தை விளக்கிவைத்து அதுவுட அந்தச் சொரூபத்திலேயே லயமாகி விடுமென்க. "தோற்றமாஞ் சத்திதானே துன்பமாம் பவமானாலும், ஆற்றலான் முத்திசேர் வார்க்கனுகூல சகாயமாமே" என்று கைவீ. ந. நீ.தத்திற்காண்க.

தத்துவவகைகளாவன—தன்மாத்திரைகளான அபஞ்சீகிருதபூதங்கள் 5, பஞ்சீகரணபூதங்கள் 5, அந்தக்கரணங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, புருடன் 1, காலபரம் 1, வியோமம் 1, ஆக தத்துவங்கள் யிருபத்தெட்டின்மேல் மாயை 1, பின்னுசத்தி 1, இந்த மொத்த முப்பது தத்துவங்களே பந்தமாம். இதுவே உபக்கிரமம். இந்த முப்பதுதத்துவங்களு நீங்கி சுயம் பிரகாசத்தையடைதலே முத்தியாம். இதுவே உபசங்காரமாம்.

அந்தக்கரணங்களு மவற்றின் காரியப்பாடுகளும்.

பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்துக் கொவ்வொரு மாத்திரையாக வெடுத்துவைத்தது அந்தக்கரணங்களாம். ஆகாயத்தின் விருத்தி உள்ளமும், வாயுவின் விருத்தி மனமும், தேயுவின் விருத்திபுத்தியும், அப்புவின் விருத்தி சித்தமும், பிருதிவியின் விருத்தி அகங்காரமுமாக அந்

க்கரணங்களென்றெனப்படும். உள்ளமாவது — உச்சியில் ன்று சகலத்தையுமறிந்து தன்னைக்கண்டு மகிழ்ந்திருக்கு ரம். மனமானது—நினைக்குமாம். இது சலனம், அசல மன் றிருவகைத்தாம். சலனமானது—உள்ளேநின்று சங் ற்ப விகற்பங்களைப் பண்ணுவதாம். அசலமாவது—புற யே இந்திரியத் துவாரங்களிளூடேலே இந்திரியங்களைச் சம்பந் ம்பண்ணி நிற்பதாம். ஆன்மா இந்திரியங்களோடேகூடி நிற் னும், மனமானது வொருவிடயத்திலே பொருந்தாத கால து இந்திரியங்கள் சேடிக்கமாட்டாதாதலின் மனமே பிர ானமென்றதென்க. புத்தியாவது—விசாரிக்கிறதாம். ரூப 'பதங்களை விளக்குவதாம். சித்தமாவது—சிந்திக்கிறதாம். புகங்காரமாவது—கொண்டெழுப்புகிறதாம். புத்தியும் அகங் ாரமுமொன்றென்று சொல்லப்போகாதென்க. 12, 13, பக் ங்களிற் கண்டதையுமறிக.

அந்தக்கரணங்களின் அதிதேவதைகளாவன.

உள்ளமாவது — அறிவு. மனதுக்கு சந்திரனும், புத் திக்கு க்ஷேத்ரஞ்ஞனுகிய புத்திநாமசத்தியும், சித்தத்துக்கு சனும், அகங்காரத்துக்கு உருத்திரனும் அதிதேவதைக ளென்று மதங்கம் சுப்ரபேதமென்னும் ஆகமங்கள் கூறுகின் னவாம். காணம் - உதவி.

உ – ம். "என்று மறிகரண மினிநான்கு கேளா யியம்புமனம் புத்தியாங் காரஞ்சித்தம்" என்றும், "மனமான செய்நினைக்கும் புத்தி விசாரிக்கு மகங்காரங் கொண்டெழுப்பும், சித்தமொன்றிவிக் நம்" என்றும் உடலறிவிளக்கம். "அறிவாவ துள்ளமாகாயஞ் சித்தமா யுச்சியினின்றே" என்று ஞானனுபவசாரம்.

ஞானேந்திரியங்களு மவற்றின் காரியப்பாடுகளும்.

பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்துக் கொவ் வொருமாத்திரையாக தனித்தனியே யெடுத்துவைத்தது ஞா னேந்திரியங்களாம். ஆகாசத்தினம்சம் சோத்திரமும், வாயுவி னம்சம் தொக்குவும், தேயுவினம்சம் சட்சுவும், அப்புவினம் சம் சிங்ஙுவையும், பிருதிவியினம்சம் ஆக்ராணமுமாக ஞா னேந்திரியங்க ளென்றெனப்படும். சோத்திரமாவது—தேகத் தில் ஆகாசமாகிய காதினிடமாகநின்று சத்தத்தையறியுமாம்.

தொக்காவது—தேகத்தில் சூக்குமமாக வாயுவினிடமாகநின்று தன்னைப் பொருந்தின சீதோஷ்ணாதி பரிசங்களை யறியுமாம். சட்சாவது—தேகத்தில் கண்குவளையில் சூட்சுமபூத அக்கினியினிடமாக நின்று ரூபத்தை யறியுமாம். சிங்குவையாவது—சரீரத்தில் சூட்சுமபூத அப்புவினிடமாகநின்று ரசங்களைக் கிரகிக்குமாம். ஆக்ராணமாவது—தேகத்தில் நாசிநுனியிலிருந்து கந்தத்தையறியுமாம். அதாவது நாசிகையில் சூட்சுமபூதபிருதிவியை யாசரித்து வாயுசத்தத்தினாலே வந்தடைந்த சுகந்தம் துர்கந்தமாகிய விஷயங்களைக் கிரகிக்குமாம். ஞானேந்திரியங்களைந்தும் ஆன்மாவினுடைய ஞானக்கிரியாசத்தி வியாபாரத்துக்கு அபிவியஞ்சகமெனப்படும். அபிவியஞ்சகம், பிரகாசிக்கிறதென்க. அந்தக்கரணங்களில் ஐந்து மாத்திரையுமொன்றாய்க் கூடினதைக்கொண்டு ஐந்திந்திரியங்களினாலு மைந்துவிடயங்களையு மறியுமாம். ஐந்துமொன்றோடொன்று கூடாதபடியினாலே ஒன்று மற்றொன்றை யறியாதாம். அந்தக்கரணங்களும் ஞானேந்திரியங்களும் ஞானசாதனங்களெனப்படும். ஞானேந்திரியம், புத்தி யிந்திரியம், பொறி, கரணம், கந்தம் என்பன ஒருபொருட்கிளவி. ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்களுக்குச் சகாயமாம். கன்மேந்திரியங்கள் ஞானேந்திரியங்களுக்குச் சகாயமல்லவாம். "நற்செவி தொக்குக் கண்ணூறு நாசியைந்தினையு நல்லோர், புத்தி யிந்திரியமென்று புகன்றனர்" என்றிருப்பதையறிக.

ஞானேந்திரியங்களின் அதிதேவதைகளாவன:—சோத்திரத்துக் கதிதேவதை திக்குரூபி, தெய்வம் சிவனும். தொக்குக் கதிதேவதை வாயுபகவான், அதிதெய்வம் மயேஸ்வரனும். சட்சுவுக் கதிதேவதை சூரியனும். சிங்குவைக் கதிதெய்வம் வருணன். ஆக்ராணத்துக் கதிதேவதை அசுவனி, அதிதெய்வம் பிரகஸ்பதி பகவானும்.

## கன்மேந்திரியங்களு மவற்றின் தொழில் முதலியனவும்.

பஞ்சபூதங்களின் இராசசாம்சத்திலே பூதத்துக் கொவ்வொருமாத்திரையாக வெடுத்துத் தனித்தனியே வைத்தது

வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தமென்னும் கன்மேந்திரியங்களைந்தாம். அவற்றின் தொழில்கள் முறையே வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தமெனவைந்தாம். வாக்கு வசனிக்கும், பாதம் கமனிக்கும், பாணியிடுதலு மேற்றலுஞ் செய்யும், பாயுரு மலசலாதிகளை விசர்க்கஞ்செய்யும், உபத்தம் ஆனந்திக்குமாம். வாக்காவது - சொல். பாதமாவது - கால். பாணியாவது - கை. பாயுருவாவது - குதம், அபானம். உபத்தமாவது - குறியென்க. "வாக்கொடு பாதம் பாணி பாயுவோடு பத்தமைந்து" என்று சி - ஞா - சி.

கன்மேந்திரியங்களின் அதிதேவதைகளாவன:— வாக்குக்கதிதேவதை சரஸ்வதி. பாதத்துக் கதிதேவதை இந்திரன். பாணிக்கதிதேவதை மால். பாயுருவுக் கதிதேவதை மிருத்யுவு. உபத்தத்துக் கதிதேவதை பிரமாவாம். வாக்குகள், சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென நான்கு வகையாகுமாம்.

## தன்மாத்திரைகளு மவற்றின் காரியபாடுகளும்.

சூக்குமபூதங்களாகிய சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமெனு மைந்தும் தன்மாத்திரைகளாம். இவை ஞானேந்திரியங்களைந்துக்கும் அறிவையுண்டாக்குவனவாம். ஞானேந்திரியவிஷயங்களெனவும் படும். சத்தமானது—ஆகாசத்திலும் செவியிலும், ஸ்பரிசமானது—வாயுவிலும் உடம்பிலும், ரூபமாவது—தேயுவிலும் கண்ணிலும, ரசமாவது—நீரிலும், நாவிலும், கெந்தமாவது—பிருதிவியிலும், நாசியிலுமாக நிற்பதென்க. "ஓசைநற் பரிசரூப விரத கந்தங்களென்று, பேசுமாத்திரைகளைந்தும் பிறக்கும் பூதாதிகத்தில்" என்றும், "சத்த நற்பரிச ரூப விரத கந்தங்களைந்தும், வைத்தனர் விடயமாக" என்றும், சி - ஞா - சி.

## தூலபூதங்கள், அவற்றின்வடிவு, நிறம், அதிதேவதைமுதலியன.

தமோம்சமாயிருக்கிற தூலபூதங்கள் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமென வைந்து. இவற்றில் பிருதிவி கடினம் நாற்சதுரம் வெண்மை பொன்மை கருமை புகை நிறம், கடகடாதியான வொலி, அதிதெய்வம் பிரமா.

அப்பு - வெண்ணிறம், அர்த்தசந்திரவடிவு, சலசலவென்றியான வொலி, அதிதெய்வம் விஷ்ணு. தேயு செம்மைநிறம், முக்கோணவடிவு, தமதமவொலி, அதிதெய்வம் உருத்திரன். வாயு - கருத்தநிறம், அறுகோணவடிவு, சசசசவொலி, அதிதெய்வம் மயேஸ்வரன். இது உற்பூதஸ்பரிசம், அநூர்பூதரூபமுமாயிருக்கும், யோகீஸ்வரரா லறியப்படுவதாம். ஆகாசம், ஆகமாந்தரங்களில் தூமவர்ணங் கூறப்படுமாம், எதிரொலியாம், அதிதெய்வம் சதாசிவனும். பஞ்சபூத வியல்புகள் 11 - வது பக்கத்திலிருப்பதையறிக.

### தூலபூதபௌதீக காரியபபாடுமுதலியன.

பிருதிவியில - மயிர், தோல், நரம்பு, எலும்பு, தசைஎனுமைந்தும்; அப்புவில் - மூடுநீர், உதிரம, சுக்கிலம், மூளை, மச்சை, எனுமைந்தும்; தேயுவில் - ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல் எனுமைந்தும்; வாயுவில் - ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல், எனுமைந்தும்; ஆகாசத்தில் - காமம், குரோதம், லோபம், மோகம், மதம் எனுமைந்துமுண்டாகுமாம்.

பஞ்சீகரண அன்னியோன்னிய வியாபகமாவது - பிருதிவியில பிருதிவிகூடில் அஸ்தி. அப்புகூடில் மாம்சம, தேயு சர்மம, வாயு நரமபு, ஆகாசம ரோமம், ஆக 5 - ம பிருதிவியின்கூறும். அப்புவில் அப்புகூடில மூத்திரம், பிருதிவி உமிநீர், அக்கினி வியர்வை, வாயு உதிரம, ஆகாசம சுக்கிலம், ஆக 5 - ம அப்புவின்கூறும். தேயுவில் தேயுகூடில் நித்திரை, பிருதிவி பசி, அப்பு தாகம், வாயு ஆலசியம், ஆகாசம் சங்கமம், ஆக 5 - ம் தேயுவின்கூறும். வாயுவில் வாயுகூடில் ஓடல், பிருதிவி படுத்தல், அப்பு நடத்தல், தேயு உட்கார்த்தல், ஆகாசம் தாண்டல், ஆக 5 - ம் வாயுவின்கூறும். ஆகாயத்தில் ஆகாயம்கூடில் மோகம், பிருதிவி விராகம், அப்பு துவேஷம், தேயு பயம், வாயு லச்சை, ஆக 5 - ம் ஆகாயத்தின்கூறும். ஆக இருபத்தைந்தும்கூடி சீவனுக்கு ஸ்தூலதேகமானதாம். சீவனுக்கிதுவே சாக்கிராவத்தையாம். அபிமானி விஸ்வனும். ஸ்தூலபௌதீகமாம். பஞ்சீகரணம் பக்கம் 120 லறிக.

## தத்துவநியதி.

தத்துவங்களை நியதிகளையுமிடத்து அறுசுவையைப் புசித்து, இனிப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கைப்பு, அறிவதுபோல போதத்தை முன்னிடாமல் தத்துவங்களிற் பொருந்தி வொவ்வொன்றையும் விசாரித்தறிவதெனப்படும். அஃதெப்படி யென்னில்? தேகம் உயிரா? சவமாய்ச் சிதைகின்ற தேகம் பஞ்சபூதங்களின் கூறாகையாலும், தேகமென்றறிவது வேறாயிருப்பதாலும், தேகந்தனக்கன்னியமாயிருப்பதாலும் தேகம் உயிரல்ல. பஞ்சபூதங்களும் இந்திரியங்களும் உயிரா? என்கண் நன்றாய் விளங்குகிறதென்றும், என்காது நன்றாய் கேழ்க்கிறதென்றும், கேழ்க்கப்படவில்லையென்றுஞ் சொல்லப்படுவதாலும், இந்திரியங்களொன்றறிந்ததொன்றறியாதாகையாலும், ஒன்று மற்றொன்றை யறியாதாகையாலும், அவைகள் பஞ்சபூதங்களின் கூறாகையாலும், இந்திரியங்களையும் பஞ்சபூதங்களையு மறிவது வேறாயிருப்பதாலும் அவைகளுயிரல்ல. பிராணவாயு உயிரா? வெறுந்துருத்தி காற்றை வீசுவதுபோல் மூக்கினால் வீசும் ரசோகுணவிகாரமாகிய பிராணவாயுவை விட்டும், அடக்கியும், கும்பித்தும் தன்வசம்பண்ணிக்கொண்டு மூச்சு போக்குவரவு செய்வது வேறாயிருப்பதாலும், என் பிராணனென்றறிவதாலும், உறக்கத்தின்கணறிவின்றி நிற்றலானும். பிராணவாயுவுயிரல்ல சூன்னியம் உயிரா? அவ்வாறு சொல்லுவதொன்றுண்டாகையாலும், சூன்னியமென்றறியப்பட்டது வேறாயிருப்பதாலும், சூன்னியம் உயிரல்ல. அந்தக்கரணங்கள் உயிரா? என்மனம், என்புத்தி, என்சித்தம், என் அகங்காரமென்று சொல்லப்படுவதாலும், மனம் வாயுவின் கூறாயும், புத்தி தேயுவின்கூறாயும், சித்தம் அப்புவின்கூறாயும், அகங்காரம், பிருதிவியின்கூறாயுமிருப்பதாலும் கண்ணுக்குக் காட்டுகிற விளக்குபோலவைகள் வுயிருக்குஅந்தரங்கக்கருவிகளாயிருப்பதாலும் அந்தக்கரணங்க ளுயிரல்ல. பிரமம் உயிரா? சாக்கிராதி யைந் தவத்தைப்பட்டு ஆன்மா அறிதலால் பிரமமுயிரல்ல. அனைத்துங்கூடிய சமுதாயம் உயிரா? அவை தத்துவங்களுக் குள்பட்டதாகையாலும், பஞ்சகோசங்கள்

சத்தாதிகுணங்களின் விருத்திவிகாரங்களாயிருக்கையாலும், ஆன்மா தத்துவங்களுக்குள்பட்டதல்லாதாகையாலும் ஆன்மா துரியாதீதத்தினுண்மையாதலாலும் அனைத்துங்கூடிய சமுதாயம் உயிரல்ல. இவையெல்லாம் உயிரல்லனவாகில் உயிராவதேதென்னில்? கண்காட்சிகளையறிவதுபோலக் கருவிகளையெல்லாம் 'இது விது'வென்று பகுத்தறிந்து அவையெல்லாந் தானன்றென்று நீங்கியவற்றின் முடிவிலே நின்ற அறிவாகிய நீயே ஆன்மசைதன்னியமென்றதென்க. அறிவே நீயாதலால் நீயே சாட்சியாம்.

சாக்கிரத்திற் றூலதேகத்தைத் தனுவாகப்பெற்று வுலகபோகத்தை நுகர்வதும், சொப்பனத்தில் சூட்சுமதேகத்தைத் தனுவாகப்பெற்று அங்குள்ள சுகத்தை நுகர்வதும், சுழுத்தியில் காரணதேகத்தைத் தனுவாகப்பெற்று அங்குள்ள கேவலசுகத்தை யநுபவிப்பதும் அறிவுக்கேயன்றி வுபாதிக்கனறென்க. நீ வுன்னாலறியப்படும் பொருளாமென்னில் உலகமாம். உலகஞ் சடமாதலால் நீயல்ல. நீ வுன்னாலறியப்படாப் பொருளாமென்னில் சூன்னியமாம். சூன்னியம் சடமாதலின் நீயல்லை. இவ்விரண்டையு மறிவதறிவாகலின் அதுவே நீயாமென்க.

உ-ம். "அறிவு சூக்கும தென்னில் வேறு புறத்தவை கண்டிலஞ், செறிவு தானுட லத்தே னிற்சவ மானபோதுடற் றேறுமோ, குறிகொ ளாதுடல் வாயு வானவை கூடிடாமையி லென்னிநீ, பிறித ராதுயிர் நிற்கு ஞான முறக்க மென்பிற வாததே" என்றும், "எனதென்ற மாட்டி லெனதலா தென்னு, தனதலா தன்கைகா லாக்கை—எனதென்று, மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா, ணுன்னறிவை வேறுமுணர்" என்றும் சி-ஞா-போதத்திலும், "உணர்வன கரண மென்னி னொன்றையொன் றுணரா வெவ்வே, றணைதருஞ் செயல்க ளொன்கு மறிந்தவை யடக்கி யான்மா" என்றும், "வறிந்திடும் பிராணன் றன்னை வடக்கியும் விட்டு மான்மா" என்றும் சி-ஞா-சியிலும், "மண்ணாதி சத்தாதி வாக்குமனமாதி, கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற—வுண்மைதனை, யணுவென்றே யுணர்த்துஞ் சார்பினையுங் கண்ட, யுனையறிவென் றுள்ளே யுணர்" என்று ஒழுவிலொடுக்கத்திலும், "பன்னரிய வுடன்மூன்றுங் கோச மைந்தும் பகுத்தறியு முயர்சாட்சி நீயாங் காணே"

என்று பரமானந்ததீபத்திலும், "பிறிவதெப் படியென் றக்கால் பிணமாடு முடனு மென்னு, மறிவினைக் கொல்லல் வேண்டு மைம் பூத விகாரமன்றோ, வெறியதோர் துருத்தி மூச்சு விடுவது போல மூக்கா, லெறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம்" என்று கைவ, ந, நீதத்திலுங்காண்க.

அறிவையன்றி யாதுமின்றென்பது.

அநாத்மாவாகிய தேகமே யாத்மாவென்றது நாஸ்திக மும், அதை மறுக்க சீவனெனக்குறிப்பித்தது ஆஸ்திகமும், இவ்வாஸ்திகத்தை மறுக்க அறிவென்றது வேதாந்தமுமாம். அநாத்மாவைத்தவிர வேறே யாத்மாவென்றவனார்? மயக்கமா யுள்ள சொப்பனத்திற் றானாகவந்து முளைத்தவனெவன்? மய க்கமாயுள்ள சொப்பனமும், காணப்படாத சுழுத்தியையுங் கண்டவனெவன்? இவையனைத்தினையும் ஒழுங்காகச்சேர் த்து சாக்கிரத்திற் சிந்திக்கிற வறிவாவதியாவது? இவை யெல்லா மாராய்ந்து பார்க்கில் இவற்றையெல்லா முணருந் தேகி யொருவனுளனெனத் தோன்றுகிறதல்லவா? அந்தத் தேகியெனல் அறிவாகிற பொருளென விளங்கும். இதுவே பிரத்யேக ஆத்மஸ்வரூபமாம்.

அறிவே பரமும், உயிருமாம். அறிவைத்தவிர உயிர் பர மிரண்டுமில்லையென்க. ஆராய்வதன்முன் உலகம் நாமரூபமா கவும், பின்னான்றாகவும் காண்டல் யாது? நாமரூபம் பாழி லும், பாழ்நாமரூபத்திலும் காணாததேது? இங்ஙனம் நிற்ப தும் நின்றுணர்வதும் அறிவேயாகலின் அறிவையன்றி யாது மின்றெனப் பெறும். தத்துவங்களையெல்லாம் விடுவித்து முடிவில்நின்ற அருளையும் பரையையுங்கடந்து அதன்மேற் றோன்றும் ஆனந்தத்தையு மெதிரிடாமல் அதனுள்ளதீதப் பட்டிருந்ததே தன்னையறியா வறிவெனப்படும். அவ்வறிவா யிருந்தோன் மீட்டும் நானென்று பிறிபடுவனும். நாவானது தன்பெயரை நாவென்று கூறினும் அப்பெயர்க்குரிய நாமம் வேறின்றித் தானாயிருந்த அந்நாவைப்போலும் நீ நான்என்று சொன்மாத்திரமேயன்றித் தானுமெதிரு மதற்குண்டாகா தென்றும், எல்லாம் அறிவுமயமாயிருக்குமெனவும்படும்.

### அறிவு மாயைக்கப்பாற்பட்ட வியாபகமென்பது.

வைசேடிகன மனமுதலிய தத்துவங்கள் வந்து கூடிய காலத்து அறிவுஉண்டாகுமென்றும், பரிணாமவாதி ஆன்மா வுக்குச் சுதந்தரமா யறிவில்லை இறைவனுணர்த்தவுணருமென் றும், அறிவில்லாத கன்மயோகிகள் ஆன்மா வுடலினிட த்தி லிருக்குமென்றும், பாஞ்சராத்திரி ஆன்மா பரமாணுவா யிருக்குமென்றும். சமணன் உடம்பு முழுதிலும் ஆன்மா வியாபித்திருக்குமென்றும், மாயாவாதி போக்குவரவின்றி யெங்கும் பரிபூரணமா யிருக்குமென்றுஞ் சொல்லுவர்களாம். அறிவு அசுத்தமாயைக்கும், சுத்தமாயைக்கு மப்பாற்பட்ட வியாபகமென்றும், மாயையில் தோற்றப்பட்ட விருபத்தினாலு தத்துவங்களுக்கும் பிரகிருதி வேறுதலா லதற்குக் காரண மென்றும், அந்தமாயைக்கு மேலான இருபத்தைந்தை ஆன் மாவென் றெண்ணப்பட்டதென்றுஞ் சித்தாந்தமானதென்க.

### காண்பான் காட்சியற்றவிடத்து வேதாந்த முத்தியும் சித்தாந்த முத்தியுஞ் சரியேயாமென்பது.

தத்துவங்கணீங்கி யவற்றின் முடிவில் நின்ற அருளையும் பரையையுந் துவித நாட்டமின்றிக் கழன்று நின்றால் தற் போதமும் ஆணவ வாசனையாகிய சார்பு மொழியுமாம். அப் படி யொழிந்தவிடத்திற்கும் அதீதத்திற்கும் இடையாகிய சந்தியில் ஞானானந்த முண்டாகுமாம். வெளியிலடங்கிய காற்றுதான் வேறொரு பொருளாய்த் தோற்றாது வெளியே யானதுபோலும், அவ்வெளியில் நின்றசைந்தால் அதனை விடத் தானொருபொருளாகக் காற்றென்பதுபோலும், தற் போதம் அருளிலடங்கியும் விரிந்தும் நின்ற பழக்கமதைப் பார்த்தறிய வேண்டுமென்றதென்க. போதமடங்கில் அரு ளாம். அது அசையில் ஆன்மாவாம். அதனைச் சிறிதுந் தோற்றாதடக்க வேண்டுமாம். தற்போதங்கெட்டு ஆனந்தா தீதப்பட்டால் அதற்குமேல் வேறு நிட்டை யில்லையாம். ஆநந்தம் மேலிட்டபோது பிரபஞ்சமெல்லாம் ஆனந்தமயமா கத் தோன்றுமாம். முத்திக்கண் ஒன்றென்று மிரண்டென் றுங் கூறக் கூடாதென்றதென்கவென்பதாம். காண்பானும்

காட்சியு மற்றவிடத்து வேதாந்தமுத்தியுஞ் சித்தாந்தமுத்தி யுஞ் சரியையாமென்க.

உ - ம். "போதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும், போதம் பதைத்தளவே பொய்யாகும்—ஈது, விழித்திமைப்பா னின்றால் வெளியசைந்தாற் காற்றாம், பழக்கமதைச் சாட்சியைப் போற்பார்" என்றும், "வேதாந்தம் போலிருக்கும் வேதாந்தஞ் சித்தாந்தம், நாதாந்த போதம் நழுவினர்க்கு—நேதி, தனைக்கழன்று தற்போதம் சார்பழியுஞ் சந்திக்க, வுனக் கறிவா னந்த முதிக்கும்" என்றும், "தத்துவா தீதத் திமிர்ப்படங் கிற்றற்செலவும், அத்தின வாத்து மசையாத—சுத்தத்தை, ஒன்றென்று நீசற் றுளதாவை யாதலினு, லன்றென்ற தென்றே யறி" என்றும் ஒழுவிலொடுக்கத்திலும், "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதி யானென்னு மக்கோ ஞானவெரியால் வெதுப்பி நிமிர்த்துத், தான் செவ்வே நின்றிடவத் தத்துவந் தோன்றுனே ரேதனையளித்து முன்னிற்கும் வினையொளித் திட்டோ" என்று சி - ஞா - சியிலும் "இளைப்பிணை யியக்க நீக்கி யிருந்துமுன் னிமையைக் கூட்டி, யளப்பிலைம் புலனடக்கி யன்பவர் கண்ணே வைத்து, துளக்கமில் சிந்தைசெய்து தோன்ற லுஞ் சுடர்விட் டாங்கே, விளக்கினை விழியிற் காண்பார் மெய்ம்மை யைக் காண்கிற் பாரே" என்று திருவாய்மொழியிலுங் காண்க.

## அவத்தைகளாவன.

அவத்தைகளாவன — மாயாகாரியமாகிய கருவிக்கூட்டங்களின் சேட்டைகளாம். மதுபானஞ்செய்தவன் குணத்தை மாறுபடுத்தி மயக்குதல்போல ஞானகுணத்தை மாறுபடுத்துவதாம். அதன் மயமாகாமல் வேறுபிரிந்து நின்றால் மயக்காதென்க. அவத்தைகள் காரணாவத்தை யென்றும், காரியாவத்தையென்று மிருவகைத்தாம். காரணாவத்தையாவது கேவலம், சகலம், சுத்தமென மூவகையாம். காரியாவத்தைகளை ஆன்மாக்கள் பொருந்துதற்குக் காரணமானதென்க. கேவலாவத்தையாவது — சங்காரகாலத்திற் றனதிச்சா ஞானக்கிரியைகள் விளங்காமல் மலமேலீட்டினால் மறைப்புண்டு கிடத்தலாம். சகலாவத்தையாவது—தனுகரணாதிகளோடு முதல்வன் ஆன்மாக்கட்குப் போகங்களைப் புசிப்பிப்பதாம். சுத்தாவத்தையாவது — பஞ்சமலங்களும் கருவிகளு நீங்கிப் பிறவியொழிந்து சுத்தனாய்ச் சிவத்தோ

டிறண்டறக் கலந்து விளங்குவதாம். இந்தச் சுத்தாவத்தையே சிவன் முத்திபேதத்தினாலே 'சதேகை' 'விதேகை' யென் றிருவகைத்தாம். சதேகையாவது—சிவன் முத்தித் தன்மையினிட்டையைப் பொருந்தி யிருத்தலாம். விதேகை யாவது—முத்தியையடைந்த காலத்திற் சிவானந்தானுபூதியைத் தியானித்திருத்தலாம்.

தத்துவங்களைநீங்கித் தன்னையறிந்து அருளைத் தரிசித்து தற்போதமடங்கி பரையேதாகி ஞேயத்தழுந்தினோகி யிருப்பது சுத்தாவத்தை யநுபவமென்றதென்க.

உ - ம். "தற்கேவல முத்தித் தானே தனிமையாம், பிற்பாற் சகலங் கலாதி பிரழ்வதாம், தப்பாற் பரிசுத்தங் கேவலஞ் சாக்கிரத், தப்பாற் புரிய வதிசுத்தமாமே" என்று சுவாயம்புவத்தறிக.

அவத்தாத்தானங்களு மவற்றிலடங்குந் தத்துவங்களும்

சாக்கிராவத்தைத் தானம்லலாடம். அதிலடங்குந் தத்துவங்கள் ஞானகன்மேந்திரியங்கள் கO, வாயுக்கள் கO, தன்மாத்திரைகள் ரு, கன்மேந்திரியவிஷயங்கள் ரு, அந்தக்கரணம் ச, புருடன் க, ஆக ௩ரு, வெனப்படும். சொப்பனாவத்தைத் தானம் கண்டம். அதிலடங்குந் தத்துவங்கள் ஞானகன்மேந்திரியங்கள் கO, வாயுக்கள் கO, அந்தக்கரணம் ச, புருடன் க, ஆக உரு-ஆம் சுழுத்தியவத்தைத தானம் இருதயம், அதிலடங்குந் தத்துவங்கள் பிராணவாயு க, சித்தம் க, புருடன் க, ஆக மூன்றும். துரியாவத்தைத் தானம், நாபி, அதன்தத்துவம் பிராணவாயுவும் புருடனுமாக இரண்டாம். அட்சரம் ஓங்காரம் நிர்மலாத்மாவென்று பெயராம். துரியாதீதத்துக்குத் தானம் மூலத்தானம் ஒருகருவியுமில்லாமல் அறிவே பிரகாசமாயவத்தையின்றி நின்றமையால் ரூபமில்லை ஓர் பிரளயமெனப்படுமென்க. காரியாவத்தைகளாகிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமெனுமைந்தும் முறையே சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமெனும் பஞ்சகிருத்தியங்களெனப்படுமாம்.

உ - ம். "சாக்கிரமுப் பத்தைந்து நுதலினிற் கனவுதன்னி, லாக்கிய விருபத்தைந்து களத்தினிற் சுழுனைமூன்று, நீக்கிய வித

யந்தன்னிற் றுரியத்தி லிரண்டுநாபி, நோக்கிய துரியாதீத நுவலின் மூலதது மயான்றே" என்று சி - ஞா - சி.

## ஞானேபதேசங்கள்.

தத்துவஸ்வரூபம். அஷ்டவக்கிரகரிஷி பார்க்கவ முநீந்திரனுக் கருளியது.

தன்னை மனேகரமான சுத்த சைதன்னியமென்று கேட்டும் பிறக்கிறது மிறக்கிறதுமான பந்தத்தினுலே மனுஷிய பாவத்தை யடைகிற 'மனுஷியன் தன்னுடைய அக்கியானந் தெரியாமல் காமவசமாய் சலனமடைந்து விருதாவில் கெட்டுப்போகிறுன். மந்தபுத்தியுடையவன் தத்துவங் கேட்டும் விபரீதனென்கிற சிநேகிதனுடன்கூடி யென்னேரமுங் காமமே யிச்சிப்பன், நல்ல புத்தியுரான். ஆத்மக்கியானியானவன் தன்னுடைய தேகத்தை அன்னியமாகப் பார்த்து நிந்தைகளிலே சந்தோஷமும் கலக்கமுமில்லா திருப்பனும்.

ஆத்மா வொருவனே சகலபூதங்களினு மிருக்கிறுன். சகலபூதங்களு மவனிடத்திலேயே யிருக்கிறது. இப்படிக்கிருந்தும் அறிவில்லாத பேயன்தான் தான்வேறென் றெண்ணுவனும். சுகதுக்கங்களை மனதிலடக்கித் தான் கர்த்தாவுமல்ல போககர்த்தாவுமல்ல வென்கிற அமுர்தத்தையுண்டு வொன்றும் நினையாமல் நிச்சலனுய் நின்றுல் பந்தங்கள் விடுபட்டு சுகமும் சாந்தியுமடைவன். எப்போதும் இச்சையில்லாதவனுயும், சாந்தனுயும், சொப்பிரகாசனுயும், தியானசொரூபனுயு மிருக்கிறவனுக்குச் சமாதியிலிருப்பேனென்கிறதே பந்தமல்லவோ? நானென்கிறதே பந்தமாம். எப்பொழுது நானென்கிறதில்லையோ அப்போதே மோட்சமாம். முத்தியிலிச்சையுண்டானுல் விடயங்களிலே யிச்சைகளை விடவேண்டுமாம். திரிசியத்தினுல் சித்தமுண்டாகில் அப்பொழுதே பந்தமுண்டாம். திரிசியத்தில் மனமில்லாவிடில் அப்போ முத்தியுண்டாம். தண்ணியிலே அலை, நுரை, குமுளி பின்னமாக வுண்டானதுபோல பரமாத்மாவிலே இந்தப்பிரபஞ்சம் பின்னமாகவே யுண்டாகிறது. நூலைவிட பிடவையில்லாததுபோல விசாரிக்குமளவில் சின்மாத்திரத்தைவிடப் பிரபஞ்சமில்லை

யாம். கரும்புரசத்தினாலே வுண்டான சர்க்கரை, கரும்பே யானாப்போலே, பூரண போத சொரூபமாயிருக்கிற தன்னாலே பிரபஞ்சம் வுண்டாக்கப்பட்டது. மண்ணிலே கடம் போலவும், பொன்னிலே பூஷணம்போலவும், சலத்திலே யலைபோலவும், தன்னிடத்திலே யுண்டான சகத்து தன்னிடத்திலேயே யடங்குகின்றன. நானானந்தனானபடியினாலே யெந்தப்படிக்கு சகத்து விளங்கினாலும் நானே விளங்குகிறேன். உதயாஸ்தமனமில்லாமல் சகல சகத்து நாசமானாலும் பிரமாதி ஸ்தம்பபரியந்தம் நானாயிருக்கிற யெனக்கு நானே நமஸ்காரம் பண்ணுவேன். தேககாரியமாயிருந்தும் போக்குவருத்தில்லாம லிந்தசகத்தை நானொருவனே வியாபித்திருக்கிற யெனக்கு நானே நமஸ்காரம் பண்ணுவேன். அறிகிறது, அறியப்படாதது அறிகிறவன் யிந்தமூன்றும் சாதகதிருஷ்டியினால் பார்க்கச்சே யில்லை. அக்கியானத்தினாலே வுண்டாகிறதெல்லாம நிறைஞ்ச னானபடியினாலே நானாகவே யிருந்தேன்.

சாகாமையே சத்தியமென் றறியவேணும். நிராகாரஞ் சத்தியமென்று நிச்சயம் பண்ணவேண்டும் கண்ணாடியிலே நிழல் காண்பித்தாப்போலவும்; அந்தச்சாயை கண்ணாடிக்காதாரமானாற்போலவும், சரீரத்திலே எங்கும் பரமேஸ்வரனிருந்தும் அதிலகப்படான். பஞ்சபூதங்கள் தானல்லவென்றும இந்திரியங்களால் தானறியபபட்டவனல்லவென்றும், தேகசாட்சியாய் சொல்லுக்ககப்படாத சிற்ரூபமாகத் தன்னை யறியவேணுமாம். ஆத்மா ஒருவனே நாசமில்லாதவனென்றறிந்து பிரமக்கியான தீரமுண்டானால் அர்த்தாபேக்ஷையே யுண்டாகும். கிளிஞ்சலானது ஞானமில்லாதவனுக்கு வெள்ளியென்று ஆசைதோன்றினாப்போலத் தன்னுடைய அக்கியானத்தினாலே விஷயங்களில் விருதாபிரமை தோணிற்று.

நான் ஞானமாத்திரம், உபாதியெனக்கு அஞ்ஞானத்தாலுண்டாகிறதென்று பண்ணும் விசாரமே யெனக்கு நிர்விகற்பமாச்சுது. யெதார்த்தத்திலேயில்லாத யிந்த விசுவமெல்லாம் யென்னிடத்திற்றானே யிருக்கிறது. மகாசமுத்திரம்

போமே யிருக்கிற வென்னிடத்திலிந்த சகத்து சுத்தியில் ரசிதம்போலத் தோற்றுகிறது. ஆகாயத்தை மேகமறைத் தாப்போல இந்தசகத்து என்னை மூடிற்றென்றெண்ணும் விக்யானயுக்தனுக்கு விடுகிறது கிரகிக்கிறது லயம் என்னு மூன்றுமில்லையாம் நான் கர்த்தாவென்கிற ஆங்காரசர்ப்பத் துக்கு ஏன் பயப்படவேணும். நான் யெதற்குங் கர்த்தா வல்லவென்கிற அமுர்தத்தைப் பானம்பண்ணி சுகமாயிருக்க வேணுமென்க.

காலமும் வயதும், தொந்தமும், தனக்கெப்படி யுண் டாகுமென்று சித்தியடைந்த தத்துவக்கியானி யெதேச்சை யாகவே சஞ்சரிப்பனும். தைரியமுண்டானவன் போகத்தை யுந் துக்கத்தையுமடைந்தாலும் தன்னை வேறாகவே யறிந்து சந்தோஷமும் கோபமுமில்லாதவனு யிருப்பனும். மனதி லிச்சையில்லாமல் ஞானமிர்தத்திலே திருப்தியடைந்த மகாத் மாவுக்குச் சரியாக வொருவருமில்லையாம். இந்த விசுவ மெல்லா மறிந்த மகாத்மா யெப்படி நடந்தாலும் நிர்மலஆகா யத்தைப புகை தொடாததுபோல அந்த மகாத்மாவுக்கு நிஷேதம் சற்றுமில்லையாம். பிரமக்கியானியை புண்ணிய பாவங்கள் தொடரமாட்டாதென்க.

## சீவேஸ்வர சிருட்டிகளென்றது.

திரிமூர்த்திசொரூபமான சிருட்டிகள் சீவர்களனைவர்க் கும் வீடடைதற்குச் சாதனமாம் உலகத்தில் யாவர்க்கும் பொதுவான தாவரசங்கமங்களனைத்தும் ஈஸ்வரசிருஷ்டிக ளாம். உலகத்திற் பொதுவான ஈஸ்வரசிருஷ்டி நசிக்கில் யாதொருயிர்க்கும் ஜநநம் நீங்காவாம். நானென்னு மகந்தை யபிமானங்கள் ஆசைகள் துவேஷங்கள் காமக்குரோத லோப மோக மதமாச்சிரியமென்னும் பகைகளெல்லாம் சீவன் செய லாலுண்டானதேயன்றி ஈசனால் வந்ததல்லவாம். ஆசைமுத லிய சீவசிருட்டியிறக்கின் கொடிய சநநம் நசிக்குமாம். சீவ சிருஷ்டியை ஈசனால் வந்ததென்ற அறிவிலிகள் நரகத்தை யடைவர்களாம். பிதா புத்திரர்களை தக்கபடி நேசிப்பதும் கோபிப்பதும்போல ஈஸ்வரன் சற்சனருக்கு இன்பமும் துற்

சன்ருக்கு ஏன்பழும் செய்வனும். சீவர்கள் சுகப்படுமாறு செய்யுமந்த சிட்சையும் ஈஸ்வரனது கிருபையேயாம்.

உ – ம். "செகந்தனிற் பொதுமீசனுர் சிருஷ்டிகள் சராசரப் பொருளெல்லாம் அகந்தையா மபிமானங்கள் கோபங்க ளாசைக ளிவையெல்லாம் நிகழ்ந்த சீவனுர் சிருஷ்டிகளாகுங் காணிமலனுர் செயலன்றே" என்றும், "தாவராதிகண சித்திடி லொருவர்க்கும் சநநங்கணசியாவாம், கோபமாதிகண சித்திடிற்பந்தமாம் கொடும்பிற விகள் போகும்" என்றும் கைவல்லியநவநீதத்தறிக.

**தன்னைத் தானென்றறியுமட்டும் சநநமரணமிருக்குமென்பது.**

அறிவின்மையாலுண்டான பவரோகம் அறிவுவுதயமாய்த் தன்னைத் தானென்றறிந்தாராயுமட்டு மிருக்குமென்றதெனப் படும். தன்னையென்றது நசிப்பதான தேகத்தில் நசியா மற்ருய்ச் சேடித்திருக்கிற பிரத்யேக ஆத்மாவென்னுங் கூடத்தனும். தானென்றது போதமாகிய அறிவாம். தன்னைத் தன்னுலறிவதன்றி மற்ருென்ரு லறியப்படாதென்றும், அறிவினுற் றன்னை யாராய்ந்தவிடத்தன்றி தானெனவுணர் தல் கூடாதென்றும், தேகம் இன்னதென்றும், தேகியின்னை யினென்று முணர்பவனெவனே அவனே தன்னைத் தானென் றறிந்தவனுகுமென்றும், எவன் பிரமமாகிய தன்னை மறந் தானே அவனெவ்வித பதவிகளினு நிலையின்றிச் சுழற்காற்றி லகப்பட்ட செத்தைபோல அழிவற்ற காலச்சக்கரமென்னு மபக்கத்தில் மாருது பிறந்திறந்து திரிந்துக்கொண்டே யிருப்பனென்றும், தன்னையும் தனக்காதாரமாகிய பிரமத்தி னிலைமையினையும் வேதமகாவாக்கிய உபதேசப்படி தரிசிப்பா னுயின் பின்னர் அப்பிரமமே தானுய்த்தானே அப்பிரமமாய் விளங்கப்படுவனென்றும் அங்ஙனம் விளங்கு மனுபவத்திற்கு உதயாஸ்தமனமின்மையால் சநநமரணமின்றென்றுங் கூறப் படும். தன்னைமறந்தது அஞ்ஞானமாம் பக்கம் 21-பார்க்க.

**நானென்பதை யுள்ளவாறறிந்தா லல்லது பேதமறுதென்பது.**

நானென்னுதா ருலகி லொருவருமில்லை, அதையறியப் புகு வாருமில்லை, ஆராய்ந்தாராய்ந்து பொருளல்லவற்றைப் பொரு ளாகக் கண்டதனுல் துவிதபேதமறுதற் கிடமில்லை, அங்ஙன

மறுமனுடல்நழுவில் தேகமே நானென முன்போல வரும். ஆண் பெண் பேதமுண்டாய் மோகாதிக்கிடமாய்ப் பந்தம் பலப்படுமாம். உடலையன்றி நானெனற்குப பொருளறியார் உடல்நழுவில் யெதைநா னென்றறிவர். உடலொழிந்ததென் னில்? உடல் நானாகவேண்டும். ஆன்மா உடலன்றே; அது சித்து, போகதாகமுடையது. உடல்நீங்குவதால் போகதாகம் ஆன்மாவுக் கொழியவில்லை யாதலால் போகதாக மொழியு மளவு மோருடல் யேதேனும் வேண்டுமல்லவா? அங்ஙனம் வுடலெடுத்தா லெங்ஙனம் பிறவியு மல்லலுமகலும் ஆதலின் நானென்பதை யுள்ளவாறுதீர ஆராய்ந்தறிந்தா லல்லது பேத மறுமெதன்கவென்பதாம்.

நானென்பது நீயென்னும் ஞானமாகிய வித்தையும், பிரம மென்பது ஆனந்தமுமாம். நானெனற்குச் சுயம் வடிவம் மெய்யுணர்வு. இதைமறந்த அறிவே மூலப்பிரகிருதி, இதை மறந்த அறிவே மகதத்துவம், இதைமறந்த அறிவே அகங் காரதத்துவம், இதைமறந்த அறிவே குணத்திரியம், இதை மறந்த அறிவே ஈசன், இதைமறந்த அறிவே சீவன், இதை மறந்த அறிவே சூக்குமபூதம், இதைமறந்த அறிவே சூக் கும பவுதிகமான மனது, இதைமறந்த அறிவே ஸ்தூலபூதம், இதைமறந்த அறிவே ஸ்தூலபவுதிகமான தூலதேகம், இதை மறந்த அறிவே எழுவகைத் தோற்றத்திலொன்று, இன்னு மிதனினுங்கீழாகக் கிடக்கும் பேதங்களுமுண்டென்க. கீழா கச் சென்றிழிவு முணர்வின் கடையை ஆரோபமெனவும், மேலாகச் சென்றேறு முணர்வின முடிவை அபவாதமென வுங் கூறப்படும். இந்த அத்தியாரோப அபவாதமென்னு மிரண்டுயுக்திகளாலேயே பந்தமோட்சங்களின் பாகுபாடறிய வேண்டுமென்க. அத்தியாரோபம் அபவாதம் 123, 124-ம் பக்கங்களிற்காண்க.

### பிரமமேகூடத்தன் கூடத்தனே பிரமமென்பது.

நானென்னும் பொருள் யாதோ அது பிறந்ததுண்டா யிருக்குமானு லல்லவா பின்னர் சாவதுமுண்டாயிருக்கலாம். பிறந்ததே யில்லையென்னும் பொருளாகிய பிரமமென்பதும் நானேயாம். பிறந்தது நானல்லவாயின் பிரமமென்று சொல்

லப்பட்ட யுந்த நானே உற்பத்தியும் லயமுமில்லாத பிரம மாகிய கூடத்தனே நானென்கவென்பதாம். ஞானமே பிரம மென்னும், பிரஞ்ஞானம் பிரமமெனும், இருக்குவேதவாக்கிய மும், நான் பிரமமென்னும், அகம்பிரமாஸ்மியெனும், யசுர் வேதவாக்கியமும்; நான் பிரமமாகிறேன் என்னும், தத்வமசி அது நீயானுயெனும், சாமவேதவாக்கியமும்; நான் ஆத்மா பிரமம் என்னும், அயம் ஆத்மா பிரமமெனும், அதர்வண வேதவாக்கியமும்; கூறுகின்றபடி இதுவே அதுவாய், அது வேயிதுவாயிருக்குமெனப்படும்.

நானென்றது புத்தியென்று சொல்லில் அப்புத்தியும் சுழுத்தியவத்தையாகிய மயக்கத்திலிறக்குமே. அங்ஙன மிறவாதிருக்குமாயின் யானே நானென்று பூரணமாக விளங் கிய மெய்ஞ்ஞானமாமென்றதென்க.

உ - ம். "தன்னையறிய தனக்கொரு தீங்கில்லை, தன்னை யறியாமற் றனே கெடுகிறான், தன்னையறியு மறிவை யறிந்தபின் தன்னை யர்ச்சிக்கத் தானிருந் தானே" என்றும், "அறிந்தே னிக் காயத்தை அறிவுதனைக் கண்டு அறிந்தே னென்னுள்ளே ஆடும் திருக்கூற்றை, அறிந்தவ ரறிந்தா லறிவறியாரே" என்றும், "அறிவு சிவமா யறிய வல்லார்க்கு அறிவினுள்ளே யானந்தமாமே" என் றும், "பொன்னை மறைத்தது பொன்னணி பூஷணம் பொன்னில் மறைந்தது பொன்னணி பூஷணம்," என்றும் திருமந்திரத்திலும், "தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல், பின்னையத் தலைவன் றனுய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்" என்றும், "இன் னது தேகம் தேகியிவனென வுணர்வன் யாவன், அன்னவன் றன் னைத் தானென் றறிந்தவனாகும்" என்றும், "பிறந்ததுண் டானு லன்றோ பிறகுசா வதுதா னுண்டாம், பிறந்ததே யில்லையென்னும் பிரமமு மதுவுநானே, பிறந்தது நானன்றகில் பிரமமென் றந்த நானே,பிறந்தது மிறந்ததற்ற பிரமமா நானே நானே"என்றும் கைவ- ந - நீ - லும், "நானெனவும் நீயெனவு மிருதன்மை நாடாமல் நடுவே சும்மாய்த் தான மருநிலை யிதுவே சத்தியம் சத்தியம்" என்றும், தாயுமானஸ்வாமிகள் பாடலிலுங் காண்க.

## சுருதிமுடிவிற் சொல்லும் உபதேசசித்தாத்தம் தற்சோருபமுத்தி.

சாதன சதுட்டய முதிர்ந்த சீடன் பவரோகநீங்க சற் குருவை யடைந்து ஸ்வாமிநானூர்? இந்த நானுவாகிய வுலக

மேதா? இது யாரையுடையது? எனக்குச் சநநப்ரணம் வந்தவாறேது? இது யாதினல் நீங்கும், இவற்றை யநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று கேட்டு, என்னை யுள்ளபடி யறிவித்தால் மற்ற நாளுமடியேனே விண்ணப்பஞ் செய்வேனென்ன, ஆசாரியானுக்கிரகஞ் செய்கிறதாவது.

இங்கே யுண்டாய் விளங்குகிறதெல்லாம் நீயேயென்று ஆசாரியானுக்கிரகஞ்செய்ய, சீடன் ஸ்வாமி யிங்கேயுண்டாய் விளங்குகிறதெல்லாம் நானெப்படி யாவேனென்ருன். உனக்கிங்கே யென்ன பிரகாசியா நிற்கிறதென்ருர்? சீடன் ஸ்வாமி நாமரூபமயமாகிய வுலகந் தோன்றுகிறதென்ருன். அந்த வுலக மெவ்விடத்தினின்று தோன்றுகிறதென்ன? சீடன் ஸ்வாமி யென்னுடைய நினைவிலே நின்று தோன்றுகிறதென்ருன். நினைவு வேறுவுலகம் வேறுயென்று கேழ்க்க, சீடன் வுலகமெதிரிட்டுக் காண்கையினலே வேறுதானென்ருன். ஆனல் வுலகமாகிய நாமரூபத்தைநீக்கி நினைவைப் பாரென்ருர்? ஸ்வாமி அப்படி பார்க்குமிடத்து நினைவைக் காணேனென்ருன். நினைவைநீக்கி நாமரூபத்தைப் பாரென்ருர்? ஸ்வாமி அப்படி பார்க்குமிடத்து நாமரூபத்தைக் காணேனென்ருன். ஆனல் நாமரூபமாகிய வுலகமேதென்ருர்? ஸ்வாமி யென்னுடைய நினைவுதானே யென்ருன். அந்நினைவு யெங்கேநின்று தோன்றுகிறதென்ன? ஸ்வாமி என்னிடத்தினின்றே தோன்றுகிறதென்ருன். ஆனல் நினைவுவேறு நீவேருவென்ருர். ஸ்வாமியென் நினைவாகையினலே வேறின்றி நான்தானே யென்ருன். நினைவைநீக்கி யுன்னைப் பாரென்ன? ஸ்வாமி யான் பிரகாசியா நிற்கின்றேன் என்ருன். ஆனல் நீ நினைவு எப்படியாவாயென்ன? ஸ்வாமி நினைவு யென்னைவிட வேறுதானே என்ருன். ஆனல் உன்னைப்பிரித்து நினைவைப் பாரென்ருர்? ஸ்வாமி அப்படி பார்க்குமிடத்து நினைவைக்காணேன் என்ருன், "ஆனல் நினைவு யாதோவென்ன? ஸ்வாமி நினைவானது நானுமல்ல என்னைவிட வேறுமல்ல என்ருன். அஃதெப்படியென்ன? ஸ்வாமி தங்கத்தினிடத்திலே பணியானது தங்கமுமல்லாமல் தங்கத்தைவிட வேறுமல்லாமல் கற்பிக்கப்பட்டதுபோல நினைவு யென்னிடத்திலேயே

கறபிதமெ ன்றான். ஆனால் இந்நினைவு வேறோ சத்தையோ வென்ன? ஸ்வாமி அதற்கு வேறே சத்தையில்லை யென்னு டைய சத்தையே தோன்றி விளங்காநிற்கிறதென்றான். ஆனால் இங்கே தோன்றுவதெல்லாம் யாதென்ன? ஸ்வாமி யிங்கே தோன்றி விளங்குவதெல்லாம் நானேயென்றான். இங்கே யுண்டாய் விளங்குகிறதெல்லாம் நீயேயென்று முன்னம் சொன்னதற்கு ஐயந் தோன்றிற்றே யிப்போது எல்லாம் நானேயென்று சொன்னது திரிவோ நன்றாய்ப் பாரென்றார்? ஸ்வாமி முதலில் திரிவினாலேயெல்லாம் நானெப்படியாவே னென்று கேட்டேன் இப்போது ஸ்வாமிகடாக்ஷத்தினாலே திரிவுபண்ணிக்கொண்டிருந்த அஞ்ஞான விருள்போய்த் துணிவாகத்தானே யெல்லாம் நானேயெனக் கண்டேனென் றான். உன்னைக் கண்டவிடத்தில் அநுபவமெப்படியென றார். ஸ்வாமி அகண்டாகாரமயமாய்ச் சுட்டிறந்த சுகாதீத மாய்ப் பழுதையினிடத்திற் பாம்பொருக்காலு மில்லாதது போல உலகம், உயிர், பரம் (சக, சீவ, பரம்) என்பதொருக் காலுமில்லாததாய்ப் பிரகாசியா நிற்கிறதென்றான். இதுவே தற்சொரூபமுத்தி, தேகபதன பரியந்தம் கலக்கமில்லாமல் நிற்கக்கடவதென் றனுக்கிரகம்பண்ணி முத்தியானதற்குக் குறி மற்றநாலும் வுன்னனுபவப்படிக்குச் சொல்லென்றார்? ஸ்வாமி நானாவிதமாகிய பிரபஞ்சமென்னிடத்திலேயே ஆரோ பிதம், அது சங்கற்பத்தையுடையது, அந்தப் பிரபஞ்சமும் அதிட்டானமாகிய என்னைவிட வேறல்லவென்று காணுந் திரிவினாலே,எனக்குச் சநநமரணம்.எல்லாம் நானேயென்றறி யில் சநநமரணமில்லை. இப்படியே மற்றநாலும் ஸ்வாமிகள் கடாக்ஷத்தினாலே யெனக்கனுபவமாயிற்றென்றான். நம்மு டையவநுபவமும் சுருதி முடிவிற்சொல்லுவது மிதுவேயெ ன்று சொல்லி இதிற்கலக்கமின்றி வாழ்வாயாகவென் றாசீர் வதித்தாரென்றதென்க. சாதனங்களையுடைய தீவரபக்குவ னுக் கோரண்டு சோதித்து இந்த வுபதேசசித்தாந்தம் போதிக்கவேணுமென் றிருந்தாலும் அதிதீவரபக்குவனுக்கு பவரோகநிவர்த்தியின் பொருட்டுக்கணமேவுபதேசம்பண்ண வேண்டுமென்றதெனப்படும். (உபதேசசித்தாந்தக்கட்டளை.)



மகாமகோபாத்யாய. டாக்ட

அறிவேயானென்பது.

நினைவாகிய மனோசங்கற்பத்தினாலே இவ்வுலகமு மின்னு மிதைப்போல்வனவாகவும் விளங்காநின்ற அநேகவுலகங்க ளும், பதவிகளுமாகத் தோற்றுவதனைத்தினையும், வொவ்வொ ன்ருக நியதிகளைந்து நீங்கி முடிவில்நின்றதெதுவோ அதுவே, எங்கும் பரிபூரணமாக விளங்கும், யாதாகிய அறிவாம். எல்லா மாயும், அல்லவாயும் விளங்குவதறிவாதலால் சிற்பிரகாசத்தை யன்றி யாதொன்றுமில்லை யெனவும், அது வெனது ஸ்வரூப மெனவும், மனது சொப்பனக் காட்சியைப்போற் கற்பனு வடிவமெனவும் படும். சிற்பிரகாசமே யானென விளங்கலை மறவாது விவகரிக்கில் யாது நினைக்கினும யாதுசெய்யினும் அவற்ருற் சுவானுபவந் தடையாகாதாம். கண்டகனு, நித் திரைதெளிந்தபி னெப்படி பொய்யாகுமோ, அப்படியே தன் னை யுள்ளவாறு தரிசிக்கவே, எண்ணங்களும், கிரியைகளும், பொய்யாகவே முடியுமென்க. மனோகற்பிதமே வுலகமாம்.

உ - ம். "மனத்தினு லெண்ணித் தானே வந்ததிவ் வுலகமா கும்" என்றும், "சித்து நானிறைந்தோ னென்ற திடமறவா திருந் தால், எத்தனை யெண்ணினுலு மேதுசெய்தாலு மென்ன, அத்தனை யும் பொய்தானே" என்றும் கை - ந - நீம்.

வாசனுவிருத்திக ளடக்குமுபாயம்.

போதமாகிய அறிவை அரசனுக்கி, அவ்வரசனை தானுகி, புத்தி முதலிய அகக்கரண புறக்கரணங்க ளனைத்தினையும் அடிமைகளாக்கின் அவ்விருகரணங்களுந் தலையெடாதடங்கு மாம். அவஸ்தாத்ரயமும், விருத்தித்ரயமும் தனது ஞெப் திஸ்புரிப்பையன்றி வேறில்லையெனக் காணத் தானே தனது ஞெப்தியாகக் கரையுமாம். கரைந்தவாறிருக்கவே பரிபூரணு னந் தோதயமாகுமாம். 110-வதுபக்கத்திலிருப்பதையுமறிக.

உ - ம். "போதமா மிராசன் ருனுய்ப் புந்தியைப் புலன்களா கத், தாதரா யிருக்கப் பெற்ருற் சகலமு மடங்குந் தானே" என்று கைவ. ந - நீதத்திற்காண்க,

குருநாத னனுக்கிரகித்த தத்துவசோதனை வழித்தாகச் சென்று, பஞ்சகோசங்களையுங் கடந்து, அப்பாற் ருேன்றும்

பாழையுமெட் டழித்து, உள்ளத்தின்க ணெழுந்த பற்றுக்களை யும் அற்பவாசனைவிருத்தியையும்விட்டு, கூடத்தபிரமமென்னு நினைவையு மெல்ல நழுவவிட்டு, ஏகமாகப் பிரகாசித்து நின்ற பரிபூ ரண சைதன்னியத்தை யகக்கண்ணாற் றரிசித்ததாக வநு பவங் கூறப்பட்டிருக்கின்றதென்க. இதுவே சொப்பிரகாச மகிமையெனப்படும். "அத்துவித வஸ்துவைச் சொப்பிரகா சத்தனை யருமறை கண்முறசறைபவே" என்று தாயு மானஸ்வாமிகள் பாடலிலும், "பஞ்சகோசமுங் கடந்து பாழையுந்தள்ளி யுள்ளிற், கொஞ்சமா மிருப்பும்விட்டு கூட த்த பிரம்மமென்னு, நெஞ்சமு நழுவி யொன்றாய்நின்ற பூர ணத்தைக் கண்டான்" என்று கைவ. ந - நீதத்திலுமறிக.

## அறிவே ஞானமும், அஞ்ஞானமுமா மென்பது.

தன்னைமறந்த அறியாமையே அஞ்ஞானமும், தன்னை யுள்ளபடி காண்டலே ஞானமுமாம். தன்னைத்தான் காணாதன வும் சகசீவபரம், சத்தியமாம். தன்னைக்கண்டாலவை மித்தை அதாவது—பொய்யாம். காணுமை, காட்சி யாகிய விரண்டிற் தனக்குப் புடைபெயர்ச்சியாம். புடைபெயர்ச்சிக்கு வினை முதல் தானென்பதாம். தன்னையன்றி வினை நிகழ்தலும், நிகழ் தலையன்றி சத்தியமு மித்தையு மில்லையாம். இந்தவித்தை (ஞானம்) பிறவித்தவிர்ப்பதாம். ஈஸ்வரார்ப்பணஞ் செய்யும் புண்ணியமோ அதன்பலனை யனுபவிக்கப் பிறவியைத் தருவ தாம் "பிறப்பென்னும் பேதமை" என்று கூறியவற்றாற் காண்க. அஞ்ஞானத்தைக் கெடுப்பது மெய்ஞ்ஞானமே யன்றி கருமமன்றென்க. புண்ணிய பரிபாகத்தால் மனஞ் சுத்தமாம். அந்த சுத்தத்தால் விசாரணைக்கிடமாம். அந்த விசாரணையால் ஞானமுண்டாம். அந்தஞானத்தால் முத்தி யுண்டாமென்க. பிரத்தியட்சமாகக் கண்டறிந்தது ஞான மாம். இது விவேகஞானம், மெய். ஒருவர் சொன்னவண்ணங் கேட்டதனை பாவிப்பது பாவயோகம், இது கற்பனை, பொய்.

அஞ்ஞானம், தமசு, அதாவது இருட்டு, மோஹம், மகா மோஹம், தாமிச்சிரம் அதாவது அந்தகாரம், அந்தாமிச்சி ரம் அதாவது காடாந்தகாரம் என ஐவகைப்படுமாம்.

## சாதனசதுட்டயமுடையோர்க்கே ஞானமுண்டாமென்பது.

நித்தியா நித்தியவஸ்து விவேகம் அதாவது—தேகேந் திரியாதி சகல சகத்தும் அநித்தியமென்றும், பிரமமே நித் தியமென்றும், பிரமத்தின் காரியமான வைகுண்டாதிகள் நித்தியமென் றெண்ணுவது புத்திப் பிரமமேயொழிய வேற ல்லவென்று மறிவதாம். நித்தியம் பரமாணுரூபம், அநித் தியம் காரியரூபமாம். நித்தியப்பொருள் 11 - வது பக்கத் திற் காண்க. இது முதற்சாதனமெனப்படும்.

இகமுத்திரார்த்த பலபோக விராகம் அதாவது—இக லோக பரலோக போகங்களிரண்டும் அநித்தியமாயிருப்ப தால் அவைகளில் அற்பபுத்திசெய்து அவற்றை நிராசை பண்ணி வெறுப்பதாம். சமாதி சட்க சமபத்தியம் அதா வது—சமம, தமம், உபரதி (விடல்), திதிட்சை (சகித்தல்) சமாதானம், சிரத்தையென்னும் ஆறும். சமமாவது—மனது தன்னுட்டத்திலொருமைப்பாடாக நிலைத்திருப்பதாம். அகக் காணதண்டம் புரக்கரண தண்டமெனப்படும். தமமாவது— சித்தம் ஏகாக்கிரகமாயிருந்து சத்தாதிவிஷயங்களில் (தன் மாத்திரைகள்) இந்திரியங்கள் செல்லாதபடி நிருத்துகிறதாம். உபரதியாவது—சித்தசுத்திக்குச் சாதனமாகக்கண்ட நித்திய நைமித்தியாதி சகலகன்மங்களையும் விட்டொழிக்கிறதாம். திதிட்சையாவது—பிராரத்தகன்மத்தால் தாபதிரியங்கள் தன்னை வந்தடைந்தாலு மவைகளை யெண்ணுமல் பொருத் துக்கொள்வதாம சமாதானமாவது—வேதத்திற்சொல்லும் அருத்தமறிவதன்பொருட்டு சித்தத்தை நன்றாக நிறுத்து வதாம். சிரத்தையாவது—குரு, வேதாந்த வாக்கியங்களில் சத்தியபுத்தி யுண்டாயிருப்பதாம். இது மோட்ச சாதன மாம். முமூட்சத்துவமென்னு நான்காஞ் சாதனமாவது— எந்த விவேகியானவன் சத்திய வைராக்கிய வநுபவஞானத் தினலே சமுசாரபந்தத்தை விடவே னுமென் றெண்ணியிருக் கிறானே அவனே முமூட்சத்துவமென்னுஞ் சாதனமுடையவ னுவனும். ஐக்கியமுத்தியை விரும்பத்தக்க விச்சையுடையவ னென்க. இந்த முமூட்சத்துவ சாதனமே மூலகாரணமாம். இது தீவரம், மத்திமம், மந்தம், அதிமந்தம் யென நான்கு

வக்கைத்தார். இந்நான்கு சாதனமுடையோர்க்கே அறிவுண்டாகுமெனப்படும். பந்தம் - மூடம். முத்தி - தெளிவு. மூடத்தை அத்தியாரோபமெனவும், தெளிவை அபவாதமெனவும் படும். இவ்விரண்டியுக்திகளை வுபநிடதங்களனைத்துங் கூறுகின்றனவாம். சாதனமில்லாமல் யெதையுஞ் சாதிப்பவருலகிலொருவருமில்லையாமென்க. பந்தமுத்திவிவகாரம் 123-வது பக்கத்திற் சொல்லப்பட்டிருப்பதையறிக.

உ - ம். "சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகிலில்லை, யாதலா லிந்த நான்கை யடைந்தவர்க் கறிவுண்டாகும்" என்று கைவ - ந - நீதம்.

சமாதியடைதற்குச் சாதனமான ஞானபூமிகள் ஏழாம். அஞ்ஞானபூமிகளுமேழெனப்படும்.

அஞ்ஞானபூமிகளென்பன — சகசீவபர உற்பத்திக்குக்காரணமாகிய மகான்களால் கூறிய நாமங்களான வித்துனனவு, நனவு, மகாநனவு, நனுக்கனவு, கனவு, கனுநனவு, சுழுத்தி என்னும் ஏழாம். விரிவு 19 - வது பக்கத்திலறிக.

ஞானபூமிகளென்பன —சுபம் விரும்பல், விசாரமெய்தல், நல்ல மனஞ்சிறுகல், உண்மையிலே நிலைபெற்று நிற்றல், சங்கற்பமறல், பதார்த்தயெண்ண மறுத்திடல், துரிய துரியாதீதமெனவேழாம். விரிவு 17 - வது பக்கத்திலறிக.

ஞானயோகம் கன்மயோக மிரண்டும் மோட்சயேதுக்களென்பது 108 - வது பக்கத்திலும், உண்மையறியுஞ் சத்தியுணர்வுக்கேயன்றி தொழிலுகின்றென்பது 107 - வது பக்கத்திலும், கன்மகாண்டம் பூர்வபக்ஷமென்றது 112 - வது பக்கத்திலும், புண்ணிய பாவகன்மயாகாதிகளா லடையும் பயன், நின்மல ஞானமில்லாதார்க்கு சுகந நீங்காதென்பது, யஞ்ஞ, தான தபோதியாஞதிகளால் பிரயோஜனமில்லையென்பது 78 - முதல் 82 - வரையிலும் 122 - வது பக்கங்களிலுமிருப்பவைகளையுமறிக.

**சீவன் தாய்வயிற்றிற்றங்கித் தரணிமிசை வருவது.**

சீவன் தாய்வயிற்றிற்றங்கி சநிப்பதென்பது—கருவு தரித்ததுமுதல் 6 மாசங்களில் தலை கால் கைகள் வயிறு கண் மூக்குச்செவி முதலிய அவையவங்களும், பஞ்சவாயுக்களு

முண்டாய், 7-வது மாசத்தில் சீவன் குடிபுகுந்து 8-ல் தாய் புசிக்கும் அன்னரசத்தைக் கிரகித்து, 9-ல் பூர்வஜென்மவிருத் தாந்தங்களையுணர்ந்து, ஈஸ்வரத்தியானஞ் செய்துக்கொண் டிருந்து 10-வது மாசத்தில் பூமியிற் ஜெனிக்குமென்று சொல்லப்படும்.

உடலாகிய வுலகம் அசத்தியம், ஞானமாகிய அறிவே சத் தியமென்பதை 109-வதுபக்கத்திலும், ஞானத்துக்குத் தடை நீக்கம் 111-வது பக்கத்திலுங் காண்க.

## அவித்தையும் அவித்தாநாசமும்.

அவித்தையாவது—ஒன்றை வேறொன்றாக வுணர்தலாம். ஞானகுணத்தை மாறுபடுத்துவதாம். காரணசரீரமாம். சாக் கிர சொப்பன சுழுத்தியென்னு மவித்தைகளைக் கண்டவ னெவனோ, அவனே அறிவாகிற புருடனும். நனவாகத் தோற்றுகிற ஸ்மரணை நீங்கின் அக்கணமே கனவாம். கனவு நழுவில்அக்கணமே சுழுத்தியாம். அதாவது நனவு கனவு யிரண்டையுங் காணாதது சுழுத்தியென்க. நனவு, கனவு சுழுத்தியெனு மூன்றும் அவஸ்தாத்ரயம், காட்சித்ரயம், அபி மானத்ரயமாக யிருக்குமென்க. நினைவு நீங்கினதென்பது, வேடத்தை வேடதாரியாகக் கொள்வதாம். ராசாவந்தான் தோட்டிவந்தா னென்பதுபோலவாம். நனவிற் சுழுத்தியென் றது—தூங்காமற் றூங்குதலாம். "நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானான்" என்று கை-ந-நீதம். "தூங்கா மற் றூங்கி சுகம்பெறுவதெக்காலம்" என்றார் தாயுமானார்.

அவித்தாநாசமாவது—அவித்தையென்னும் காரணசரீரம் நீங்காவளவும் மனமாகிய சூக்குமசரீரம் கணக்கின்றி வர் தழியுமாம். காரண சரீர நசிப்பேசூக்கு மசரீரநாசமாம் சூக்குமசரீரம் நீங்காவளவும் தூலசரீரம் கணக்கின்றி வர் தழியுமாம். சூக்குமசரீர நசிப்பே தூலசரீர நாசமாம். தூல சரீரம் பிராரத்தகாலமுடிவில் பிணமாகி விழுந்து விடுமாம். அப்படி விழுந்தக்கணமே சூக்குமசரீரம் வுலையிரும் புண்ட நீர்போலத் துரியமாயும் வியாபகமாயும் விளங்காநின்ற பிரம சொரூபத்தி லிறந்துபோ மென்றதென்க. இது அவித்தா

நாசதந்தி யெனப்படும். மெய்ஞ்ஞானமாகிய அக்கினியினால் அவித்தையென்னுங் காரணசரீரம் பஸ்பமாகுமாம். அஃதெங்ஙனெனில்? வேதமகா வாக்கியார்த்தத்தை விடாது அகத்திற்கண்டு மனனிக்கில் பரிபூரணமாக விளங்குமாம்.

## தலைகீழான அஸ்வத்தவிருடசமென்பது.

மேலே வேர்கீழே கிளைகளுள்ள தலைகீழான நித்யமான அஸ்வத்தவிருட்சமொன்றுளதாம். சம்சாரமே அஸ்வத்தமென்றும், சதுர்முகனே அதற்குவேரென்றும், வேதங்களை இலைகளென்றும், பூமியிலுள்ள ஸ்தாவரமான வஸ்துக்களெல்லாம் கிளைகளென்றும், சத்தாதிவிஷயங்களை அந்தச்சாகைகளுக்குத் தளிர்களென்றும், இந்தவிருட்சத்தின் மேலுங்கீழும் தேவாதிரூபமாயும் மனுஷியாதிரூபமாயும் வியாபித்திருக்கிற சாகைகள் சத்வரசஸ்தமோ குணங்களால் விருத்தியடைகின்றனவென்றும், கீழே மனுஷியாதிலோகத்திலே கர்மங்களென்கிற அவிச்சின்னங்கள் (சிறுவேர்கள்) அனேகமாக சந்தித்திருக்கின்றனவென்றும், இதன் ஸ்வரூபமும் நாசமும், ஆரம்பமும், அஞ்ஞானமான ஆதாரமும், இந்த லோகத்திலறியப்படாதென்றும், நான்குபக்கத்திலும் வேரூன்றின அந்த அஸ்வத்தத்தை ஆத்மஞானத்தினாலே திருடமான குடாரங்களால் விரூபத்தை விலகலென்கிறவாளால் வெட்டி விஷயநிராசையா லெதனிடத்திற்புகுந்தவர்கள் மறுபடி பிறக்கமாட்டார்களோ அந்தவிடந் தேடப்படவேண்டுமென்றும், நல்ல ஆத்மஞானம் பிறந்தாலல்லது இது நிவர்த்தியாகாதென்றும், இந்த சம்சாரவிருட்சத்தை எவன் தெரிந்துக்கொள்ளுகிறானோ அவனதை வெட்டுதற்குக் கருவியான வேதங்களைத் தெரிந்தவனாவனென்றும், ஆத்மாவிது, அநாத்மாவிதுவென்றறிகிற விவேகமுள்ளவர்கள் அபரிமித ஞானரூபமான ஆத்மஸ்வரூபத்தை யடைகிறார்களென்றும், சொல்லப்படும். பகவத்கீதை 15 - ம் அத்தியாயம், ஒன்றுமுதல் 4-வரை ஸ்லோகங்களில் ஸ்ரீகிருஷ்ணபகவான் கூறியவற்றானுங்காண்க. சாகைகள்--கிளைகள்.

தலைகீழான நித்திய அஸ்வத்தமாயாவிருட்சத்தில் இரண்டரும் பறவைகள் வாழுமென்றும், அப்பக்ஷிகளில் போகத்

தைவிரும்புகிற ஒருபக்ஷி அவ்விருக்ஷத்தின்பலத்தை நலவது நல்லதெனறு புசிக்குமென்றும், துதிக்கப்பெற்ற மற்றொரு பக்ஷி புசியாதென்றும், அப்பக்ஷி களைக்குறிப்புப்பொருளாக வைத்து வேதமானது சீவனையும், ஈசனையும், வகுத்தவண்ணம் விசாரித்தறியக்கடவதென்றுஞ் சொல்லப்பட்டிருப்பதையுமறிக.

உ - ம். அச்சுவத்தமென்றொரு மாமதிலிரண்டரும் பறவைகள் வாழும்' என்று கை - ந - ீதத்தறிக.

வாச்சியார்த்த மிலக்கியார்த்த மிலக்கணைகளாவன.

ஈசன், சீவன்யென்னு மிரண்டுபதங்களும் வாச்சியார்த்தமும், மலரகிதமான பிரமம், கூடத்தன்யென்னுமிரண்டும் லட்சியார்த்த முமாம். வெண்ணையானதுயெப்படி வேற்றுமையின்றி காச்சினபாலிற் கலந்தொன்றாயிருக்குமோ அது போல் வாச்சியார்த்தத்தில் வேற்றுமையின்றி யபேதமாக இலட்சியார்த்தம் கலந்தொன்றாயிருக்குமாம். மிசிரம்பித்திருக்கும் வெண்ணையைமாத்திரம் கடைந்தெடுக்குமாறு போல வாச்சியார்த்தத்தில் மிசிரிம்பித்திருக்கிற தனதெதார்த்தஸ்வரூபத்தைமாத்திரம், சிரவண மனனாதிகளால், அப்பஞ்சிரிபறச்சிந்தித்து கற்பனைகளினின்று பிரிந்துகொள்ளவேணுமென்று அதாவது-வாச்சியார்த்தத்தைவிட்டு லட்சியார்த்தத்தைப் பற்றவேணுமென்றார், அபபடி பிரிவதெங்ஙனமெனில்? தூலதேகத்தை நானென்னும் அகங்காரமாகிய அறிவை நியதிகளைந்து கொல்லவேண்டுமென்றுஞ் சொல்லப்படும். தத் - ஈசன், த்வம் - சீவன், அசி - பிரமம் இது வாச்சியார்த்தமாம். தத் - பிரமம், த்வம் - கூடத்தன், அசி - ஐக்கியம் இது லட்சியார்த்தமாம். இலக்கியார்த்தம், விட்ட லக்கணை, விடாத லக்கணை, விட்டும் விடாத லக்கணையென மூவிதமாம். இம் மூன்றிலக்கணைப் பொருள்களினால், மேலான சாஸ்திரங்களில் அருத்தம் பொருந்தாமல் வேறுபடுகின்ற வாக்கியங்களெல்லாம், அருத்தமாமென்க. கங்கைக்கண் யிடைச்சேரியென்னுமிடத்து, கங்கையினிடத் திடைச்சேரி யிருக்குமா? கரையினிடத்திருக்குமென்று அதைவிட் டிதைக்கொள்வது விட்டலக்கணையாம். கருப்புச்சேப்போடு தென்னுமிடத்து

கறுப்புநிறமாகிய பசுவும், சிகப்புநிறமாகிய குதிரையும் செல்லுகின்றனவென்று, அந்நிறத்தைவிடாமல் அவ்வாமாகககளைக் கொள்வது விடாத லக்கணையாம். அவனே யிவனென தேவதத்தனென்னுமோர்புருடனென்னுமிடத்து, அவ்விடம், அக்காலம் அவ்வேடமுள்ள, அவனே, இவ்விடம், இக்காலம், இவ்வேடமுள்ள, இவனென, அப்புருடனை மாத்திரங் கொள்ளும்போது அவ்விடம் முதலியன நீங்கி, புருடன்மாத்திரமிருக்கின்றதை விட்டுமவிடாதலக்கணையாமென்க.

உ - ம். "பூச்சிய ஈசன் சீவன் புகல்பத மிரண்டினுக்கும் வாச்சிய மிலக்கியார்த்தமலமிலாப் பிரமம் ஆதமா" என்றும், "பிரிவதெப்படி யென்றக்கால் பிணமாகும் வுடல் நானென்னு, மறிவினைக் கொல்லல் வேணடும்" என்றும கைவ - ந - நீதம்.

**வேதம் வேதவாக்கியங்களாவன.** (அசுவைதம்.)

இருக்கு, யசுர், சாமம, அதர்வணமெ‌ன வேதங்கள் நான்கு. ஈசுரன் பஞ்சமுகத்திலுற்பத்தியாயினவாம. இருக்குவேத வாக்கியம "பிரக்ஞானம" பிரமமென்றதெனப்படும். யசுர்வேதவாக்கியம "அகம்பிரமாஸ்மி" யென்றதெனப்படும். சாமம் "தத்வமசி" அது நீ யாறு யென்றதெனப்படும். அதர்வண வேதவாக்கியம "அயம் ஆத்மா பிரமம்" என்றதெனப்படும வாக்கியமொவவொன்றும் மூன்று பதங்களாயும்; நான்கு வாக்கியங்களும், சீவ பர வைக்கியத்தைக் காட்டுவதாயும்; ஞானகாண்டம் கர்மகாண்டமெனுமிரண்டையுஞ்சொல்லுவதாயு மிருக்குமெனப்படும். இதுவாக்கியோற்பத்தி.

வாக்கியபேதமாவது—பிரக்ஞானம பிரமமெனும் இருக்வேதவாக்கியம், பிரக்ஞை, ஞானம, பிரம, மெனப பதங்கள் மூன்று. பிரக்ஞையே பிரமமென்றதெனப்படும். அகம்பிரமாஸ்மியெனும் யசுர்வேதவாக்கியம், அஹம், பிரமம், அஸ்மி, யெனப்பதங்கள் மூன்று. தான் பிரமமாகிறதெனப்படும். தத்வமசியென்னும் சாமவேதவாக்கியம், தத், த்வம், அசி, யெனப் பதங்கள்மூன்று. தத்-அது, த்வம்-நீ, அசி-ஆறுயெனவும், அது நீயாகின்றாயென்றதெனவும் படும். அயம் ஆத்மா பிரமமென்னும் அதர்வண வேதவாக்கியம், அயம், ஆத்மா, பிரமமெனப் பதங்கள்மூன்று. நான் பிரமமென்றறிகிறதெனப்படும்.

உ – ம். "முந்திய வேதோற்பத்தி பிரக்ஞானந், பிரமமென மொழியும் வேதம், சிந்தைசெயி லகம்பிர மாஸ்மியெனுய வாக்கியம் செப்பு மூன்றிற், றத்தோம்சியெனும் வாக்கியம் நாலாவ தயமான்மா பிரம மென்ன், வந்தவிந்த வாக்கியந்தா னதர் வணத்தி லுற்பத்தி வகுத்தவாறே" என்று மெய்ஞ்ஞான குருவாக்கியத்தறிக.

வாக்கிய வுபதேசமாவது—பிரக்ஞையே பிரமமெனும் இருக்கு வேதவாக்கியம் சீடனுக்குபதேசிக்க, பிரக்ஞையாவதேதென்று சீடன் கேட்க? அகம் பிரமாஸ்மி யென்றிருக்கிறதே அதுவென்று யசுர்வேத வாக்கியம் வுபதேசிக்க, அனேக அகத்திலே எந்த அகமென்று சீடன் கேட்க? சிவேஸ்வரராக பார்க்கப்பட்ட பிரமமென்று தத்வமசியெனனுஞ் சாமவேத வாக்கிய முபதேசிக்க, ஜீவேஸ்வரரானும் வுபாதியுந தள்ளுந பட்டபோதே கோய்தமாச்சந்தெ யென்றுசொல்ல? அன்னியமான தோப்தமும் பிரமத்தைத்தவிர வேறிலலையென்று அயம் ஆத்மா பிரமமென்னும் அதர்வண வேதவாக்கியம வுபதேசிக்கப்பட்டதென்ற தெனபபடும்.

வாக்கிய முக்கியம், அதாவது மகிமையாவது—சகல வுபாதிகளையுந் தள்ளி பிரக்ஞையேதானு யாகாமியார் பற்றுத படியினுலே முதல்வாக்கியமும், வேஷதாரியைப்போல சகல கிருத்யமும் தானல்லாவாகில் அகமாகின்ற பிரமமேதானென வாக்கிவிச்சபபடியினுலே இரண்டாம் வாக்கியமும், ஜீவேஸ்வரபிராந்தியைத தள்ளிப் பார்க்கப்பட்ட பிரமமே தானென வாக்கிவிச்சப்படியினுலே மூன்றும் வாக்கியமும், சஞ்சிதத்தைப்போக்கிச் சகலமுந தானுக்கி விச்சபடியினுலே நாலாம் வாக்கியமு முக்கியமாமென்றதென்க.

வாக்கியப் பிரகாசமாவது — நாலுவேத வாக்கியத்துக்கும் நிரைநிரையே தக்ஷிணமூர்த்தி சாட்சிகுரு பரிபூரணமென்றதெனப்படும்.

வாக்கிய அஞ்ஞானநிவர்த்தியாவது — நாலுவாக்கியத்துக்கும் நிரைநிரையே ஆவரணம், விட்சேபம், மாயை, அவித்தையென்று சொல்லப்படும்.

வாக்கிய நிண்ணயமாவது— அகண்டம் தானுக்கி விச்ச படியினுலே நாலாம் வாக்கியமே முக்கியமாம். மற்ற மூன்

றும் நியதிபண்ணித் தளளிற் றோய்தத்தைப் போக்காத படியினுலே அமுக்கியமாம்.

வாக்கியத்தியானமாவது—நாலு வேதவாக்கியத்துக்கும் நிரைநிரையே தக்ஷிணமூர்த்தி சாட்சி குரு பரிபூரணமாம்.

வாக்கிய அவிதியாவது — நாலுவாக்கியத்துக்கும் நிரை நிரையே சாட்சாத்காரமென்றும், யானென்னுஞ் சிவிஸ்வா பிராந்தியென்றும், அகண்ட சாட்சாத்காரமென்றுஞ் சொல் லப்படும்.

வாக்கியகதைகளாவன—முதல் வேதவாக்கியம குச்சரிய சக்கிலியும், இரண்டாம் வாக்கியம் இராட்சசனும், மூன்றும் வாக்கியம் வேடுவச்சியும், நாலாம் வாக்கியம் பிராமணனும, உபதேசம் பெற்று பிரமகைவல்லியமடைந்தார்களெனப்படும். கதைகளின் விரிவு. உண்மைப் பொருள் விளக்க நூலிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

வேதவாக்கியவுரைகளாவன. (உரை - அருத்தம்.)

இருக்குவேதவாக்கியவுரையாவது:—பிரக்ஞா, ஞானம், பிரமம், என்னு முதல்வேதமாகிய இருக்கு வேதவாக்கியப்பதங்கள் மூன்றில், பிரக்ஞையென்றறிந்த அறிவு, பூதஅறிவாம். பூதஅறிவு சடமானபடியினுலேயும், சரீரந் தன்னையும், பிறரையுமறியாதானபடியினுலேயும், இந்திரியங்களுக்கு அந்தக்கரணமில்லாதபடியினுலேயும், அந்தக்கரணங்கள் நினைப்பு மறப்பானபடியினுலேயும், அவித்தை அஞ்ஞானமானபடியினுலேயும், சீவன் கிஞ்சிக்யஞனமானபடியினுலேயும், இவையெல்லாம் அறிவாகமாட்டாதென்க. இவையெல்லாமறிவல்லனவாயின் அறிவாவதென்னில்? சாட்சியானது சீவன்முதலாய முன்சொல்லியவையெல்லாமறிகையினுலும், அந்தச் சாட்சியையறிய வேறொருவறிவில்லாதபடியினுலும், அது நித்யப்பிரகாசமானபடியினுலும், அந்தசாட்சியே அறிவாமென்க. அந்தப்பிரக்ஞையானசாட்சியே ஞானமாம், அந்தஞானத்தையே பிரமமென்றுபதேசிக்கப்பட்டதென்றதென்க.

யசுர்வேதவாக்கியவுரையாவது:—அகம் பிரமம் அஸ்மியென்னு மிரண்டாம்வேதவாக்கியப்பதங்கள் மூன்றில், அகமெ

ன்பது தானென்றதாம். பெண்சாதிபிள்ளைகளுக்குப் பீடை வந்தகாலத்தில் பெண்சாதிபிள்ளைகள் பிழைக்காற்போது மென்று தனதான்னியங்களைக் கைவிடுகையினுலேயும், வேகிறவீட்டில் பெண்சாதிபிள்ளைகள் போனுற்போகட்டும் தன் சரீரம்பிழைத்தாற்போதுமென்று வீட்டைவிட்டோடிப்போகிறபடியினுலேயும், தூளிகாத்தடிக்கும்போது சரீரத்தையுங் கைவிட்டு இந்திரியங்களைப் பதனம்பண்ணுகையினுலேயும், தியானவேளையி லிந்திரியங்களைக் கைவிடுகையினுலேயும், சுழுத்திபவத்தையில் மனதும் கைவிடுகையினுலேயும், அஞ்ஞானத்தால் பொல்லாதகாரியங்களைச்செய்ததனுல் லச்சை வந்தவிடத்தில் நல்லறிவு பிரகாசிக்கையாலேயும், மரணவேளையில் அந்த வேதனைப்படுகிறதிலும் என்சீவன் போகாதேதாவென்று சீவனைக்கைவிடுகையினுலேயும், பரமசுகமாகிய சாட்சியே தானுகவேணுமென்றுநாடுகையில் அகமாகின்றசாட்சியே பிரமமெனத்தெளிகவென்பதாம். அஸ்மியென்றது - பிரமமே தானுகயிருவென்றதெனப்படும்.

சாமவேதவாக்கியவுரையாவது : — தத்வமசி, அது, நீ, யானுமென்னும் மூன்றும்வேதவாக்கியப் பதங்கள் மூன்றில் தத்பதமாவது ஈசுரவுபாதி, தொம்பதமாவது சீவவுபாதி, அசிபதமாவது இரண்டிணைக்கியம். தத்பதத்துக்கு வாச்சியார்த்தம். விராட்டு, இரணியகெற்பன், மாயையாம். இந்தச்சரீரத்திரயத்துக் கபிமானி ஈசுரனும். இதற்கு லட்சியார்த்தம் பிரமமாம் தொம்பதவாச்சியார்த்தமாவது தூலசூக்குமகாரணமாம் இந்தச்சரீரத்திரயத்துக்கபிமானி சீவனும். இதற்கு லட்சியார்த்தம் கூடஸ்தராம். அசிபதவாச்சியார்த்தமானது காடாகாசமும், மகாகாயமு மொன்றென்றறியிராப்போலக் கூடஸ்தரும் பிரமமு மொன்றென்றறியிரதே அயிக்கியமாம். இதற்கு லட்சியார்த்தம் தானுயிருந்தும் அந்தவாதனை தானுமற்றதுவே யசிபதப்பொருளாகிய வஸ்துவென்றறிகிறதென்க. இப்படி யாயுள்ளபொருளைக் கிரியாப்பதங்களுடனே கூட்டி போதிக்கிறமுறைமை யெப்படியென்னில்? அது நீயாகின்றுயென்றும், நீ அதுவாகின்றுயென்றும் போதிக்கப்படு

வத்தாம. ரி அதுவாகின்றாயென்று போதிக்கிறமுறைமையில் செக சீவ பதத்தை விளக்குமாம்.

**தொம்பதகாரியவுபாதி அவித்தை அபிமானிநாமங்கள்.**

நீயென்னுந்தொம்பதத்துக்கு அபரோட்சமென்னும் காரியவுபாதிகள், தேகம், இந்திரியம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், பிராணவாயுவெனு மேழாம். இந்த வேழுபாதிகளும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தியெனு மூன்றவத்தைகளாம். அபிமானிமுறையே விசுவன், தைசதன், பிராஞ்ஞனும். தொம்பதம்விட்டலக்கணையாற்றறிசிப்பதாம்.

தொம்பததேகதத்துவங்களாவன :—ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, தன்மாத்திரை 5, அந்தக்கரணம் 4, பிராணவாயு 1, ஆகத்தத்துவங்களிருபத்தைந்தாம்.

தத்துவநியதியாவது :—இது தொம்பதசோதனை, மனனமாம். தேகம், இந்திரியங்களாகியவிவைகள் பஞ்சபூதங்களின்கூறாயும், அந்தக்கரணங்களில் மனம், வாயுவினுடையவும், புத்தி, தேயுவினுடையவும, சித்தம், அப்புவினுடையவும, அகங்காரம், பிருதிவினுடையவும கூறாகையாலும், வாயுவுக்குச் சுழுத்தியில் சைதன்னியமில்லாமையாலும், சாக்கிரம் வேழுபாதிகளுடன்கூடி விளங்குகையாலும், சாக்கிரம் சொப்பனத்திலழிவதாலும், சொப்பனம் சாக்கிரத்தின் வாதனையாகவும் அது சுழுத்தியிலழிவதாலும், சுழுத்தி யிரண்டவத்தைகளின்வொழிவாயிருப்பதாலும், இப்படியென்றுணரலறியப்படுவதாலும், இவையெல்லாம்நீயல்லவென்றறிதென்க. இவையெல்லாம் நீயல்லவாயின் நீயாவதேதெதென்னில்? இந்த இருபத்திஞ்ஞுதத துவங்களிலும்பொருந்தி வேழுபாதிகளையுங் கண்டுக்கொண்டிருக்கிற யாதொருசைதன்னியவறிவுண்டோ அந்தச்சைதன்னியஅறிவே நீயென்க. இதுவே சுத்ததொம்பதார்த்தமாம். உண்மையாய்நின்றுவிளங்குகிறது துரியமாம். சுத்ததொம்பதார்த்தமே துரியபானுக்கு உடலென்க.

**தத்பதகாரணவுபாதியவித்தை அபிமானிநாமங்களாவன.**

சுத்ததொம்பதார்த்தமே துரியபானுக்கு வுடலெனப்படும். அந்தத்துரியபானுக்கு, பரோட்சமென்னுங் காரணவுபா

திகள் சர்வக்ஞன், சர்வகாரணன், சர்வேந்திரியமும், சர்வே
ஸ்வரன், சர்வசிருஷ்டி, சர்வதிதி, சர்வசங்காரமு என்றே
ழாம். இந்த ஏழுகாரணவுபாதிகளும் தத்பதத்துக்கு துரி
யம், காலபரம், அதீதமென மூன்றவத்தைகளாம். ஏழுபாதி
களுடன் விளங்குகிறதே துரியபரனுக்கு பரசாக்கிரமென்
றும், இதற்கபிமானி விராட்புருடனென்றும், சர்வசிருஷ்டி,
சர்வதிதி, சர்வசங்காரமாகிய மூன்றுபாதிகளுடன்விளங்கு
கிறதே காலபரமாகிய பரசொப்பனமென்றும், இதற்கபிமானி
இரணியகெர்ப்பனென்றும், இந்த ஏழுபாதியுமில்லாமல் ஒவொ
ன்றுமில்லாதவிடமே அதீதமாகிய பரசுழுத்தியென்றும், இத
ற்கபிமானி அவ்யாக்ருதனென்றும் சொல்லப்படும். இந்தப்
பரசுழுத்தியே பிரமத்தின்சொரூபமென்று வேதங்கள்கூறு
கின்றனவாம். தத்பதம் விடாதலக்கணையாற்றரிசிப்பதாம்.

தத்பதசோதனைசிரவணமனனமாவது:—சர்வஞ்ஞனாலே
சர்வஞ்ஞனென்றும், இந்திரியங்களெல்லாமழிந்துந் தானழி
யாமனிற்கையினாலே சர்வகாரணனென்றும், இந்திரியங்களுக்
கெல்லாமுன்னிடாய்நின்றறிகையினாலே சர்வேந்திரியாமியெ
ன்றும், இந்திரியங்களுக்கெல்லா மேலாய்நின்றுவிளங்குகை
யினாலே சர்வேஸ்வரனென்றும், இந்திரியங்களெல்லாந் தனக்
குள்ளே தோன்றுகையினாலே சர்வசிருஷ்டியென்றும், இந்
திரியங்களெல்லாந் தானாயிருந்து ரக்ஷிக்கிறதினாலே சர்வதிதி
யென்றும், இந்திரியங்களெல்லாந தனக்குள்ளேயடங்குகையி
னாலே சர்வசங்காரமென்றும், நாமங்களுண்டாயினவாம்.
இந்த ஏழுபாதிகளுஞ் சொரூபமல்லவாம். இந்த ஏழுபாதி
களையு மெந்தச் சைதன்னியத்திலே யளவிடப்பட்டதோ
அதுவே சொரூபமாம். இந்தச்சொரூபம் உபாதிகளுடன்
சம்பந்தித்தபோது முக்கியமென்றும், உபாதியைத் தானெ
ன்றபோது அசுத்தமென்றும்,உபாதிக்குச்சாட்சியானபோது
சுத்தமென்றுஞ் சொல்லப்படும்.

காரணவுபாதிகளேழும் சம்பந்தித்து விளங்குகிறதென்
றறிகிறமையாலும், பரசாக்கிரம் பரசொப்பனத்திற் றோன்
றுமையாலும், மூன்றுபாதிகளுடன்கூடி விளங்குகிறதே பர
சொப்பனமென் றறியப்படுவதினாலும், பரசொப்பனம் பர

சுழுத்தியில் நீவதாலும், வுபாதிகளொன்றுமில்லாதவிடமே பாசுழுத்தியென றறிவதினாலும், பரசொரூபத்தில் பரசுழுத்தியழிவதினாலும், இவையெல்லாம் சொரூபமல்லவாம். சொரூபமாவதேதெதென்னில்? மூன்றவத்தைகளையுங்கண்டு கழன்று மேலாய நின்று விளங்குகிறதே பரசொரூபமாம். இந்தப் பரசொரூபத்தையே மகாவாக்கியம் சுத்த தத்பதார்த்தமெனப் படுவதென்று கூறுகின்றதெனப்படும்.

## அசிபதமுக்கிய மனனம்.

தேகேஜாக்கிரமமாகிற கிஞ்சிஞ்ஞனாயிருக்கிற சீவனுக்கும், போதாக்கிரமமாயிருக்கிற சர்வஞ்ஞன பரனுக்கும், இரண்டுபதத்திலும் சொல்லப்பட்டபொருள் முன்னைக்கிய விருப்பினாலே ஏகமாதல் கூடுமாமென்க.

முக்கியமான வுபாதிதீர்ந்து லட்சியமாரனென்கிற வாதனாதோஷமாகிற குத்தம் அகண்டவாக்கியத்தினாலே ஏகம் பண்ணப்படுமென்க. காரிய காரணோபாதிகளிரண்டுங் கழன்று விளங்கப்படா னின்ற தற்சொரூபத்தினால், விசுவமெல்லாம் விழுங்கி, அகண்ட பரிபூரணமாய் விளங்குமென்றும், இதற்கபிமானி பிரஜாபதியென்றும், வேதங்கூறுமாம். இந்த வாதனைகளெல்லாந் தீர்ந்து அகண்ட பரிபூரணமாய் விளங்கப்படுவது அசிபதமாகையால சீவனும், பரனும், தேகமாயிருக்கிற வுபாதியும், சம்பந்தித்துவருகிற அவத்தையும், கோட்பாடுகளும், விரிவு வொடுக்கமுமாகிய விவையெல்லாமொன்றுமின்றி வெளிழிவில்லாத நிறைவாய் விளங்கப்படா னின்ற யாதொரு சொரூபத்தையே மகாவாக்கியம் ஆனெயென்றதென்க. அசிபதம், விட்டும்விடாதலக்கணையாற றறிசிப்பதாம்.

## நிதித்தியாசனமாவது.

தொம்பத தத்பதவுபாதிகளவைகளின் சோதனையும், வாதனாதோஷமாகிய அசிபதத்தினிட சோதனையும், சந்தேகமறக்கண்டு வுண்மையைக் காண்பதுவே முடிவெனப்படும்.

## உபசாந்தமேன்பது.

தன்னை மறந்தது மூலவஞ்ஞானமாம். விசுவமெல்லாந் தன்மயமாய் விளங்குகிறபடியினாலே குற்றந்தீர்ந்து யிந்த

வாதனுதோஷந் தீர்க்கவேணுமென்று வேதங்கூறுமாம். உபசாந்தமாகிய மறப்பு நீங்கினுலல்லது தீராதென்க. தற்சொரூபத்திலிடத்திலே நிற்குமோ இல்லையோ பாரென்னுமிடத்து? இல்லை. இல்லாதவிடமெப்படி யிருந்ததென்னில்? ஆதியந்தஞ் சூன்னியமாகயிருந்தது. இதுவே பரிபூரணமாமென்க. அந்தப் பரிபூரணமெப்படி யிருந்தது பாரென்னுமிடத்து? யென்னுற் சொல்லப்போகாதிருந்தது. அதெப்படியெனில்? மனதுக்கெட்டாதபடியினுலே வாக்கு வசனிக்கப்போகாது, ஆகையால் வாக்கு மனதீதமென்றிரண்டையுங் கண்டு விளங்கிவந்ததே ஞானமாம். சத்து, சித்து, ஆனந்தமென்னுந் திருக்குஸ்வரூபமே ஆத்மாவாகிய நீயென்று போதிக்கப் பட்டதென்றதென்க சீவன்முத்தி அதீதத்திலும், பரமுத்தி யுபசாந்தத்திலுமாமென்க.

உ-ம். "தொம்பதந் தற்பதந் தோன்று மசிபதம், நம்பிய சீவன்பரன் சிவமாய் நிற்கு, மம்பத மேலைச் சொரூபமா வாக்கியஞ், செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே" என்றும், "சித்திக்கு வித்து சிவபரந் தானுதல், சத்திக்கு வித்து தனதுப சாந்தமே" என்றும் திருமந்திரத்திலறிக.

## நாலாம் வேதவாக்கியவுரையாவது.

அயம், ஆத்மா, பிரமமென்னு நாலாம் வேதவாக்கியப்பதங்கள் மூன்றில், அயமென்றது-ஆத்மாவென்றும், ஆத்மாவென்றது-பவுதீகமென்றும், இந்தச் சீவீஸ்வரவாச்சியமான வுபாதியே,பிரமமென்றுஞ்சொல்லப்படும். இதெப்படி பிரமமென்னில்? யானைதானே மரமானுப்போலவும், வெள்ளிதானே கிளிஞ்சலானுப்போலவும், கள்ளன்தானே கட்டையானுப் போலவும், பூதபவுதீகமே பிரமமென்றறிகிறதென்க. "மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தில் மறைந்தது மாமத யானை, பரத்தை மறைத்தது பார்முதற் பூதம், பரத்துள் மறைந்தது பார்முதற் பூதமே" என்றும், "தன்னை மறைத்தது தனுகரணங்கள், தன்னில் மறைந்தது தனுகரணங்களே" என்றும் திருமந்திரத்திலறிக.

**ஆத்மதரிசனம். (அதர்வணவேதபபடி.) தொம்பதம்.**

*தூல, சூக்கும, காரண, தேகதத்துவங்களோவ்வொன்றும் தூல, சூக்கும, காரணமாயிருக்குமென்க.*

**தொம்பத தூல சூக்கும காரண தேகதத்துவங்களாவன.**

*தூலதேகதத்துவங்கள்—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமெனப் பூதங்களைந்தெனப்படும்.*

*தூலத்திற் றூலதேகமாவது:—பஞ்சபூதங்கள் பூதகுணங்களில் பிருதிவியினுடைய காரியங்களான-மயிர், தோல், நரம்பு, எலும்பு, தசைஎன 5, அப்புவின் காரியங்களான - நீர், உதிரம், வேர்வை, மச்சை, சுக்கிலம் என 5, தேயுவின்காரியங்களான - ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பு என 5, வாயுவின் காரியங்களான - ஓடல, நடத்தல், யிருத்தல், கிடத்தல், திரிதல்என 5, ஆகாயத்தின் காரியங்களான-குரோதம், லோபம், மோகம், மதம் ஆச்சர்யம்என 5 ஆக 25ம் தூலத்திற் றூலதேகமெனப்படும்.*

*மண்ணுதிவியல்புகள் 11-வது பக்கத்திலும் பிருதிவியாதி தத்துவதோற்ற முதலியன. 58, 59, 60, 61, 62, 63, 64, 65, 66 பக்கங்களிலுங் காண்க.*

*தூலத்திற் சூக்குமதேகமாவது—சூட்சுமத்திற்கும் பஞ்சபூதங்களுமுண்டாம். அவை காரணரூபமாயிருக்குமாம். அஃதெங்ஙனெனில்? ஆகாயத்தில் வெளியும, வாயுவும், அக்கினியும், அப்புவும், கடினமுமுண்டானதுபோலாம். இந்த ஐந்துபூதங்களின் பஞ்சிகரணக்கதம்பமாவது:—ஆகாயத்துக்குத் தன் னித்தியகுணம் உள்ளம். வாயுவுக்குத் தன் னித்தியகுணம் வியானவாயு. தேயுவுக்குத் தன்னித்தியகுணம் சட்சு. அப்புவுக்குத் தன்னித்தியகுணம் ரசம். பிருதிவிக்குத் தன்னித்தியகுணம் உபத்தம். இந்த நித்தியகுணம் ஐந்தையும் புறம்பாக வைத்துக்கொண்டு, ஐந்துபூதத்திலுங் கூடுகிற கதம்பமாவது—ஆகாயத்தில் பிருதிவிகூடில் ஆங்காரம், அப்புகூடில் சித்தம், வாயுகூடில் மனம், தேயுகூடில் புத்தி ஆக நாலு. வாயுவில் பிருதிவிகூடில் பிராணன், அப்புகூடில்*

அபானவாயு, தேயுகூடில்உதானவாயு, ஆகாசங்கூடில் சமான வாயுவு ஆக நாலு. தேயுவில் பிருதிவிகூடில் ஆக்ராணம், அப்புகூடில் சிங்குவை, வாயுகூடில் தொக்கு, ஆகாசம்கூடில் சோத்திரம் ஆக நாலு. அப்புவில் பிருதிவிகூடில் கந்தம், தேயுகூடில் ரூபம், வாயுகூடில் பரிசம், ஆகாசம்கூடில் சத்தம்ஆக நாலு. பிருதிவியில் அப்புகூடில பாயுரு, தேயு கூடில் பாணி, வாயுகூடில் பாதம், ஆகாசங்கூடில் வாக்குஆக நாலு. இந்த யிருபது தத்துவங்களும், நித்தியகுணதத்து வங்களைந்துமாக தத்துவங்களிருபத்தைந்தும் தூலதேகத் திற் சூக்குமதேகமென்றதெனப்படும்.

தூலதேகத்திற் காரணதேகமாவது—மண்ணும், தண் ணீருங்கூடி சுவானைப்போல தோல் மாங்கிஷ மண்ணும், சுக்கில சுரோணிதம் ரக்தமுதலியன தண்ணீருமாகக் கூடி தேகமானபடியினாலே இந்தத் தூலதேகத்திற் காரணமாம். இதற்குக் கருவி கரணங்களுமொன்றாம். இந்த மூன்றுங் கூடிய தூலதேகமானதாம். இதற்கவத்தை சாக்கிரமாம். அபிமானி விசுவனாம். இதற்குப்பேரேதினால் வந்ததென்னில்? பிரபஞ்சத்திற் சகலமும் பார்த்துச் செய்வன், செய்காரியமெல் லாமறிவன், இதன் பேற்காரியமறிவன், வேண்டுவதனைத் தும் விடுவனாகையால் விசுவனென்று பெயரானதாம். குணம் இராசசம் சத்தி கிரியாசத்தி, தானம் நேத்திரம், போகம் உலகத்தபிமானத்தாலறிந்து புசிப்பது அக்ஷரம் அகாரம். எல்லாத்திலும் நின்று வர்த்திக்கிறபடியினாலே சீவாத்மாவெ ன்று பெயருண்டாயிற்றென்க.

### சூக்குமத்திற் றூல, சூக்கும, காரணதேகவிவரம்.

சூட்சுமத்திற் றூலதேகமாவது — சொப்பனவத்தையே சூட்சுமதேகமெனப்படும். தூலதேகத்திலிருந்தனுபவித்த வாசனையிந்த சூட்சுமதேகத்திற் பிடிபடுமாம். அஃதெங்ங னென்னில்? ஒருவனுக்குப் புத்தியென்கிறது தலையிலேறிக் கொண்டு படுத்திருந்து பார்த்தான், மறுபடி பிரண்டுபார்த் தாப்போல, முன் தூலத்தில்பார்த்த வாசனையைப் பிடித்துக் கொண்டு சூட்சுமத்திற் பார்க்கிறனென்றறிவது. சூட்சுமத்

திற் றூலதேகமே புரியட்டக தேகமெனப்படும். இதற்கு ஞானேந்திரியங்களைந்துங்கூடி 1, கன்மேந்திரியங்களைந்துங் கூடி 1, விடயமைந்துங்கூடி 1, பிராணாதிவாயுக்களைந்துங் கூடி 1, கரணம் 1, அஞ்ஞானம் 1, ஞானம் 1, ஆக எட்டுங் கூடி ஆத்மா அஷ்டபுரிதேகமெனப்படும். இதுவே சூட்சுமத்திற் றூலதேகமாம்.

சூட்சுமத்திற் சூட்சுமதேகமாவது—ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, பிராணாதிவாயுக்கள் 5, மனம் 1, புத்தி 1, இந்தப் பதினேழு தத்துவங்களும் பொருந்தினதே சூட்சுமத்திற் சூட்சுமதேகமென்க. இதுவே லோகாதிலோகம் போய்வருமென்றதெனப்படும்.

சூட்சுமத்திற் காரணதேகமாவது—வாயுவின் ஆதாரத்தினாலே மனதும், தேயுவின் ஸ்வரூபத்தினாலே புத்தியுமாகிய விரண்டும், வாயுவினாலும், தேயுவினாலும், வர்த்திக்கப்பட்டபடியினாலே இது சூட்சுமத்திற் காரணதேகமெனப்படும். இம்மூன்றுங்கூடியே சூட்சுமதேகமாயிற்றென்க. இதற்கவித்தை சொப்பனம். அபிமானிதைசதன் இந்தப்பெயரெதினால் வாதமேதன்னில்? தேயு சொரூபமாய் சகலதேசங்களுஞ் சஞ்சரிந்து நிற்பதாலென்க. இதற்கு குணம் ராதவிகம். சத்தி யிச்சாசத்தி. தானம் கண்டம், போகம் புரியுத்தபோகம். இன்னதினிபதென்று பேதாபேதமில்லாமற் கொள்வதாதலாற் புரியுத்தபோகமென்றதென்க. அக்ஷரம் உகாரம். இது எல்லாத்திலுநின்று வர்த்திக்கிறபடியினாலே அந்தாதபாவென்று பெயராம். வர்த்தித்தலென்றது, வளர்தலாம்.

## காரணத்திற் றூல, சூக்ஷ்ம, காரணதேக விவரம்.

காரணத்திற் றூலதேகமாவது—தூலமுட, சூட்சுமமும் நீயறிந்தாயோவென்று குருவானவர் கேட்டு சீடன் தேவரீர் கிருபையினாலே அறிந்தேனென்று சொல்ல, நீ யாரென்று கேட்டார்? சீடன் நானறியேனென்றான். நீ அறியேனென்றதே ஆணவம். அதுவே காரணதேகமென்று சொல்லில் பின்னும் சீடனைப்பார்த்து நீ யறியேனென்று சொன்னது நீ அறிந்துசொன்னதோ அறியாமற்றான் சொன்னதோ வெ

ன்றுகேழ்க்க? சீடன் நன்றாய் விசாரித்துப் பார்த்துதான் நானறியேனென்றும் அறிந்தேனென்றுஞ் சொன்னேனென் முன். நீ அறிந்துசொன்னவனே ஞானசொரூபன், அறியே னென்றதே யாணவசொரூபம், இதுவே காரணத்திற் றூல தேகமாம். இதற்குப் பஞ்சபூதவாயு வியங்குகையால் வாயு வுமுண்டு. அந்தவாயுவு வெளியில்லாமல் நடவாதாகையால் வெளியாகிய ஆகாயமுமுண்டு. நியசனம்பண்ணி, யது சுழுத் தியிற்றங்கி, யதில் சீரணமாய்ப்போனதே அக்கினியுமுண்டு. அது தண்ணீர் கூடாமல் சீரணமாகாதாகையால் அப்புவு முண்டு. அந்தச்சுழுத்தியி லொன்றுந்தெரியாமற் கிடப்ப தாகையால் பிருதிவியுமுண்டு. இந்த பஞ்சபூதமுண்டான போதே இருபத்தைந்துகுணமு மதிலடங்கியிருக்கும். இது வே காரணத்திற் றூலதேகமெனப்படும்.

காரணத்திற் சூட்சுமதேகமாவது—அந்தக்காரணமாகிய உள்ளமும் ஆகாசமுங்கூடி காரணத்திற் சூட்சுமதேகமென்ற தெனப்படும்.

காரணத்திற் காரணதேகமாவது—சுழுத்தியவத்தையிற் சகல விந்திரியங்கள் கரணங்களாகிய விவையெல்லாம் பிரளய மானவிடத்தில் அந்தக்கரணம் ஒன்றுமே நிற்கையால் அது வே காரணதேகத்திற் காரணதேகமெனப்படும். இம்மூன் றுங்கூடியே காரணதேகமாம். இதற்கவத்தை சுழுத்தி, அபி மானி பிராஞ்ஞனும். இந்தப்பேரெதினால் வந்ததென்னில்? சாக்கிரமும் சொப்பனமுமறிந்து, தான் சுழுத்தியிலே யிருக் கிறபோது கியானமுண்டாகையால் பிராஞ்ஞனென்று பெய ருண்டாயிற்றென்க. சுழுத்தியில் யெப்படியிருந்தேனென்று சீடன்கேட்க? அதற்கு நீ யிருட்டுவீட்டிலே யிருந்தாப்போ லிருந்தாயென்று குருநாதன்சொன்னத்துக்கு, சீடன் நானி ருட்டுவீட்டிலே யிருக்கிறேனென்று சொல்லாமலிருந்ததே தனவென்றான்? அதற்கு அசுத்தமாயையானதா லதினான க்கு சொல்லக்கூடாதென்று குருநாதன்சொல்லி திருஷ்டாந் திரத்தாலுணர்த்துகிறதாவது – ஒருபுருஷன் கைசருவி கிண த்திலே விழுந்து வேறொருவனிறங்கித் தண்ணீர்மூழ்கித் தட

வுகையில் அகப்பட, மேலேயிருந்தவன் அகப்பட்டதோ யில்லையோவென்றான்? கையிலகப்பட்டிருக்க தண்ணீரில் பின்முச்சிருந்தும் பேசப்போகாததுபோல சுழுத்தியிலிருந்ததென்று சொல்லப்பட்டது. சுழுத்தியைவிட்டு விழித்தபோது கனவொன்றுங் காணாமல் சுகமாய் நித்திரைபோனேனென்று சொல்லுவதினால் சுழுத்தியிற் கிடக்கிறபோதும் கியானமுண்டாயிருந்ததென்க. இதனால் பிராஞ்ஞனென்னும் பெயருண்டானதாம். சுழுத்தியிலொன்றுங் காணாமையினாலே தமோகுணமாம். சத்தி திரோதாய் சத்தியாம். தானம் இருதயம். போகம் ஆன்மா, அக்ஷரம், மகாரம். இதனினின்று நின்றாடாடினபடியினாலே பரமாத்மாவென்று பெயரானதாம்.

## மகாகாரணத்திற் றூல, சூக்கும, காரணதேகவிவரம்.

மகாகாரணத்திற் றூலதேகமாவது சாக்கிர, சொபபன, சுழுத்தியவத்தைகளையறிந்துத தானொருவனாய் வேறே நின்றதே துரியம். இதுவே மகாகாரணதேகமெனப்படும் இந்த மகாகாரணதேகத்திற் றூலதேகத்துக்குப் பஞ்சபூதமுண்டென்கிறதெப்படியென்னில்? இதுவே சிவனுடைய பஞ்சமுகமானபடியினாலே பஞ்சபூதமுமுண்டாம். அதெங்ஙனெனில்? சத்தியோசாதமுகத்தில் பூமி, வாமமுகத்தில் அபபு, அகோரமுகத்தில் அக்நி, தற்புருடமுகத்தில் வாயு, ஈசானியமுகத்தில் ஆகாயம். இந்தப்படி பஞ்சபூதங்களுமுண்டானபடியினாலே கருவி கரணங்களுமுண்டாமாகையாலிதுவே மகாகாரணதேகத்திற் றூலதேகமென்றதென்க.

மகாகாரணத்திற் சூட்சுமதேகமாவது—மகாகாரணத்திற் சூட்சுமதேக மெப்படியென்னில்? இது பஞ்சாக்கரசொரூபமாகையால் பஞ்சபூதங்களுமுண்டாம. அதெங்ஙனெனில்? நகாரம் பிருதிவி, மகாரம் அபபு, சிகாரம் தேயு, வகாரம் வாயு, யகாரம் ஆகாயம். இந்த ஐந்து மநுபவத்தாலறியப்படும். அஃதெங்ஙனெனில்? சுவாதிட்டானம, மணிபூரகம், அநாகதம், விசுத்திவரையில் நிரைநிரையே ந ம சி வ என்னு நாலக்கரங்களும், ஆக்ஞையில் யகாரமும், ஓங்காரரூபமும், நாதரூபமாகையால் அறிவு சொரூப மாயிருக்குமென்க. இந்த

பஞ்சாக்கரங்களிலறிந்த பஞ்சபூதங்களை மகாகாரணத்திற் சூட்சுமதேகமென்றதெனப்படும்.

மகாகாரணத்திற் காரணதேகமாவது—ஆக்ஞைசக்கரத்தி லிருக்கிற பிரணவத்துக்கு, சூட்சும பஞ்சாக்கரமென்றுபெய ராம். இதுவே மகாகாரணத்தில் மகாகாரணதேகமானதாம். அதெங்ஙனெனில்? அகார, உகார, மகாரம், பிரணவம், சிருஷ் டிப்பிக்கிறதற்கு காரணமாயிருக்குமாம். இதுவே மகா கார ணத்தில் மகாகாரணதேக மென்றதென்க. இந்த மூன்றுங் கூடியே தேகமாச்சுதாம். இதற்கவத்தை துரியம். அபிமானி பிரத்யேகாத்மா. இந்தப்பெயரெதினால் வந்ததென்னில்? முன்சொல்லப்பட்ட சாக்கிரசொப்பன சுழுத்திகளையறிந்து, இந்த மூன்றினிட தன்மலட்சணமுமறிந்து, இவற்றிலகப் படாமல் தான் வேறே ஞானசொரூபமாயிருந்தபடியினாலே பிரத்யேகாத்மாவென்ற பெயருண்டாச்சுதென்க. இதற்கு குணம் சுத்த சாத்வீகம். சத்தி ஞானசத்தி. தானம் லலா டம். போகம் ஆனந்தபரவசபோகம். இந்த ஆனந்த பர வசபோகத்தைத் தானறிந்து வேறே நின்றபடியினாலே இந் தப்போகமே பரனென்று சொல்லப்படுமாம். இதற்கக்ஷரம் ஓங்காரம். இந்த நாலவத்தையான மலமும், தானறிந்து நீங்கி வேறானபடியினாலே நின்மலாத்மாவென்று பெயருண்டான தென்க. இதுவே துரியம். துரியாதீதத்துக்கு அவத்தை யில்லையாகையால் சுத்தபாகிய அறிவே பிரகாசமாக நின்றது. இதற்கு ரூபமில்லையானதினாலே வோர் பிரளயமென்றதெ ன்க. ஆத்மதரிசனம் தொம்பதமுற்றும். இந்த தொம்பதா ர்த்தமே தத்பதத்துக்குத் தூலதேகமானதென்க.

### தத்பததரிசனம். (அதர்வணவேதப்படி.)

தத்பதம் பதிதரிசனம். (அதர்வணவேதப்படி) சீடன் குருவைத் தெண்டஞ்சமர்ப்பித்து, தேவரீர் திருவுளத்தி னாலே யென்னை நானறிந்தேன், முன்னெனக்குத் தெரியாத படியினாலே பசுவென்கிற பெயருண்டாயிருந்தேன். இனி யெனக்கு அதர்வணவேதத்தி லுண்டானபடிக்கு தரிசனம் திருவுள்ளம்பற்ற வேண்டுமென்றான்?. நீ சொன்னவார்த்தை

சத்தியம், குருவினுடைய வனுக்கிரகமில்லாவிட்டால் தெரியாதாகையால் யென்னிடதேகமென்கிற பிரகாசத்தினாலே பதிதரிசனப பண்ணிவைக்கப்படும். நீ உன் சுத்தவறிவினாலே கேளென் ... தத்பலக்ஷணம் உபதேசிக்கப்பட்டது. தத்பதத்திற்கு தூல, சூக்கும, காரண, மகாகாரணமென நாலுதேகங்களுண்டாமென்க. அவை எங்ஙனெனில்

தத்பததூலதேகமாவது — இது விராட்டு தேகமெனப்படும். தூலதேகமே பிண்டபிரமாண்டம். இதுவே சிவனுக்கு அஷ்டதனுவாச்சுதாம். அதேதென்னில்? பஞ்சபூதம் 5, சந்திரசூரியர் 2, அநேகம் நிர்மலாத்மா 1, ஆக எட்டு. இந்த எட்டுமே சிவனுக்கு அஷ்டதனுவென்றதென்க. இதுவே விராட்டுதேகம். இதுவே சர்வபூதத்துக்கும் அதிதேவதையாயிருக்குமாம். இந்தத்தேகத்துக்கு யஜுர்வேதத்தில் புருடசூத்திரஞ் சொல்லப்படுவதாம். இதற்கவத்தை உற்பத்தி, அபிமானி பிரமா, குணம் ராசதாங்காரம், சத்தி கிரியாசத்தி, தானம் சூரியத்தானம், போகம் சர்வபூதாரம், அக்ஷரம் அகாரம், இது இத்தனையிலுநின் றாடாடினபடியினாலே சர்வபூதாத்மாவென்று சொல்லப்பட்டதென்க.

தத்பத சூட்சுமதேகமாவது—இரணிய கெற்பதேகமெனப்படும். இது சகலவிந்திரியங்களுக்கும் நியந்தா வானதி தேவதையாயிருக்குமாம். அதெப்படியெனில்? அந்தக்காரணமாகிய உள்ளமே ஆத்மா, மனமே சந்திரன், புத்தியே பிரமா, சித்தமே நாராயணன், ஆங்காரமே ருத்திரன். இதுவே அந்தக் காரணபஞ்சகம், ஆகாயத்தின்குணம் ஐந்தென்றுஞ் சொல்லப்படும். அவற்றின் விவரமாவன.

வாயுபஞ்சகமாவது—முக்கியம், வயிரவம், பிரபஞ்சம், அந்தர்யாமி, மகாப்பிராணன் எனஐந்து. இது வாயுவின்குணம். தேயுவின் குணமாவது—திசைதிக்கே சோத்திரம், வாய்வே தொக்கு, சூரியனே சட்சு, வருணனே சிங்குவை, அசுவனிதேவதையே ஆக்கிராணம் ஆக ஐந்து. அப்புவின்குணமாவது—ஆகாயத்தினிடையே சத்தம், சயித்தியமே பரிசம், பிரகாசமே ரூபம், சுவார்சியமே ரசம், சர்வவாசனையே கந்

தம் ஆக ஐந்து. பிருதிவியின் பஞ்சகமாவது—வாக்கே அக்நி, பாதமே திருவிக்கிரண்டம், பாணியே இந்திரன், பாயுருவே நிருதி, உபத்தமே பிரசாபத்தி ஆக ஐந்தும் பிருதிவியின்குணமாம். இது இரணிய கெற்பதேகமாம். இதற்கவத்தை நிதி, அபிமானி விஷ்ணு, குணம் சாத்வீகங்காரம், சத்தி யிச்சாசத்தி, தானம்சந்திரத்தானம், போகம், சர்வபாலோகத துவபோகம், அக்ஷரம் உகாரம், இத்தனையிலும்நின்று வர்த்திக்கப்பட்டபடியினாலே சத்திராத்மாவென்றதென்க.

தத்பதகாரணதேகமாவது—இது அவ்யாக்ருததேகமெனப்படும். விராட்டுதேகமும, இரணிய கெற்பதேகமு மறிந்து அவ்யாக்ருததேகஞ் சுத்தமானபடியினாலே உனக்கறியப்போகாதென்று சீடனுக்குச்சொல்லி குருநாதன் அருளிச் செய்கிறதாவது—அவ்யாக்ருதமே திரோதாசத்தி, அதுவே குண்டலிசொரூபினி சத்தி, அதுவே அம்பாவத்தை, அதுவே யாணவமாயை, அது மூன்றுகுணங்களுக்கும் கோப்பியமா யடங்கிநிற்குமாம். அதாவது சாதவீகங்காரம், இராசச அகங்காரம், தாமதகங்காரமாகிய மூன்றில் சாத்வீக அகங்காரத்தில் அந்தக் கரணபஞ்சகம். சூரியாதி அதிதேவதையினாற் புத்தியாச்சுதென்க. இராசசஅகங்காரதில் ஞானகன்மேந்திரியங்கள், பிராணபஞ்சகங்க ளுற்பத்தியாச்சுதென்க. தாமதகங்காரத்தில் பஞ்சபூதங்கள், தன்மாத்திரையான சத்தாதிவிஷயங்களு முண்டாயினவென்க. இவையெல்லாம் அவ்யாக்ருதத்தில், விரையில் மரமடங்கினாப்போ லடங்கியிருக்குமாகையா லிதுவே விசுவக்கிராசமென்றும், வுருத்திரனுக்குக் காரணதேகமென்றுஞ் சொல்லப்படும். இதற்கவத்தை பிரளயாவத்தை, அபிமானி ருத்திரன், குணம் தாமதகங்காரம், சத்தி திரோதாசத்தி, தானம் அக்நித்தானம், போகம் சர்வாங்காரபோகம், அக்ஷரம் மகாரம். இது யெல்லாத்திலுநின்று வற்திக்கப்பட்டதினாலே சுத்தாத்மாவென்று பெயருண்டானதென்க. பதிதரிசனம் தத்பதமுற்றும்.

### பஞ்சபதங்களாவன.

தொம்பதம், தத்பதம், அசிபதம், அதிபதம், நிசபதமெனப் பதங்களைந்தெனப்படும்.

தொம்பதம்— தூல், சூக்கும, காரணசரீரங்கள் ஜீவன், சாட்சி, யெனவைந்தாம். தத்பதம்—விராட்டு, இரணியகர்ப்பன், மாயை, அவ்யாக்ருதன் ஈஸ்வரன், பிரமா, வெனவைந்தாம்.

அசிபதம்—சுத்தம், சூன்னியம், சுபாவம், ஒழிவு, அநித மன்னவைந்தாம்.

அதிபதம்—சத்து, சித்து, ஆனந்தம், பரப்பிரமம், சர்வ சாக்ஷி, யெனவைந்தாம். நிசபதம்—எதார்த்தம், ரகசியம், அறுதி, ஒடுக்கம், மோனம் யெனவைந்தாம்.

### அங்காங்க பஞ்சக உபக்கிரமமாவது.

பிராச்சித்தவானிடத்தில் சுத்தனென்னு நாமமுண்டானாப்போல யதார்த்தத்தில் சுத்தமுண்டாம். சுத்தனுக்கு அழிவற்றவனென்று நாமமுண்டானாப்போல சுத்தத்திற் சத்துண்டாம். கிளிஞ்சலில் வெள்ளியுண்டானாற்போலச சத்திலே விராட்டுண்டாம். மண்ணிலே கடமுண்டானாப்போல விராட்டிலே தூலசரீரமுண்டாம. சொல்லில்லாதவிடத்திற் பொருளில்லாததுபோல ஆகாசத்தில் சூன்னியமுண்டாம். கேவலத்தில் அறிவு செனித்தாபபோல சூன்னியத்திற் சித்துண்டாம். அறிவிலே காரணஞ்செனித்தாப்போல சித்திலே இரணியகெர்ப்பமுண்டாம். சூக்குமையிலே பைசந்தி செனித்தாப்போல இரணியகெர்ப்பத்திலே சூட்'மசரீரமுண்டாம். அறுதி சொல்லுடையவனுக்குச சுபாவமென்னு நாமமுண்டானாபபோல அறுதியிற் சுபாவமுண்டாச்சுது. நிமலசித்தத்தில் சுகமுண்டானாப்போல சுபாவத்தில் ஆனந்தமுண்டாம். சுகசித்தத்தில் சுதந்தரபுத்தி செனித்தாப்போல ஆனந்தாதீதத்தில் மாயையுண்டாம். தாப்பினிடத்தில் மரங்களுண்டானாபபோல மாயையில் வித்தையுண்டாச்சுது. அசைவற்றவிடத்திற் றொழிலில்லாததுபோல வொடுக்கத்திலொழிவுவுண்டாச்சுது. ஒழிவுவீந்தவனுக்கு சுழுத்தியைப்போல பரவசனென்னு நாமமுண்டானாப்போல ஒழிவில் பரப்பிரமமுண்டாச்சுது. ஆகாசநிர்மல கண்ணாடியில் பிரதிவிம்பிச்சாப்போல பரப்பிரமத்தில் ஈஸ்வரனுண்டானான். சுதந்தரவானுக்கு அந்த பந்த சத்திபோனவுடனே அவன் சுதந்

தாவானென்று பெயருண்டானாற்போல ஈசுவரனிடத்திலே சீவனுண்டாம். ரகசியம் அதீதமென்னும வாக்கியமுண்டானாற்போல மோனத்தில் அதீதசாட்சியுண்டாச்சுது. பர்வதவுச்சிவாசிக்கு சர்வதரிசனமென்று பெயருண்டானதுபோல சர்வசாட்சியிடத்தில் ஈசுரசாட்சியுண்டாச்சுது. மடாகாசத்திற் கடாகாசமுண்டானாற்போல ஈசுரசாட்சியில் சீவசாட்சியுண்டாச்சுது. இதுவே உபக்கிரமமென்க.

**பஞ்சபத மகாவாக்கியக் கட்டளை.**

தூலசரீரம், சூட்சுமசரீரம், காரணசரீரம், சீவன், சாட்சி 5, விராட்டு, இரணியகெற்பம, அந்தர்யாமி, ஈசுரன, பிரமம் 5, சத்து, சித்து, ஆனந்தம், பரப்பிரமம், சர்வசாட்சி 5, சுத்தம, சூன்னியம், சுபாவம், ஒழிவு, அதீதம 5, இதார்த்தம், ரகசியம், அறிநி, ஒடுக்கம், மோனம் 5.

சமசத்தியுடனேகூடி விசுவனென்று பெயராச்சுது; தூலசரீரம். விகுர்சத்தியுடனேகூடி தைசதனென்று பெயராச்சுது, சூட்சுமசரீரம். தமோ அவித்தையிலேகூடி பிராஞனென்று பெயராச்சுது, காரணசரீரம். ரசோ அவித்தையாசத்தியில் பிரதிவிம்பிச்சு சீவனாச்சுது. சுத்த அவித்தை சத்தியுடனேகூடி கூட்டுதரென்று பெயராச்சுது, சாட்சி. விராட்டு ரூபியுடனேகூடி வைசுவானரனென்று பெயராச்சுது, விராட்டு. இரணியகெற்பதயுடனேகூடி சூத்திராத்மாவென்று பெயராச்சுது இரணியகெறபம். தமோமாயாசத்தியில்கூடி அந்தரியாமியென்று பெயராச்சு அந்தரியாமி மாயாசத்தியில் பிரதிவிம்பிச்சி ஈஸ்வரனென்று பெயராச்சுது ஈஸ்வரன். மூலப்பிரகிருதியுடனேகூடி பிரமமென்று பெயராச்சுது பிரமம். சத்தரூபசத்தியுடனேகூடி பரனென்று பெயராசசுது சத்து. சித்ரூபியுடனேகூடி பரிபூரணனென்கிற பெயராச்சுது சித்து. ஆனந்தரூபியுடனேகூடி பரமானந்தனென்கிற பெயராச்சுது ஆனந்தம். பராசத்தியுடனேகூடி பரப்பிரமமென்று பெயராச்சுது பரப்பிரமம். சிற்சத்தியுடனேகூடி சர்வசாட்சியென்று பெயராச்சுது சர்வசாட்சி. லயசத்தி சத்தியுடனேகூடி சுத்தமென்று பெயராச்சுது சுத்தம். அசிந்தித சத்தியுடனேகூடி

சூன்னியமென்று பெயராச்சுது சூனனியம. நிச்சயசத்தியுடனேகூடி சுபாவமென்று பெயராச்சுது சுபாவம். அஞ்சலசத்தியுடனேகூடி பாழியென்று பெயராச்சுது ஒழிவு. அதீதசத்தியுடனேகூடி அதீதமென்று பெயராச்சுது அதீதம். ஞானயெதார்த்த சத்தியுடனேகூடி யெதார்த்தமென்று பெயராச்சுது யெதார்த்தம் மோன அதிசய சத்தியுடனேகூடி ரகசியமென்று பெயராச்சுது ரகசியம். மோனநிச்சய சத்தியுடனேகூடி அறுதியென்று பெயராச்சுது அறுதி. மோன ஞானசத்தியுடனேகூடி யொடுக்கமென்று பெயராச்சுது ஒடுக்கம். மோனசத்தியுடனேகூடி மோனமென்று பெயராச்சுது மோனம்.

## ஐக்கியசமாதியாவது.

தூலசரீரத்தை விராட்டிலொடுக்கி, விராட்டை சத்திலொடுக்கி, சத்தை சுத்தத்திலொடுக்கி, சுத்தத்தை யதார்த்தத்திலொடுக்கி, சூட்சுமசரீரத்தை இரணியகர்பத்திலொடுக்கி, இரணியகர்பத்தை சித்திலொடுக்கி, சித்தை சூன்னியத்திலேயொடுக்கி, சூன்னியத்தை ரகசியத்திலேயொடுக்கி, காரண சரீரத்தை மாயையிலொடுக்கி, மாயையை ஆனந்தத்திலொடுக்கி, ஆனந்தத்தை சுபாவத்திலொடுக்கி, சுபாவத்தை அறுதியிலொடுக்கி, சீவனை ஈசுரனிடத்திலே யொடுக்கி, ஈசுரனைப் பரப்பிரமத்திலே யொடுக்கி, பரப்பிரமத்தை யொழிவிலொடுக்கி, யொழிவை யொடுக்கத்திலே யொடுக்கி, சாட்சியை பிரமத்திலே யொடுக்கி, பிரமத்தை சர்வசாட்சியிலே யொடுக்கி, சர்வசாட்சியை அதீதத்திலே யொடுக்கி, அதீதத்தை மோனத்திலேயொடுக்கி, இப்படியெல்லா மொடுங்கினால ஒடுங்காமலிருந்தது நிசபதமாம்.

## மெய் - ஆத்மா, பொய் - அநாத்மா, இலக்கணங்கள்.

மெய்யாவது தத்துவம், தத்துவமாவது - சத்து சித்து ஆனந்தமென்னு மிலக்கணமே வடிவாயுள்ள யெங்ஙனு நிறைந்துள்ள ஆத்மஸ்வரூபமாம். தத்துவம், மெய், உண்மை ஒருபொருட்கிளவி. பொய்யாவது—நாமரூபங்களான பஞ்சபூத பௌதிகங்களாகிய அருவம் உருவம் அருவாரூவ

மெனப் பகுத்துச் சொல்லக்கூடாத, ஆச்சரியவடிவமென்னும் மாயையே, பொய்யென்பதாம். மாயை, பொய், கற்பனை, மித்தையென்பன ஒருபொருட்கிளவி. இது என்னுது, இத்தேகம் நான், இச்சகம் சத்தியமென்னு மபிமானமுடையவரே அந்த மாயையையுடையவராம். மாயையுருவத்தைப் பிதமென்று பார்த்தவரில்லையாம். மாயை மித்தையாதலின் அதன்காரியங்களு மித்தையேயாம். மாயை பிரமத்தின் வேறெனின் வஸ்துவிரண்டாமல்லவா? மாயையும் பிரமமுமொன்றெனின் வஸ்துவும் பொய்யாமல்லவா? பிரமத்திற்கும் பிரபஞ்சத்திற்கு மத்தியில் அவாந்தரமாகத் தோன்றுகின்ற அந்த மாயை தனியே ஒருமுதலாகி பிரமத்திற்கு வேறுபட்டிராது, அதனல் வஸ்து இரண்டாகமாட்டாதென் றறிகவென்பதாம். சத்தி, சத்தனைத்தவிர வேறில்லையாம். அதெப்படியெனில்? இந்திரசாலசத்தியானது, அதனைக்கா[illegible] சாலக்காரனைவிட, வொருவஸ்துவென வேறின்மையானும், அச்சத்தியில்லாதவிடத்தும் சத்தனிருக்கையானும், அச்சத்தினும் சத்தியும் எங்ஙனமொன்றும், அங்ஙனமொன்றுக[illegible]ல் அச்சத்தியைப்போல அச்சத்தன் சத்தாகானென்கவென்பதாம். புல்முதலியனவாகிய சடவஸ்துக்களனைத்தும் அத்தற்குரிய காலத்திற் புஷ்பித்துக் காய்ப்பனவெல்லாம் அவ்வப்பொருள்களி[illegible]ன் சிற்சத்தி செல்லாதிருக்குமாயின் தொன்றுதொட்டு வருகிற தாவரசங்கமமாகிய உயிர்களனைத்திற்கும் குணங்கள் மாறுபடும், கருப்பையிலிருக்கும்முட்டையிலுள்ள பக்ஷிகள் அனந்தவர்ணமுடையதாகும் விசித்திரம், அருமையான சிற்சத்தியில்லாவிடில் அரசனில்லாதபட்டணம்போலெல்லாமாறுபடும். சூரியக்கிரணமே பகிர்முகத்தில் மித்தையான சலமாகவும், அந்தர்முகத்தில் உண்மையான கானலாகவும், தோற்றுவனபோல,பிரமப்பிரகாசமே பகிர்முகத்தில் மித்தையான மாயாசத்தியாகவும், அந்தர்முகத்தில் உண்மையான சிற்சத்தியாகவும் தோன்றிய இச்சத்தியே, யனைத்திற்குமுள்ளீடாயிருந்து நடாத்துதலின், இஃதின் தன்மையை யதன் மேல்வைத்துக் கூறினதேயன்றி அதற்கின்றென்றதென்க.

கற்பனையின் மூலந்தெரிந்தவன் அதனிடத்தில் மயங்கா

## சுத்திரமான அமெரிக்கன்

## கெடியாரங்கள்.

குறைந்த விலை ரூ. **3—0—0.**

இப்படத்தில் காணும் கெடியாரத்தை அமெரிக்காவிலிருந்து தருவித்து இருக்கிறோம். பார்வைக்கு வெகு அழகுடையதும், தலைச்சாவி உள்ளதும், நடுத்தர அளவானதுமாகயிருக்கும். இக்கெடியாரத்தை வாங்குகிறவர்களுக்கு ஒரு அழகான பவுண்டன் பேனா ஒரு ரூபா விலையுள்ளது. இனாமாய் கொடுக்கப்படும். சொற்ப விலையில் நெடுநாளைக்கு உழைக்கக்கூடிய கெடியாரம் இது ஒன்றே. 5-வருஷம் உத்திரவாதம் பெற்றது.

விலை கெடியாரம் 1-க்கு இனாம் உடன் ரூ. **3-0-0.**
தபாற் செலவு **4-0-0.**

**வி. எ. எஸ். பாணி,**
நெ. 3, இருளப்பன் தெரு,
மதுரை